# SAY NO TO AMMONIA

ரெவ்லான் கலர் ஸில்க்குக்கு மாறுங்கள்,

இது அமோனியா-ஃப்ரீ பர்மனென்ட் ஹேர்கலர் ஆகும்.

உலகெங்கும் லட்சோபலட்சம் பெண்கள் அமோனியாவை வெறுத்து ஒதுக்கி விட்டார்கள். ஏனெனில் இது துர்நாற்றத்தை வெளிப்படுத்துகிறது. எரிச்சல் உணர்வை ஏற்படுத்துகிறது. இயற்கை மென்மையை குறைக்கிறது. கூந்தல் ரோமத்தை திரிதிரியாக உடைத்து கூந்தல் உதிர்வை உண்டாக்குகிறது!

ரெவ்லான் அளிக்கும் கலர்ஸில்க் **அமோனியா-ஃப்ரீ பர்மனென்ட் ஹேர்கலர்** ஆகும். இது பயன்படுத்த முற்றிலும் பாதுகாப்பானது. இது உங்கள் கூந்தலுக்கு இயற்கை நிறத்தை அளித்து, 100% வெள்ளைநரையை நீக்கி முழுமையான இயற்கை நிறத்தை அளிக்கிறது. அழகிய, அலை அலையாய் புரளும் இயற்கை தோற்றம் கொண்ட கூந்தல் வேண்டுமா? அமோனியா ஃப்ரீக்கு மாறுங்கள்!

**கலர்ஸில்க் புரட்சியில் சேருங்கள்.**




மாடல், ரெவ்லான் கலர்ஸில்க் பிரவுன் பிளாக் (2N).
அழகில் மிளிர்கிறார். கண்கவரும் 10 சர்வதேச ரேஞ்ச்சில் கலரில் கிடைக்கிறது.



# ஒரு மணமகள் டைரி!

டெல்லியைச் சேர்ந்த நிஷா ஷர்மா, வரதட்சணைக் கொடுமையை எதிர்த்து, அதிரடியாய்த் திருமணத்தை நிறுத்தி பரபரப்பூட்டிய சூடு ஆறுவதற்குள் சென்னையிலும் அதேபோல் ஒரு சம்பவம் நடந்துள்ளது. மே.மாம்பலத்தைச் சேர்ந்த வித்யா, மாப்பிள்ளை அழைப்பு முடிந்து, மறுநாள் காலை திருமணம் என்ற சூழ்நிலையில், நள்ளிரவில் இந்தத் திருமணம் வேண்டாம் என்று துணிச்சலாய் முடிவு செய்து, பிள்ளை வீட்டாரின் வரதட்சணைக் கொடுமை குறித்து போலீசில் புகார் கொடுத்து, திருமணத்தை நிறுத்தி விட்டார். இதோ மனம் விட்டுப் பேசும் வித்யாவின் அந்த சில நாட்கள் டைரி:

**பிப்ரவரி 6, 2003:** சிருங்கேரி மடத்தில் பதிவு செய்து வைத்த என்னைப் பற்றிய தகவல்கள் ஓர் ஆன்மிக இதழின் 'மேட்ரிமோனியல்' பகுதியில் வெளி வந்ததைப் பார்த்துவிட்டு, என்னுடைய ஜாதகத்தைக் கேட்டு, மே. மாம்பலத்தில், நாங்கள் வசிக்கும் மகாதேவன் தெருவுக்கு நாலு தெரு தள்ளி இருக்கும் போஸ்டல் காலனி முதல் தெருவில் வசிக்கும் பாலாஜி குடும்பத்தினர் எங்களை அணுகினார்கள். பாலாஜிக்கு ஒரு பிரபல கம்பெனியில் உத்தியோகம். எங்களைப் போலவே மத்திய தரக் குடும்பம். எனவே மேற்கொண்டு தொடரலாம் என்று எங்கள் குடும்பத்தில் முடிவு செய்தோம்.

**பிப்ரவரி 12:** இரு தரப்பினரும் ஜாதகம் பார்த்து பொருத்தமாக இருந்ததில் திருப்தியடையவே, உடனடியாக நிச்சயதார்த்தம் என்று முடிவு செய்ததால், இன்று மாலை நிச்சயதார்த்தம் நடந்தது. குடும்பம் முழுக்க சந்தோஷமாய் இருந்தது. விமானப் படையில் பணியாற்றும் என் அண்ணன் லீவு எடுத்துக் கொண்டு வந்திருக்கிறான். இன்று என் வாழ்க்கையில் முக்கியமானதொரு நாள். நல்ல குடும்பம், பெரிதாக அவ்வளவு வரதட்சணை, இவ்வளவு சீர்வரிசை என்றுப் பட்டியல் போடாதது பெரிய ஆறுதல். பத்துப் பவுன் நகை, ஒரு கிலோவுக்கு வெள்ளிப் பாத்திரம், மற்ற ஐட்டங்கள் சீர்வரிசையாய்க் கேட்டதும் தப்பாய்ப் படவில்லை; கொடுக்கவும் என் பெற்றோர் தயங்கவில்லை. காரணம் என் திருமணத்துக்கு இன்னின்ன சீர்வரிசை செய்வது என்று, எங்கள் சக்திக்கு ஏற்ப என் பெற்

இவ்வார பொருளடக்கம்
வித்யாவுக்காக
வழிவிட்டிருக்கிறது...



• பெற்றோருடன் வித்யா...

ஏற்படுத்தினாங்க. குத்திக் காட்டிப் பேசினாங்க. வெள்ளி விளக்கின் உயரம் ஒரு பிரச்னை ஆகிப் போச்சு. இத்தனையையும் எங்கள் தரப்பில் சகித்துக் கொண்டார்கள் என்றால் இது போன்ற சின்ன விஷயங்களால் கல்யாணத்தில் பெரிய பிரச்னை ஏதும் வந்து விடக் கூடாது என்ற எண்ணம்தான்!

றோர் முடிவு செய்து வைத்திருந்தார்கள்.

**மே 20:** திருமண ஏற்பாடெல்லாம் சுறுசுறுப்பாக நடந்து கொண்டிருக்கிறது. பத்திரிகை அனுப்பிக் கொண்டிருக்கிறோம். 'ஏற்கெனவே ஒப்புக் கொண்ட மூவாயிரம் ரூபாய் போதாது; மாப்பிள்ளையின் டிரஸ் செலவுக்கு ஐந்தாயிரம் ரூபாய் தரணும்' என்றார்கள். 'போனால் போகட்டும் இரண்டாயிரம்தானே' என்று நாங்களும் கொடுத்தோம்.

**மே 26:** என் திருமண விஷயம் தடம் புரண்டு போகிறதோ என்று என் மனசு நினைத்தது. இப்படி திடீர் திடீரென்று அது வேணும், இது வேணும்னு கேட்கிறார்களே என்று தோன்றியது. மாப்பிள்ளைக்கு வாட்ச் வாங்கணும் என்று சொன்னபோது எங்கள் உறவினர் உடன் சென்றார். நாங்கள் போட்ட பட்ஜெட்டைவிட வாட்ச் விலை சற்றுக் கூடுதலாகிவிட, மணமகன் தன் பர்ஸிலிருந்து முப்பது ரூபாய் கொடுக்கும்படி ஆனது. இதை, எவ்வளவு பெரிய பிரச்னையாக்கி விட்டார்கள் அந்த வீட்டில் என்று மனசு கஷ்டப்பட்டது. ஷூ வாங்கப் போனபோதும் ஆயிரத்து இருநூறு ரூபாய் ஷூதான் வேணும் என்று அடம் பிடித்ததை மறக்க முடியுமா என்ன! டிரஸ் வாங்க ஐயாயிரம் தந்தது போதாதென்று, தையல் கூலியாய் ரூபாய் இரண்டாயிரத்து இருநூறு கறாராகப் பேசி வாங்கினபோது, 'ஏன் இந்தக் குடும்பத்தினர் இப்படிக் கீழ்த்தரமாக நடந்துக்கறாங்க?' என்று மனம் புழுங் கினேன்.

**மே 30:** அவர்கள் சொன்ன கல்யாண மண்டபம், அவர்கள் சொன்ன சமையல்காரர் என்று அவர்கள் விருப்பப்படியே செய்தாலும், அவ்வப்போது பிரச்னை

**ஜூன் 3:** நாங்கள் காலையில் கல்யாண மண்டபத்துக்கு வந்து விட்டோம். பத்தரை மணிக்கு வந்து விடுவதாகச் சொன்ன மாப்பிள்ளை வீட்டார், பன்னிரண்டாகியும் வந்து சேரவில்லை. இரண்டு மணிக்கு ஒரு தடவை, எங்கள் சார்பில் பெரியவர்கள் அவர்கள் வீட்டுக்குப் போய் அழைத்து விட்டு வந்தார்கள். ஒரு வழியாய் மாலை நாலரை மணிக்கு மாப்பிள்ளை வீட்டார் வந்து இறங்கினார்கள்.

**இரவு மணி 7.30:** ஜானவாசத்துக்கு ஏற்பாடு நடந்து கொண்டிருந்தபோது, மாப்பிள்ளை வீட்டார் ஒரு லிஸ்ட் கொடுத்தார்கள். பத்து லிட்டர் குக்கர் என்று ஆரம்பிக்கும் நீளமான பட்டியல். ஜானவாசம் முடியட்டும், ஏற்பாடு செய்கிறோம் என்று எங்கள் வீட்டில் சொல்லி விட்டார்கள்.

**இரவு 9.30:** பக்கத்துப் பிள்ளையார் கோவிலில் வைத்து, ஜானவாசம் முடிந்தது. கல்யாண மண்டபத்துக்கு வந்த கையோடு, 'லிஸ்ட் கொடுத்தோமே! என்ன ஆச்சு?' என்று அதிகாரமாய்க் கேட்டார்கள். "ஆள் போயிருக்கிறது; எல்லாம் வந்துவிடும்" என்று பதில் சொன்னார் அப்பா. அலைந்து திரிந்து வாங்கியும், சில ஐட்டங்கள் உடனடியாய்க் கிடைக்கவில்லை. அது ஒரு பிரச்னையானது. நாங்கள் வாங்கி வைத்திருந்த சொம்பு சின்னது; ஏன் பெரிசாய் வாங்கவில்லை என்று கேட்டார்கள்.

திருமண வாழ்க்கை என்பது விட்டுக் கொடுத்து அட்ஜெஸ்ட் பண்ணிக் கொண்டு போக வேண்டிய விஷயம்தான். ஆனால் அதற்கும் ஒரு லிமிட் இருக்க வேண்டாமா? பேச்சோடு பேச்சாகப் பையனின் அம்மா, "கல்யாணம் ஆகி எங்க வீட்டுக்குத்தானே வரப்போறா! அப்ப நான் பார்த்துக்கறேன்"னு ஒரு வார்த்தை சொன்னாங்க. பெற்றோர் பேசும் பேச்சுக்கு மறுப்பு ஏதும்

சொல்லாவிட்டாலும் பரவாயில்லை, அவர்களுடன் சேர்ந்து கொண்டு, "கேட்டதெல்லாம் வரலைன்னா தாலிகட்ட மாட்டேன்" என்று பையன் சொன்னதுதான் கிளைமாக்ஸ்!

"நீங்க கல்யாணம் பண்ண வந்திருக்கீங்களா? வியாபாரம் பேச வந்திருக்கீங்களா?" என்று என் அண்ணன் கோபமாய்க் கேட்டுவிட, அவர்கள் முறைத்துக் கொண்டு போக, எங்கள் தரப்பில் அப்புறம் போய் மன்னிப்புக் கேட்க, அவர்கள் எங்களை உதாசினப்படுத்த... எல்லாமாய்ச் சேர்த்து என்னைக் கோபமூட்டியது.

**மணி 11.30:** எங்கள் தரப்பு முக்கியமானவர்களை அழைத்து "எனக்கு இந்தக் கல்யாணம் வேண்டாம், நாளைக்குக் காலையில் போலீஸில் புகார் கொடுக்கப் போறேன்!" என்றேன். ஒரு மணி நேரம் சீரியஸான டிஸ்கஷன்...கடைசியில் என் முடிவை எல்லோரும் ஏற்றுக் கொண்டார்கள்.

**மணி 2:30:** நான் மண்டபத்திலிருந்து புறப்பட்டு, ஓர் உறவினர் வீட்டுக்குப் போய் விட்டேன். பாக்கி இரவு தூக்கமில்லாமலேயே கழிந்தது.

**ஜூன் 4, காலை 6.00:** எல்லாம் நல்ல படியாய் நடந்திருந்தால், காலை பத்துமணிக்கு முகூர்த்தம். ஆனால், இங்கே தான் கதை மாறிவிட்டதே! திட்டமிட்டபடி புறப்பட்டு, அசோக் நகர் அனைத்து மகளிர் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றோம். அங்கிருந்த ரைட்டரிடம் புகார் கொடுத்தோம். நிறைய விவரம் கேட்டு விசாரணை நடத்தினார்கள். எல்லாவற்றுக்கும் தயங்காமல் பதில் சொன்னேன்.

**காலை 8.00:** காவல் நிலையத்திலிருந்து புறப்பட்ட போலீஸ், மண்டபத்துக்குப் போய் பாலாஜி மற்றும் அவரது பெற்றோரைக் கைது செய்தது.

திருமணம் ஆன்ட்டி கிளைமேக்ஸில் முடிய, காலையில் சமைத்த டிபனை அனாதை இல்லங்களுக்கும், அசோக் நகர் போலீஸ் ஸ்டேஷனுக்கும் அனுப்பி வைத்தோம். இந்த விஷயத்தில் மீடியாவின் ரோல் முக்கியமானது. ஆனால், அவர்கள் எல்லாம் என்னைப் புரட்சிப் பெண் போல சித்திரிப்பது எனக்கு உடன்பாடில்லை. அந்தச் சூழ்நிலையில், எந்தப் பெண் இருந்திருந்தாலும் இதையேதான் செய்திருப்பாள்.

கல்யாணத்துக்காக, நான் பார்த்து வந்த வேலையைக் கூட விட்டுவிட்டேன். ஆனால் நான் எடுத்த முடிவில் எனக்கு வருத்தமில்லை. ஆனாலும் இந்தக் காயம் ஆற கொஞ்ச நாள் ஆகும். அப்புறம் என் எதிர்காலம் பற்றி யோசிப்பேன்.

தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**
படங்கள்: **ஸ்ரீஹரி**




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

மூன்று ஜோடிகள்! அதுவும் அக்மார்க் காதல் ஜோடிகள். சினிமா உலகக் காதலென்றால் பட்டென்று பத்திரிகைகளில் கசிந்து விடுகிறது. அதுவே சின்னத் திரைக் காதலென்றால் திருமணத்தன்று தான் வெளியே தெரிகிறது. எப்படி இத்தனை கமுக்கமாக காதல் பண்ணுகிறீர்கள் என்று, மிகுந்த சமுதாயப் பிரக்ஞையோடு நாம் கேட்டு வைக்க, ஜோடிகளின் முகங்களில் ஒரே குறுகுறுப்பு. "இங்கே ராகவும் – ப்ரீதாவும்தான் வயசுல சின்னவங்க... அதனாலே அவங்கதான் ஆரம்பிக்கணும்" என்று சேத்தனும் தேவதர்ஷினியும் அவர்களை மாட்டிவிட, "எஸ்.எஸ்." என்று ஷ்யாம் கணேஷ் – சிந்து ஜோடி வழி மொழிந்தது. அப்புறமென்ன! சென்னை, கன்னிமாரா ஹோட்டலின் ரெய்ன் ட்ரீ திறந்தவெளி ரெஸ்டாரெண்ட்டில் கலகலப்பான காதல் கதைகள் கட்டவிழ்த்து விடப்பட... அங்கே நூறு வருடங்களுக்கும் மேலாக நித்திரையிலிருந்த தூங்கு மூஞ்சி மரங்கள் கூட அன்று விழித்துக் கொண்டு ஆர்வமாய்க் கேட்டன...

ராகவ்: சினிமா கிளாமரான மீடியம். ட்ரீம்கேர்ள், ட்ரீம் பாய், இதெல்லாம் சினிமாலே மட்டும்தான். சீரியல்லே வர்றவங்களை நம்ம வீட்டுப் பையன், நம்ம வீட்டுப் பொண்ணு மாதிரி பார்க்கறாங்க. நம்மளைப் பார்த்துக்கிட்டுத்தான் சாப்பிடுறாங்க. நம்மளை அவங்க ஃபேமிலியிலே ஒருத்தரா பார்க்கறாங்க. நட்சத்திரமா இல்லே. இதனாலேதான் சின்னத்திரை காதல் பத்தின கிசுகிசுக்கள் கூட பத்திரிகைகளில் வர்றதில்லே. வந்தாலும் எடுபடுறதில்லே...

சேத்தன்: இத்தனை சின்ன வயசுலே ஜீனியஸ் மாதிரி பேசுறே! ஆனால் காதலை ரகசியமா வெச்சிருக்கிறதுலதான் சுவாரஸ்யமே இருக்கு தெரியுமா? ரகசியத்தை



• சேத்தன் - தேவதர்ஷினி



• ஷ்யாம் - சிந்து



• ப்ரீதா - ராகவ்

**சென்னை, கன்னிமாரா ஹோட்டலின் 'ரெய்ன் ட்ரீ' திறந்தவெளி ரெஸ்டாரெண்ட்டில் கலகலப்பான காதல் கதைகள் கட்டவிழ்த்து விடப்பட...**

உடைச்சு உன்னைத்தான் மனசுலே வெச்சிருக்கேன்னு சொல்லும்போது சம்பந்தப்பட்ட பொண்ணு ஒத்துக்கிட்டா மனசுக்குச் சிறகு முளைச்சுடும்.

**தேவதர்ஷினி:** அவ... ஸாரி



# காத்தா, கருப்பா, காதலா...?

சொல்லிட்டா சிறகு ஒடிஞ்ச மாதிரி ஆயிடும்... இதுக்குக் காதலைச் சொல்லாமல் இருந்துடறதே நல்லது இல்லையா...?

**ஷ்யாம்:** இது உங்க இரண்டு பேரோட அனுபவம் மாதிரி தெரியுதே...? காதலைச் சொல்லிக்காமல் இரண்டு பேரும் கண்ணாமூச்சி விளையாடினீங்களா...?

**சேத்தன்:** ரொம்ப கரெக்டா கண்டு பிடிச்சிங்க... கல்யாணத்துக்கு முன்னாடி, உன்னைக் காதலிக்கிறேன்னு நானோ, இல்லை அவளோ பரஸ்பரம் சொல்லிக்கலே. இதுக்குக் காரணம் பயம் இல்லை. ஆழமா காதலிக்கிறோம் – பரஸ்பரம் புரிஞ்சுப் போச்சு... அப்புறம் நேரா நிச்சயதார்த்தம் தான்.

**ப்ரீதா:** அதுக்கு அப்புறம்தான் பாதுகாப்பு உணர்வோட ஐ லவ் யூ சொன்னீங்களாக்கும்? *(எல்லாரும்... கூட்டணி அமைத்துச் சிரிக்கிறார்கள்.)*

**ராகவ்:** என்ன சார் இப்படிப் பட்டுன்னு க்ளைமாக்ஸுக்கு வந்துட்டீங்க... நீங்களும் தேவதர்ஷினி மேடமும் முதல் முதல்லே எங்கே சந்திச்சுக்கிட்டீங்க?

**சேத்தன்:** பொள்ளாச்சியிலே 'மர்மதேசம்', 'விடாது கருப்பு' சீரியல் ஷூட்டிங். தேவதர்ஷினியோட அமைதியான அழகு, அவங்க கனிவா பேசுற விதம், அவங்க பணிவு, இதெல்லாம் ரொம்பப் பிடிச்சது. ஆனால் காட்டிக்க முடியாதே. முதல் நாள் படப்பிடிப்பில் உங்க பேர் என்னன்னு கேட்டதோடு சரி... அதுக்கப்புறம் அவங்க பக்கமே திரும்பாமல் தனியா வாக்மேன் கேட்டுக்கிட்டு இருப்பேன். ஒருமுறை பக்கத்துலே வந்தாங்க... ஆஹா... தேவதையே


• கடக்கட பஜ்ஜி... கன்னிமாரா ஸ்பெஷல்!

நம்மைத் தேடி வருதுன்னு நினைச்சேன். ஆனால் அலட்டிக்காமல் பாட்டு கேட்டுக்கிட்டு இருந்தேன்... பக்கத்திலே வந்து 'ஷ்யாம் தெரியுமா?''ன்னு கேட்டாங்க... நான், காதுலே விழுந்த மாதிரி காட்டிக்கலே... மறுபடி மறுபடி 'ஷ்யாம் தெரியுமா?'ன்னு கத்திக் கேட்டாங்க... நான் வாக்மேனை காதுலேர்ந்து எடுத்துட்டு, 'ஓ! தெரியுமேன்னு' சொல்லிட்டு மறுபடி பாட்டுக் கேட்க ஆரம்பிச்சுட்டேன்... கோபத்தோட திரும்பிப் போயிட்டாங்க... அந்தக் கோபத்துலே தெரிஞ்ச அழகு... என்னோட பந்தாவையெல்லாம் பொடிப்பொடியாக ஆக்கிட்டுது... அன்றைக்கு 'விடாது கருப்பு'லே ஆரம்பிச்ச காதல்தான் கல்யாணத்துலே கொண்டு வந்து விட்டுடுச்சு.

**சித்து:** கல்யாணத்துக்கு அப்புறம் தேவதர்ஷினி எப்படித் தெரியறாங்க. காத்தா, கருப்பா? *(மறுபடியும் சிரிப்பலை)*

**சேத்தன்:** அய்யோ! இப்படி ஏடா கூடமாக் கேக்கறீங்களே! என்ன! பேச்சிலரா இருந்தப்போ இருந்த சுதந்திரம் இப்போ இல்லை... அவங்க காத்தும் இல்லே கருப்பும் இல்லே... புடம் போட்ட நெருப்பு! *(எல்லோரும் ஓ...ஹோ...என்று ஓ போடுகிறார்கள்.)*

**ஷ்யாம்:** ப்ரீதா, நீங்க சொல்லுங்க... ராகவ்வை முதல் முதல்லே எங்க பார்த்தீங்க?

**ப்ரீதா:** நிலா டீ.வி. தொகுப்பாளர்கள் எல்லாம் சேர்ந்து ஒரு நிகழ்ச்சியிலே வர்ற மாதிரி எங்க வீட்டுத் தோட்டத்துலே ஷூட் பண்ணினாங்க. அதுக்காக ராகவ் எங்க வீட்டுக்கு முதல் முதல்லே வந்தார். 'இங்கே தான் ஷூட்டிங்கா?'ன்னு கேட்டார். அங்கே நிறைய பெண்கள் வந்திருந்தாங்க. ஆனால் ராகவ் ரொம்ப இயல்பா இருந்தார். அப்புறம் நானும் அவரும் சேர்ந்து 'மிஸ்டர் & மிஸஸ்'ன்னு ஒரு சினிமா கவுண்ட்டவுன் நிகழ்ச்சி பண்ணினோம். அப்போதான் பேசிக்கவே முடிஞ்சது. எனக்கு நடிப்பு, பாட்டு, டான்ஸ் பிடிக்கும். அவருக்கும் என்னை மாதிரி இது எல்லாத்துலேயுமே ஆர்வம். ஏதாவது ஒரு விஷயத்துலே ஒழுங்கா கவனத்தைச் செலுத்தினா சாதிக்கலாமேன்னு அவர் கேட்கலை... அதுதான் ரொம்ப பிடிச்சது.

**தேவதர்ஷினி:** அப்புறம் எப்போதான் காதலைப் பகிர்ந்துகிட்டீங்க?

**ராகவ்:** நிலா டீ.வி. நிகழ்ச்சியைப் பார்த்துட்டு, 'சுயம்வரா டாட்காம்'ன்னு, ஒரு கல்யாண வெப் சைட் விளம்பரத்துக்கு எங்க இரண்டு பேரையும் மாடல் பண்ண கூப்பிட்டாங்க. எங்க காதல்லேயே பெரிய திருப்பத்தை உண்டு பண்ணின நிகழ்ச்சி இது.

**ஷ்யாம்:** என்ன திருப்பம்னு விளக்கமா சொன்னாத்தானே தெரியும்?

**ராகவ்:** ஆரம்பத்துலேர்ந்து இரண்டு பேரும் இங்கிலீஷ்லேதான் பேசிட்டு இருப்போம். காதல்னு உறுதியான பிறகு, தமிழ்லே பேச ஆரம்பிச்சோம்.

**ப்ரீதா:** இப்போ உங்க காதல் கதையை ஆரம்பிங்க...

**ஷ்யாம்:** ராஜீவ்மேனன் சார் டைரக்ஷன்லே ரெட் லேபிள் டீ விளம்பரப் படத்துலே நடிக்க கேரளா போயிருந்தேன். அதே விளம்பரத்துக்கு ஃபீமேல் மாடலா சித்து வந்தாங்க... கூடவே பாட்டி! விளம்பர ஷூட்டிங் முடிஞ்சு வீட்டுக்கு வந்தாச்சு... ஆறுமாசம் கழிச்சு எனக்கு வீட்லே பொண்ணு பார்க்க ஆரம்பிச்சாங்க. அந்தப் பொறுப்பை என்னோட தங்கை எடுத்துக்கிட்டாங்க... எனக்கு மீடியாலே இருக்குற பொண்ணு தான் சரின்னு

தோணிட்டேயிருந்தது. ஒரு நாள் நானும் தங்கையும், ஏஷியாநெட்லே ஒரு சீரியல் பார்த்துக்கிட்டு இருந்தோம். அதுலே சிந்துதான் ஹீரோயின்... 'இந்தப் பொண்ணோட ஜாதகம் கூட வந்திருக்கு... ஓகேவா பாரு'ன்னு கேட்டாங்க... எனக்குச் சின்னதா ஆச்சர்யம்.

எனக்கு இந்தப் பெண்ணைத் தெரியும்ன்னு சொன்னேன். எங்க வீட்லே ஜாதகத்துக்கு நிறையவே முக்கியத்துவம் தருவாங்க... எதிர்பாராமல் ஜாதகம் அம்சமா பொருந்திப் போச்சு. அப்புறமென்ன... அந்த விளம்பர ஷூட்டிங்லே சிந்து கொடுத்துட்டுப் போன விசிட்டிங் கார்டைத் தேடி எடுத்துப் பேச ஆரம்பிச்சதுதான்... நிச்சயதார்த்தத்துக்கு முன்னாடியே மாசம் பத்தாயிரம் ரூபாய்க்கு செல்ஃபோன் பில் வர ஆரம் பிச்சுடுச்சு!

*ராகவ்:* அப்படி என்னதான் பேசினீங்க?

**ஷ்யாம்:** காதல்லே மௌனத்துக்கு கூட நிறைய அர்த்தம் உண்டு. நானும் சிந்துவும் நாட்டு நடப்பு, உலக நடப்பு எல்லாம் பேசிக்கிட்டு இருப்போம். அப்புறம் சொந்த விஷயத்துக்கு வருவோம். பல நிமிஷங்கள் ரெண்டு பேரும் சுவாசிக்கிறதை மட்டுமே செல்ஃபோன்லே கேட்டுக்கிட்டு இருப்போம்.

**தேவதர்ஷினி:** சிந்து, கேரளத்துலே அருவியிலே எல்லாம் குளிச்சிருப்பீங்க... இங்கே எப்படி?

**சிந்து:** இவருக்காக இப்போ ஒரு பக்கெட் தண்ணியிலே குளிக்கப் பழகி இருக்கேன். *(எல்லோரும் விழுந்து விழுந்து சிரிக்கிறார்கள்...)*

**க**ன்னிமாராவின் ஃபுட் அண்ட் பிவரெஜ் மானேஜர் பிரசாத் மேற்பார்வையில், பேரர்கள் பார்த்து பார்த்துப் அன்புடன் பரிமாற சூடாக செட்டிநாடு விருந்து அமர்க்களப்பட்டது.

"நைஸ்... வெரி நைஸ்" என்று பாராட்டிய பெண்கள், இளநீர் பாயசம், கவுனி அரிசி அல்வா போன்றவற்றின் செய்முறைக் குறிப்புகளை ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டனர்.

இதமாய்க் கசிந்த சிம்னி விளக்கொளியில், இலேசாக ரொமான்டிக் மூடுக்குத் தாவிய ஜோடிகள், காதல் மொழியைத் தொடர்ந்து பொழிய, நாம் இனி இங்கே இருக்கலாகாது என்று விரைந்து வெளியேறினோம்.

— ஸ்ரீ

அட்டை, படங்கள்: ஸ்ரீஹரி




# புதிய 1-2-3

செரேலாக் அறிமுகப்படுத்துகிறது
வளர்ச்சியின் சரியான ஸ்டேஜில் உங்கள்



மென்மையான முதல் உணவு
6 மாதம் முதல்
மென்மையான, சுவையான மற்றும்
செரிப்பதற்கு எளிதான உணவு.




McCann Healthcare/Cerelac/37/03 TM

**IMPORTANT NOTICE : MOTHER'S MILK IS BEST FOR YOUR BABY. INFANT FOOD SHALL BE INTRODUCED ONLY AFTER 4 MONTHS OF AGE.**
Infant foods should be introduced only on the advice of a health worker as to the need for its use and proper method of use. Infant food is not the sole source of nourishment for an
Pour necessary quantity of lukewarm water into a bowl or plate. Stir in recommended quantity of Cerelac until pap is smooth. Feed your baby with a clean spoon. Use prepared feed
most essential for health. Do not use fewer scoops than directed, since diluted feeding will not provide adequate nutrients needed by your infant. Do not use more scoops than
*1 level scoop = 4g approx. 4-5 feeds per day of Cerelac. Infant food should be stored in a cool and dry place in an air tight container. Cerelac has to be used within 12 months (15

# பேபி ஃபீடிங் பிளான்.

**நெஸ்லே டெவலப்மெண்டல் நியூட்ரிஷன் பிளான்***

குழந்தைக்கு சரியான உணவு முறையின் அனுபவத்தை வழங்கும் ஃபீடிங் பிளான்

**புதிய சுவைகள் & டெக்ஸ்சர்கள்**
**8 மாதம் முதல்**
பற்கள் முளைத்தல் மற்றும் சுவை முனைகள் வளர்ச்சியடைவதற்கு உதவும் விதத்தில் பழம்/காய்கறிகள் சேர்க்கப்பட்டது.
வி. தால் பாலக், வி. ஜுனி மற்றும் வி. ஆரஞ்சில் கிடைக்கிறது.

**சிறந்த சுவை, ஒன்றிணைந்த டெக்ஸ்சர்கள்**
**10 மாதம் முதல்**
புதிய தன்மை (டெக்ஸ்சர்) அளிக்கவும், மென்று உண்ணும் உணர்வை திருப்திப்படுத்தவும் பழம்/காய்கறிகள் சேர்க்கப்பட்டது.
வி. மிக்ஸ் வெஜிடபிள் மற்றும் வி. மிக்ஸ் ஃப்ரூட் சுவையில் கிடைக்கிறது.

Nestlé
CERELAC®
Infant Cereal with Milk
Wheat
Dal Palak
✓Vitamin A
✓Iron
✓Iodine
STAGE 2

Nestlé
CERELAC®
Infant Cereal with Milk
Wheat
Mixed Fruit
✓Vitamin A
✓Iron
✓Iodine
STAGE 3

பிளான்* நல்ல உணவுமுறையை வளர்க்க உதவுவதுடன், பெரியவர்களின் உணவை உண்ண அக்குழந்தையை தயார் செய்கிறது.
விரும்பும் வரை உண்பதற்கு ஸ்டேஜ் 1, 2, 3 தயாரிப்புகளை தொடர்ந்து சாப்பிடக் கொடுக்கலாம்.

**महत्वपूर्ण सूचना : माँ का दूध आपके बच्चे के लिए सर्वोत्तम है। ४ महीने के बाद ही उसे शिशु आहार देना शुरु करें।**

infant. **How to prepare Cerelac :** Wash your hands before preparing baby's feed. Use only clean utensils. Boil drinking water for 5 minutes. Leave it till lukewarm. within half an hour otherwise microbial deterioration may set in. Discard unused feed. **WARNING/CAUTION :** Careful and hygienic preparation of infant foods is directed, since concentrated feed will not provide the water needed by your infant. **Feeding instructions :** From 6 months, 5 scoops* of Cerelac in 60ml water. months for tin containers) from the date of manufacture. Cerelac comes in 9 different variants. Please refer pack for details.



# 'எல்லை' மீறிப் போனபோது...

பி.டி. உஷாக்களையும், பகதூர் பிரசாத்களையும் பார்க்க வேண்டுமானால் காலையில் அலுவலக நேரத்துக்குப் பழவந்தாங்கல் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்துவிட வேண்டும். எழும்பூர் செல்லும் மீட்டர்கேஜ் மின்சார ரயில் வண்டிக்காகக் காத்திருந்து, அதே சமயத்தில் பிராட்கேஜ் மின் ரயில் தென்பட, அதைப் பிடிக்கும் வெறியில் நடைமேடையில் ஓடுகிறார்கள். அப்படி ஓடும்போது, தாம்பரம் செல்லும் மீட்டர்கேஜ் ரயில் வருகிறதா இல்லையா என்று பார்க்காமல், கண்மூடித்தனமாகத் தாண்டி ஓடுகிறார்கள். நமக்கு திகில் பற்றிக் கொள்கிறது.

மற்ற ரயில்வே ஸ்டேஷன்களில் மீட்டர்கேஜ் நடைமேடையும், பிராட்கேஜ் நடைமேடையும் எதிரெதிரே அமைக்கப்பட்டிருக்க, பழவந்தாங்கலில் மட்டும் பிராட்கேஜ் நடைமேடை தள்ளி அமைக்கப்பட்டிருக்கிறது. "மீட்டர் கேஜ் நடைமேடையை ஒட்டியே பிராட்கேஜ் நடைமேடை போட்டிருக்க முடியும். அதற்கு ரயில்வே நிலமும் இருக்கிறது. ஸ்டேஷன் எதிரே குடியிருப்பவர்கள் அந்த நிலத்தைத் தெருவாகப் பயன்படுத்துவதால், பிராட்கேஜ் நடைமேடை தள்ளிப் போடப்பட்டுவிட்டது" என்கிறார் நங்கநல்லூர் ராமன்.



• பயிற்சியில் சிவபாலன்...






காலை வேளை 'அத்லடிக்ஸ்' ஒரு பக்கம் இருக்க, இரவில் பிராட்கேஜ் ரயில் நிலையத்திலிருந்து பழவந்தாங்கல் சுரங்கப்பாதை வரை உள்ள தெருவில் ஒரு தெருவிளக்குக் கூடக் கிடையாது. பாதாளச் சாக்கடை வேலை நடந்து, அரை குறையாகப் பள்ளத்தை மூடியிருக்கிறார்கள். சாக்கடைக் குழாய் 'மேன்ஹோல்' மேட்டில் பலர் தடுக்கிவிழ "அடராமா! இது புறநகரா, 'குப்'புற நகரா" என்று அடிபட்ட வலியுடன் பலர் புலம்பித் தள்ளுகிறார்கள்.

## படுத்துகிறது பாலாறு!

நங்கநல்லூர், ஆலந்தூர், ஆதம்பாக்கம் பகுதிகளில் நிலம் வாங்குவதிலும், அடுக்குமாடி வாங்குவதிலும் மக்களுக்கு ஆர்வம் உண்டாக்கியதில் தேன்சுவை தந்த 'பாலாறு' தண்ணீருக்கு ஒரு பங்கு உண்டு. பல்லாவரம் - ஆலந்தூர் கூட்டுக் குடிநீர் திட்டத்தின் மூலம் இந்தப் பகுதிகளுக்குப் பாலாறு படுகையிலிருந்து நீர் வினியோகிக்கப்பட்டு வந்தது. ஆனால் அதற்கும் ஆபத்து வந்துவிட்டது. சென்னையை ஒட்டி இருப்பதால் ஆலந்தூர் நகராட்சியின் ஒரு பகுதிக்குக் கிருஷ்ணா குடிநீர் சப்ளை செய்யப் போவதாக குடிநீர் வடிகால் வாரியம் சொன்னது. அதற்காக நகராட்சி அலுவலகத்திற்குப் பின்னால் பெரிய தண்ணீர்த் தொட்டியும் கட்டப்பட்டது. ஆனால் இப்போது உள்ளதும் போச்சு



* குளம் சுத்தப்படுத்தப்படுகிறது...

கதையாகி விட்டது.

கிருஷ்ணா, சென்னைக்கு 'தண்ணீர்' காட்டி, சென்னையே தாகத்தில் தவிக்கும்போது, ஆலந்தூர் நகராட்சிக்கு மட்டும் எப்படி அது வரும்? விளைவு: கிருஷ்ணாவும் கைவிட, ஒரு பகுதிக்கு வந்து கொண்டிருந்த பாலாறும் படுத்த,



* தில்லை கங்கா நகர் சுரங்கப்பாதை

# 'புறநகரா; 'குப்பநகரா?

காலைவேளைகளில் தண்ணீர்க் குடங்களுடன், ஆண்களும் பெண்களும் தெருக்களில் அலைந்து கொண்டிருக்கிறார்கள். பலர் அடுக்குமாடி வீடுகளைக் காலி செய்து விட்டு, ஊரப்பாக்கம், கூடுவாஞ்சேரி என்று போய்விட்டார்கள். எனவே இப்போது எங்கு பார்த்தாலும் 'டுலெட்' போர்டுகள். சிங்கிள் படுக்கையறை அடுக்குமாடி வீடு 1500 ரூபாய் மாத வாடகையில் கிடைக்கிறது. சென்னைக்குப் படிக்க வரும் வெளி மாநில மாணவர்கள் சென்ட்ரலிலிருந்து நேராக மூட்டை முடிச்சுடன் மடிப்பாக்கம், நங்கநல்லூர் பகுதிகளுக்கு வந்து விடுகிறார்கள். எந்தச் சிரமமும் இல்லாமல் வீடு கிடைத்து விடுகிறது.

## அடிக்கு ஓர் ஆலயம்

ஆஞ்சநேயர், ஸ்ரீராகவேந்திரர், குருவாயூரப்பன், கருமாரி அம்மன், ராஜராஜேஸ்வரி, அர்த்த நாரீஸ்வரர், விநாயகர், ஐயப்பன், லட்சுமி ஹயக்கிரீவர், வேம்புலி அம்மன் (இது மிக நீண்ட பட்டியலின் ஒரு பகுதி தான்!) என்று அனைத்துக் கடவுளர்களுக்கும் ஆலயம் உள்ள ஒரே இடம் நங்கநல்லூராகத்தான் இருக்க முடியும். ஓய்வு பெறும் நிலையிலிருப்பவர்கள் ஓர் அடுக்குமாடி ஃபிளாட் வாங்கிப் போட்டுவிட்டு, பின்னர் 'கிருஷ்ணா, ராமா' என்று கைகூப்பியவாறு தெருக்களை வலம் வந்து கொண்டிருப்பதை சகஜமாகப் பார்க்கலாம். இந்த ஆலயங்களில் 'ஸ்டார் ஸ்டேடஸ்' 32 அடி ஆஞ்சநேயருக்குத்தான். சனி, ஞாயிறுகளில் ஆயிரக்கணக்கில் திரள்கிறார்கள். வருடத்திற்கொருமுறை நடக்கும் இசை விழாவில் 'படா படா' வித்வான்களின் கச்சேரியை இலவசமாகக் கேட்க முடியும். ஆஞ்சநேயர் கோயிலில் நாள் முழுக்க பிரஸாத விநியோகம் உண்டு. ஆனால் பக்தர்களை ஏதோ அருவருக்கத்தக்கவர்களாக நினைத்து, பிரசாதத்தைக்



• ஆஞ்சநேயர் கோவில்



• ரவி

கையில் 'தூக்கிப் போடும்' போக்கை மட்டும் இங்கு இருக்கும் பிரஸாத விநியோகஸ்தர்கள் தவிர்த்தால், புண்ணியம் கூடும்.

## 'கண்ணீர்' குளம்.

பம்மல் சங்கரா கண் மருத்துவ மனையைச் சிறப்பாக நடத்துவதில் முக்கியப் பங்கு பெரியவர் விஸ்வ நாதனுக்கு உண்டு. அவர் பம்மலில் உள்ள கோயில் குளத்தை ஆழப்படுத்தி, வேலி போட்டு, சுற்றிலும் 'வாக்கர்ஸ் பாத்' அமைத்து அசத்தியிருக்கிறார். அந்த அனுபவத்தை அப்படியே நங்க நல்லூருக்குக் கொண்டு வந்து, அர்த்த நாரீஸ்வரர் கோயிலை ஒட்டியுள்ள குளத்தைச் சீர்படுத்த முயற்சி செய்தார் விஸ்வநாதன். உள்ளூர் அன்பர்கள் ஒத் துழைப்பும் கிடைக்க, வேலை துவங்கியது. ஆகாயத் தாமரைச் செடிகளை அகற்றி, சுத்தம் செய்து, ஆழப்படுத்தும் வேலை யும் முடிந்து விட்டது. ஆனால் அரசியல் வாதிகள் உள்ளே புகுந்ததால் முள்கம்பி வேலி போடும் திட்டமும், 'வாக்கர்ஸ் பாத்' அமைக்கும் திட்டமும் செயல் படுத்தமுடியவில்லை. இப்போது தொடர் கண்காணிப்பு இல்லாததால் குளம் பாழ்பட்டுக் கிடக்கிறது. கொஞ்ச நஞ்சம் இருக்கும் குளத்துத் தண்ணீரையும் அசிங்கப்படுத்தும் வேலை தடைபடாது நடக்கிறது.

## கீர்த்தி சிறிது

வேளச்சேரி, மடிப்பாக்கம், ஆதம் பாக்கம், நங்கநல்லூர் பகுதிகளில் அரை டஜன் லோக்கல் பேப்பர்கள் (Neighbourhood Newspaper) இருக்கின்றன என் பது பலருக்கு ஆச்சர்யமாக இருக்கலாம். சிட்டி டைம்ஸ், நங்கநல்லூர் எக்ஸ்பிரஸ், நட் டைம்ஸ், சபர்பன் வாய்ஸ், நங்கநல்லூர் டைம்ஸ், வீக்லி நியூஸ் என்று நிறைய லோக்கல் பேப்பர்கள். எல்லாமே இலவச விநியோகம்தான். எழுபத்தைந்து சதம் விளம்பரத்துடன் 'துண்டு துண்டு' லோக்கல் செய்திகளோடு வருகின்றன பத்திரிகைகள். ''நாங்கள் எடுத்துச் சொல்லும் பிரச்னைகளுக்குத் தீர்வு வருகிறது. உதாரணமாக மடிப்பாக்கம் பொன்னியம்மன் கோயில் மற்றும் யு.டி.ஐ வங்கிக்கு இடைப்பட்ட சாலை குண்டும் குழியுமாக இருந்தது. நடுவில் கழிவு நீர் ஓட்டம் வேறு. இதை நாங்கள் எடுத்துச் சொன்னோம். உடனே பஞ் சாயத்து அதை சரி செய்துவிட்டது. இது போல் நிறைய உதாரணங்களைச் சொல் லலாம்'' என்கிறார், சிட்டி டைம்ஸ்' ஆசிரியர் ரவி.

● மடிப்பாக்கம் சிவபாலன் பிளாக் பெல்ட் (நான்காவது டிகிரி) பெற்ற ஒரு கராத்தே வீரர். மற்ற கராத்தே வீரர் களைப் போல இவரும் கராத்தே பயிற்சி வகுப்புகளை நடத்துகிறார். ஆனால் அதில் ஒரு சிறப்பு என்னவென்றால் இவ ரது சிஷ்யர்கள் உடல் ஊனமுற்ற வர்களும், மனநலம் பாதிக்கப் பட்டவர் களும்தான். என்ன, ஆச்சர்யமாக இருக் கிறதா? 30 உடல் ஊனமுற்றவர்களும் 26 மனநலம் பாதிக்கப்பட்டவர்களும் மாணவர்களாக இவரிடம் கராத்தே பயிற்சி எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கான பாடங்களை இவரே உருவாக்கியிருக்கிறார்.

● ஆதம்பாக்கம் கருணீகர் தெரு மற்றொரு ரங்கநாதன் தெருவாக உருவாகி வருகிறது. நிறைய நகைக் கடைகள், உடனடி உணவகங்கள், துணிக் கடைகள் என்று நிறைந்திருக்க, மக்கள் தெருவை மொய்க்கிறார்கள். ஆனால் ஆட்டோக்காரர்களின் உரசல் இல்லா மல் இங்கே நடப்பது 'கின்னஸ்' சாத னைதான்.

தொகுப்பு: ஸ்ரீநிவாசன்
படங்கள்: 'பேஜர்' மூர்த்தி




## சபாஷ், சோனியா!

ஸ்ரீநகரில் குண்டு வெடிப்புச் சதியிலிருந்து தப்பிய சோனியா காந்தி, தாமும் தம் பங்குக்கு ஒரு குண்டைத் தூக்கிப் போட்டிருக்கிறார். அவரது அறிவிப்புப்படி காங்கிரஸ், தனித்துப் போட்டியிடும் பிடிவாதத்தைக் கைவிட்டு, மத்தியிலும் மாநிலங்களிலும் கூட்டணிகள் அமைத்து ஆட்சியைப் பிடிக்க முயற்சி செய்யும். முதல் முயற்சி உ.பியில் தொடங்கியாகிவிட்டது. சமாஜ்வாதி கட்சியுடனும் மாயாவதிக்கு ஆதரவை விலக்கிக் கொண்ட அஜித் சிங்கின் ராஷ்ட்ரிய லோக் தள் கட்சியோடும், பேச்சுவார்த்தைகள் ஆரம்பமாகிவிட்டன.

காங்கிரஸ் முதலமைச்சர்கள் மாநாட்டின் இறுதியில் செய்யப்பட்ட இந்த அறிவிப்பை, சரியான நேரத்தில் எடுக்கப்பட்ட மிகச் சரியான முடிவு என்று நாம் வரவேற்கலாம்.

கடந்த நான்காண்டு பி.ஜே.பி. கூட்டணி ஆட்சியானது, நாட்டுக்குப் பெரிதாக நல்லது ஏதும் செய்து விடவில்லை. இதனால், கூட்டணி ஆட்சியினால் நன்மையே விளையாது என்கிற முடிவுக்கு நாம் வரவேண்டியதில்லை. உண்மையில், கூட்டணியில் உள்ள அனைவருக்கும் ஏற்றதான குறைந்தபட்ச செயல்திட்டம் வகுத்து, அதனைத் தீவிரமாக அமல்படுத்துவதன் மூலம், கூட்டணி ஆட்சியில் நாடு வேகமாக முன்னேற்றம் காண



கல்கி



2003 ஜூன் 15
சுபானு ஆனி 1
மலர் : 61
இதழ் : 46

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




முடியும். ஆனால், பி.ஜே.பி. தலைமையில் அமைந்த தேசிய ஜனநாயகக் கூட்டணி, அவ்விதம் ஒன்றுபட்டு ஒரே சிந்தனையுடன் செயலாற்றவில்லை. கூட்டணியில் அங்கம் வகிக்கும் கட்சிகளிடையே பிளவுகள் நீங்கவில்லை என்பதோடு, பாரதிய ஜனதா கட்சிக்குள்ளேயே கருத்து மாறுபாடுகள் ஏகமாக வளர்ந்துவிட்டன. அக்கட்சிக்கு ஆதரவு தரும் ஹிந்துத்வா தீவிரவாத அமைப்புகள் கொடுத்து வரும் தொல்லைகள் வேறு கட்டுக்கடங்காமல் போய்விட்டன.

இந்த நிலைமையினால் நாட்டின் அமைதிக்கும் அபிவிருத்திக்கும் ஒவ்வொரு கணமும் பின்னடைவு ஏற்பட்டுக் கொண்டே இருக்கிறது.

மாற்று அரசாக, மத்தியில் காங்கிரஸ் தனித்து ஆட்சி அமைப்பது என்பது தற்போது நடவாத காரியம். வட மாநிலங்கள் பலவற்றில் அக்கட்சி வலிமை பெற்று ஆட்சியில் இருந்தாலும், தென் மாநிலங்களில் காங்கிரஸ் பலவீனமாகவே இருக்கிறது. நாடாளுமன்றத் தேர்தலில் வெற்றி வாய்ப்புகளை இந்நிலை பெரிதும் பாதிக்கும்.

ஆகவே, இத்தருணத்தில் சோனியா அறிவித்துள்ள கூட்டணிகள் குறித்த முடிவு கூடுதல் முக்கியத்துவம் பெறுகிறது.

"ஹிந்துத்வாவையோ அல்லது மிதமான ஹிந்துத்வாவையோ காங்கிரஸ் எந்த விதத்திலும் ஆதரிக்காது" என்று அடித்துப் பேசியிருக்கிறார் சோனியா. பாக். மற்றும் காஷ்மீர் விவகாரங்களில் தற்போதைய மத்திய அரசு எடுக்கும் அமைதி முயற்சிகளுக்குத் தமது முழு ஆதரவைத் தெரிவித்திருப்பதும், ஆக்கபூர்வமான யோசனைகளைக் கூறியிருப்பதும், காங்கிரஸ் கட்சித் தலைமையுடைய பொறுப் புணர்ச்சிக்கு எடுத்துக்காட்டு.

இத் தருணத்தில் ப. சிதம்பரம் விடுத்துள்ள அறிக்கையும் முக்கியத்துவம் பெறு கிறது. பாப்ரி மசூதி தகர்ப்பு விவகாரத்தில் அத்வானி பேரில் குற்றப்பத்திரிகை




தாக்கல் செய்யப்பட்டிருப்பதால், கூட்டணிக் கட்சியினர் ஆதரவை விலக்கிக் கொள்வது தான் முறை என்று கூறியிருக்கிறார்.

அடுத்த தேர்தல் அறிவிக்கப்படும் முன் அரசியல் நிலவரத்தில் பல மாற்றங்களை எதிர்பார்க்கலாம். மத்திய ஆளும் கூட்டணியில் தற்போது அங்கம் வகித்தும் அதிருப்தி அடைந்துள்ள கட்சிகளை, காங்கிரஸ் அரவணைத்துச் செல்லத் தயாராயிருப்பது வெளிப்படை.

'அந்தந்த மாநில காங்கிரஸ் தலைவர்கள்தான் மாநில அளவில் கூட்டணியைக் குறித்து முடிவு எடுக்க வேண்டும்' என்று சோனியா காந்தி பேசியிருப்பது காங்கிரஸுக்குள் ஜனநாயக உணர்வு இன்னும் மிச்சமிருக்கிறது என்ற நம்பிக்கையைத் தருகிறது.

ஆனால், தமிழகக் காங்கிரஸில் உள்ளது போன்று பல மாநிலங்களில் நிலவுகிற உட்கட்சிப் பூசல்கள், அக்கட்சித் தலைமை எடுக்கும் நன் முயற்சிகளையெல்லாம் தவிடுபொடியாக்கிவிடும் போலிருக்கிறது. இதுதான் காங்கிரஸின் வெற்றிப் பாதையில் குறுக்கே கிடக்கும் மிகப்பெரிய தடைக்கல்.

உட்கட்சித் தேர்தல்களை மட்டும் முறைப்படி நடத்திக் காட்டியிருந்தாரானால், சோனியா காந்தி மிகச் சிறந்த கட்சித் தலைவர் என்ற பெயருக்குரியவராகியிருப்பார். காங்கிரஸ் கட்சிக்குள் ஒற்றுமை ஓங்கி, அது நன்கு வலுப்பெற்றிருக்கும்.

இப்போது அதற்கு நேரமில்லை. பி.ஜே.பி. தலைமைக் கூட்டணிக்கு மாற்றாக, சிறந்ததொரு காங்கிரஸ் தலைமைக் கூட்டணி அமைப்பதிலாவது காலதாமதமின்றி சோனியா செயல்படட்டும்.

அரசியல் சதுரங்கத்தில் சோனியா, புத்திசாலித்தனமாகக் காய்களை நகர்த்தினால், தற்போதைய மத்திய அரசுக்குச் சிறந்ததொரு மாற்று அரசு அமைய வழி பிறக்கும். ○

# வட்டமேஜை




• அமீஷா




• கரீனா கபூர்

✉ ஜனநாயகத்தை நிலை நாட்டுவதாகக் கூறி ஈராக்கில் நுழைந்து அதன் விலை மதிப்பற்ற சரித்திரச் சான்றுகளைப் பேரழிவுக்குள்ளாக்கிய அமெரிக்காவை உலக வரலாறு ஒருபோதும் மன்னிக்காது.

அறந்தாங்கி, பிரகதீஸ்வரி இராஜப்பன்.

✉ இரட்டை அர்த்த ஆபாச வசனங்களுடன், இளைஞர்களைத் தவறான வழிக்கு இழுத்துச் செல்லும் மசாலா கதையான 'சாமி'க்கு உமது அபவ் ஆவரெஜ் அதிகம்.

திருவாரூர், எஸ். பாலசந்தர்.

✉ எடைக்கு வந்தது பஞ்சாக இருந்தாலும், இரும்பாக இருந்தாலும், எப்பக்கமும் சாயாமல், நேர்மையாக எடை போடும் தராசு - அருமை. கல்கிக்குப் பெருமை.

அம்மாப்பேட்டை, அ. சின்னசாமி.

✉ அ'சிங்'கமான பற்களை ஒழுங்குபடுத்தி அழகிய புன்னகைக்கு அங்கீகாரம் அளித்திடும் அற்புத மருத்துவர் பற்றிய கட்டுரை தந்திட்ட 'பல்'சுவை வார இதழ் கல்கியே, நீ 'பல்'லாண்டு வாழ்க!

அயன்புரம், த. சத்தியநாராயணன்.

✉ சப்பைக் கட்டாகக் கூறவில்லை - 'சப்புக்கொட்டு சமையல்' உண்மையில் சூப்பர் இலவச இணைப்பேதான். 'அதென்னங்க 'கண்ட கட்ட கிமோ'ன்னு பேரு? ஓ... இது கொலை சீசன் ஆச்சே... ஓகே! ஓகே!

திசையன்விளை, ஆர்.ஜி. விநாயகா.

✉ கல்கி (1.6.2003) இதழில் 86ம் பக்கத்தில் எனது ஜோக் இடம் பெற்றிருக்கிறது. ஆனால் எனது பெயர் விடுபட்டிருக்கிறது.

திருநெல்வேலி, எஸ். முகம்மது யூசுப்.

✉ அமீஷா பட்டேல் செய்திக்கு கரீனாகபூரின் படத்தைப் போட்டிருக்கிறீர்களே, சென்னை வெயில் தாங்கலையா?

சென்னை - 1, கே.ஆர். உதயகுமார்.

✉ கல்கி (25.5.2003) இதழில் 'சமாதிகளுக்கும் ஆபத்து' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை வெளிவந்துள்ளது. அதில் வடலூரில் வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் கட்டிய சத்தியஞான சபையின் படத்தை அச்சிட்டு அதற்கு 'வடலூர் வள்ளலார் சமாதி' என்று பெயர் குறிப்பிட்டிருக்கிறீர்கள்.

வடலூர், ஊரன் அடிகள்.

தவறுக்கு வருந்துகிறோம்.

- ஆர்.

• சூழ(ல)க அரசியல்! தலையங்கம் கண்டேன். நான் மனத்தில் நினைத்தது ஒரு வரி பிறழாமல் அச்சேறியிருந்தது கண்டு மெய்சிலிர்த்தேன். தற்போதைய அரசியல் சூழ்நிலையில் சகிப்புத்தன்மை, மாற்றுக் கருத்துக்கு மதிப்பு போன்ற அடிப்படை ஜனநாயகப் பண்புகள் வெகுவாகக் குறைந்து போய்விட்டன. இதை சகஸ்ரநாமம் போல் 1008 தடவை தினமும் ஒவ்வொரு தமிழனும் உச்சரித்தால், அடுத்த தேர்தலிலாவது பலன் கிடைக்கும்.

திருக்குறுங்குடி, எஸ். காயத்ரி.

# வேண்டாம் சொர்க்கம்!

சின்ன இரை!
நிறைய எறும்புகள்...
இன்டர்வியூ!

துடித்துப் போயிருக்கும்... குருவி!
அதன்மீது பட்ட கல்...
புளியம்பழத்துக்கு எறிந்தது.

ஏற்கெனவே அனுபவித்ததுதான்
... குழந்தை சிரிக்கும்போது
பிரத்யேகமாக...
பயணப்படவிரும்பவில்லை
வேண்டாம் சொர்க்கம்!

பளிச்சிட்டு மறைந்தது மின்னல்!
யாராவது... கற்றிருக்கக் கூடும்
வாழ்க்கை நிலையாமை பாடத்தை!

ஈஸ்வர்





''என் டேபிள்ல இருந்த குற்றவாளிகள் போட்டோ ஆல்பம் எங்கே...?''

''கேடி கபாலி, தன் பொண்ணுக்கு வரன் தேடறதுக்காக வாங்கிக்கிட்டுப் போயிருக்கான்...!''

— எம்.ஆர்.மூர்த்தி



# கபாலி ஜோக்ஸ்!

''இப்ப எல்லாம், எல்லா மாணவர்களும் போராட்டத்தில் குதிக்கறாங்களே, இதுக்கு என்ன பண்ணறதா உத்தேசம்னு மந்திரிகிட்ட கேட்டது தப்பாப் போச்சு.''

''ஏன்? என்ன சொல்றாரு...?''

''அடுத்த கல்வியாண்டிலிருந்து ரெண்டு மாசம் 'ஸ்டிரைக் ஸெமஸ்டர்'னு சிலபஸ்ல கொண்டு வரலாம்னு இருக்கோம்'னு சொல்றாரு!''

— ஹரிகிருஷ்ணன்






''அந்த சைக்கிள் கடைக்கு அஞ்சு பேர் பார்ட்னரா...?''

''ஏன் கேட்கறீங்க...?''

'' 'பஞ்சர் பாண்டவர் சைக்கிள் கடை'ன்னு பேர் வைச்சிருக்காங்களே!''

— வீ. சாரதி டேச்சு

''ஏன் ஸார், இதுதான் உங்களுக்கு முதல் விமானப் பயணமா...?''

''எப்படிக் கண்டு பிடிச்சீங்க!''

''சாக்லேட் தட்டை நீட்டினப்போ 'என்ன குழந்தைம்மா, ஆணா பெண்ணா'ன்னு கேட்டீங்களே...!''

— நெய்வேலி அ. கொளஞ்சி



''எங்க வீட்டுல மாமியாருக்கும் மருமகளுக்கும் பயங்கர சண்டை நடக்கும்!''

''நிஜமாவா...?''

''ஆமாம்! வீட்டுல பதுங்கு குழியெல்லாம் வெட்டி வைச்சிருக்காங்கன்னா பாருங்க!''

— வீ. சாரதி டேச்சு

''அவர் போலி டாக்டர்னு சொல்றியே எப்படி?''

'' 'ஹிஸ்டீரியா'வை முற்ற விட்டா 'ஜாக்ரபியா'வா மாறிடும்ங்கிறாரே!''

— தஞ்சை தாமு



சரவணன் – சுந்தரம் சாருக்கு வாக்கு கொடுத்திருந்தான். "எப்படியாவது உங்களுக்கு ஹெல்ப் பண்றேன் சார்... எவ்வளவு பெரிய ஆளு சார் நீங்க... உங்களுக்கு ஹெல்ப் பண்ண நான் கொடுத்து வைச்சிருக்கணும்... என்னையும் ஒரு மனுஷனா நினைச்சு உதவி கேட்டு வந்திருக்கிங்களே..." என்றான்...

சுந்தரம் சார் அவ்வழியேதான் வீட்டுக்குப் போக வேண்டும். போகும் போதும் வரும் போதும் சரவணனைப் பார்ப்பார். அவருக்கு மனம் சங்கடமாய் இருந்தது. சீருடையைப் போட்டுக் கொண்டு பள்ளிக்குச் செல்ல வேண்டியவன், அழுக்கு பேண்ட் சட்டையில் ஸ்பானரைப் பிடித்துக் கொண்டு இருக்கிறானே என்று... ஒரு நாள் சரவணன் தனியாக இருக்கும் போது, "படிப்பு வரல... படிப்பு பிடிக்கலன்னு தான் இங்க வேலைக்கு வந்திருக்கே... இதையாவது சரியா செய்ப்பா... அக்கறையா தொழில் கத்துக்க..." என்றார்.

# "சின்ன உதவி செய்வாயா?"



சுந்தரம் சார் – சரவணனுக்குப் பத்தாம் வகுப்பில் கணக்குப் பாடம் நடத்தியவர். என்னவோ தெரியவில்லை சரவணனுக்கு, மற்ற வாத்தியார்களை விட சுந்தரம் சாரை ரொம்பவும் பிடித்திருந்தது. யாரையும் கடிந்து பேசமாட்டார். மிகவும் பொறுமையாகப் பேசுவார்... பாடம் நடத்துவார்... ஆனாலும் சரவணன் கணக்குப் பாடத்தில் ஃபெயிலாகவே செய்தான். ஆண்டு இறுதித் தேர்விலும் சரவணன் மாத்திரமே கணக்குப் பாடத்தில் ஃபெயிலாகி இருந்தான். முப்பத்து மூணு மார்க் வாங்கியிருந்தான். மேற்கொண்டு இரண்டு மார்க் வாங்கியிருந்தால் பாஸ் பண்ணி இருப்பான். அவனுக்கு சுந்தரம் சாரைப் பார்க்கவே கூச்சமாய் இருந்தது.

"சரி விடுப்பா... அக்டோபர்ல எழுதி பாஸ் பண்ணிடு... டுடோரியல்ல எல்லாம் சேர வேணாம். டெய்லி சாயங்காலம் ஒரு மணி நேரம் உனக்குப் பாடம் நடத்தறேன், பணமெல்லாம் வேண்டாம்" என்றார்.

அவருக்கும் கஷ்டமாய் இருந்தது போலும். தம்மிடம் படித்த ஒரு மாணவன் ஃபெயிலாகி விட்டானே என்று... அதற்குப் பிராயச்சித்தமாக இலவசமாய் டியூஷன் சொல்லித் தருகிறேன் என்று சொல்லி இருக்கலாம். சரவணனுக்குப் படிக்க விருப்பமில்லை. அவன் அப்பா அவனை டூவீலர் ஒர்க் ஷாப்பில் வேலைக்குச் சேர்த்துவிட்டார்.

சரவணனுக்கு இப்போது இருபத்தியொரு வயது. ஆறு வருஷமாய் நல்லபடியாய்த் தொழில் கற்று, ஒர்க்ஷாப் வைத்து விட்டான். கையில் சேர்த்து வைத்திருந்த பணமெல்லாம் ஒர்க்ஷாப் வைக்க செலவாகிவிட்டது. ஒர்க்ஷாப் திறந்த அன்று – சுந்தரம் சாரையும் அழைத்திருந்தான். "என்னவோ தெரியல சார்... உங்களை மாத்திரம் எனக்குப் பிடிச்சிருக்கு" என்றான்.

"வேலையெல்லாம் நல்லபடியா கவனமா பார்த்து முன்னுக்கு வா. பணம் கையில் நல்லா புரளுதேன்னு இஷ்டத்துக்குச் செலவு பண்ணாதே... கஷ்டப்பட்டு சம்பாதிக்கிற காசு... முதல்ல சேமிக்கப் பழகிக்கோ" என்றார்.

"வாடிக்கையாளர்கள் மனசு கோணும்படி நடந்துக்காதே. ஒரு தடவை உன் செய்கை

யோகி



அவங்களுக்குப் பிடிக்கலைன்னா, உடனே உன்னை விட்டுப் போயிடுவாங்க. திரும்ப அவங்களைப் பிடிக்கிறது ரொம்பக் கஷ்டம். நூறு முறை சரியா செஞ்சு கொடுத்திருப்பே, அத மறந்துடுவாங்க. ஒரே ஒரு முறை செய்த தப்பைத்தான் பிரதானமாகப் பேசுவாங்க. பணம் ரொம்ப சம்பாதிக்கிறோம்னு கர்வமா இருந்துடாதே" என்றவர், "ரொம்ப பேசிட்டேன்ல" என்றார்.

"அதெல்லாம் இல்ல சார்... எனக்குத் தெரியாதது உங்களுக்குத் தெரியும் சார். சொல்லுங்க தெரிஞ்சுக்கறேன்... நீங்க நான் கெட்டுப் போக வழி சொல்ல மாட்டீங்களே" என்றான். சுந்தரம் சார் சிரித்தார். "நல்லா பேசுறே... அப்புறம் சரவணன்.... எனக்கொரு சின்ன உதவி நீ செய்யணும்" என்று கேட்டார்.

"நானா... என்ன சார் செய்ய... என்னால் என்ன உதவி சார் செய்ய முடியும்?" என்று கேட்டான்.

"என் பொண்ணுக்கு ஒரு நல்ல இடத்துல இருந்து வரன் வந்திருக்கு... பேசி முடிச்சிடலாம்னு இருக்கேன்.... நல்ல பையன்... நல்ல குடும்பம்.... நியாயமான வரதட்சணை கேட்குறாங்க... அதைக் கூட என்னால போட முடியாம இருக்கு. ஒரு இருபது ரூபா துண்டு விழுது... யார்கிட்டயாவது வாங்கித் தர முடியுமா....? இரண்டு வட்டிக்கு... கரெக்டா ஒண்ணாந் தேதி, ஒண்ணாந்தேதி வட்டி கொடுத்துடுவேன்..." என்றார்.

"எனக்கு யாரையும் தெரியாதே சார்... நீங்க கொஞ்ச நாள் முன்ன சொல்லி

யிருந்தா, நா இந்தக் கடை தொறக்கிறதைக் கூட தள்ளிப் போட்டுட்டு உங்களுக்குப் பணம் கொடுத்து இருப்பேன். முப்பது ரூபா சேர்த்து வைச்சிருந்தேன். கடை அட்வான்ஸ், டூல்ஸ் வாங்க சரியாப் போச்சு சார்...'' என்றான்.



வைரஸ் வைபோராக்!

எதிர்பார்த்தபடியே அமெரிக்கா தனது ராணுவத்தின் உதவியுடன் கவர்னர் ஜெய்கார்னர்

''எனக்கு யாரையும் தெரியாது சரவணன். நீதான் பார்த்து ஏற்பாடு பண்ணணும். கல்யாணத்துக்கு இரண்டு மாசம் இருக்கு. உன் கடைக்கு பெரிய பெரிய ஆட்கள் எல்லாம் சர்வீஸுக்கு வருவாங்க... பார்த்துப் பேசி ஏற்பாடு பண்ணுப்பா. யார்கிட்டேயும் பழகாம இருந்துட்டேன். ஸ்கூல்... ஸ்கூலை விட்டா வீடுன்னு ஒரு குறுகிய வட்டத்துக்குள்ளே இருந்துட்டதால் யாரையும் தெரியல... வீடும் வாடகை வீடு.... எதையும் அடமானம் வைச்சுக் கூட பணம் புரட்ட முடியாத நிலையில் இருக்கேன்'' என்றார்.

சரவணனுக்கு தர்ம சங்கடமாயிருந்தது. பணத்தை வாங்கிக் கொண்டு கம்பி நீட்டி விட்டால் என்ன பண்ணுவது என்றெல்லாம் நினைத்துச் சங்கடப்படவில்லை. சுந்தரம் சாருக்கு உதவக் கூடிய நிலையில் தான் இல்லையே என்றுதான் வருத்தப்பட்டான்.

''சரவணன்.... உன்னைத்தான் நான் பூரணமா நம்பியிருக்கேன். உன் சகோதரி கல்யாணம்னா எவ்வளவு பிரயத்தனப் படுவியோ அவ்வளவு பிரயத்தனப்படுப்பா..'' என்று கையைப் பிடித்தார். அவனால் முடியாது என்று சொல்ல முடியவில்லை. ''சரிங்க சார்..!'' என்று சொல்லிவிட்டான்.

**நா**ன்கு நாளாகி விட்டது. இரண்டு, மூன்று பேரிடம் பணம் கேட்டுப் பார்த்தான். ஒன்றும் கிடைக்கவில்லை.

''உனக்கு வேணும்னா சொல்லு சரவணன்... எவ்வளவு வேண்டுமானாலும் தர்றோம். அடுத்தவங்களுக்குன்னு சொல்றே... நாளைக்குக் கொடுக்க முடியலைன்னா.... நீதான் பொறுப்பு... எதுக்கு இந்த விஷப் பரீட்சை... நீ வாங்கிச் செலவு பண்ணிட்டுக் கொடுக்க முடியலன்னா, அது வேற... ஊர்ப் பயல்கள் திங்கறதுக்கு நீ எதுக்குக் கஷ்டப் படணும்'' என்றனர். அடுத்தவருக்கு என்று சொல்லிக் கேட்டது தவறு போலும்... நமக்கென்று கேட்டிருந்தால் கொடுத்திருப்பார்களோ என்னவோ.....

அடுத்து, வேறு நபரிடம் கேட்டபோது தனக்கென்று கேட்டான். ''இப்ப தோதுப்படாதுங்க'' என்றார். சரவணனுக்கு மிகவும் அவஸ்தையாய் இருந்தது. முடியாது என்று சொல்லியிருந்தால் கூட, சுந்தரம் சார் வேறு எங்காவது முயற்சி செய்திருப்பார்... நான் வாங்கித் தருகிறேன் என்று சொல்லி, அவரும் பூரணமாய் நம்பிக் கொண்டிருந்து, கடைசியில் ''இல்ல சார்... என்னால் முடியல'' என்றால் அவரால் கடைசியில் எப்படிப் புரட்ட முடியும்? தன் செய்கையால் அவரது மகள் கல்யாணம் நின்று விடுமோ.... அய்யோ.... அப்படி எத்தனையோ இடத்தில் நடந்திருக்கிறதே... பத்திரிகையில் செய்திகள் அவ்விதம் எவ்வளவோ வந்திருக்கிறதே... மனசுக்குள் கவலை பிடுங்கித் தின்றது.

**சு**ந்தரம் சார் கண்ணில் படவே இல்லை... முழுக்க முழுக்க தன் மீது பாரத்தைப் போட்டு விட்டு அவர் நிம்மதியாக இருக்கக் கூடும்... சுந்தரம் சார் சொல்லி பதினைந்து நாட்களுக்கு மேலாகிவிட்டது. இந்த நாலைந்து நாளாய்த் தூக்கம் போனது தான் மிச்சம்.... யார் யாரிடமெல்லாம் கேட்கலாம்... யாரிடம் கேட்டால் பணம் கிடைக்கக் கூடும் என்றெல்லாம் ஒரு காகிதத்தில் எழுதி வைத்து, கிடைக்க வாய்ப்பு இருக்கக் கூடிய நபரிடம் எல்லாம் பணம் கேட்டு அலைந்தான். ஒர்க்ஷாப் வேலை கூட இதனால் கொஞ்சம் பாதிக்கப் பட்டது.

''என்னப்பா, புதுசா கடை வைச்சு இருக்கே... கடையில் ஒழுங்கா உட்கார மாட்டேங்கிறே... வேலை பார்க்கணுங்கிற

தலைமையில் ஈராக் எண்ணெய்க் கிணறுகளிலிருந்து பெட்ரோல் எடுக்க ஆரம்பித்துவிட்டது. ஐ.நா.சபை உதவியுடன் உலக நாடுகளுக்குப் பெட்ரோல் விற்கவும் முன் வந்துள்ளது. விலை ஒரு லிட்டர் ஐந்து ரூபாய் மட்டுமே? லிட்டர் பெட்ரோல் இனி கோக் விலைக்கு கிடைக்குதா?... சொக்கா...!

- பாரீஸ். பார்த்தசாரதி

விருப்பம் இருக்கா, இல்லையா... தனியா கடை போட்டதும் பெரிய முதலாளிங்கிற நினைப்பு வந்துடுச்சா?'' என்று கூட கன்னென்று பேசினார்கள் சில வாடிக்கையாளர்கள். சங்கடமாய்ப் போனது.

எல்லோரிடமும் கேட்டுப் பார்த்தாயிற்று... எல்லோரும் யோசித்தனர்.

"சின்னப் பையனா இருக்கானே... பணம் கொடுத்தால் திரும்பக் கிடைக்குமா?" என்று யோசித்திருக்கலாம். வழக்கமாய் கடைக்கு வரும் ஒருவர் சொன்னார்: தம்பி.... உன் க்டைக்கு வர்ற கஸ்டமர்கிட்ட நீ இப்படிப் பணம் கேட்டுத் தொந்தரவு பண்ணினா அப்புறம் உனக்கு வர வேண்டிய வேலை கூட வராது... அவங்க உன்னைக் கண்டாலே ஓடி ஒளிவாங்க.... வளர்ற ஸ்டேஜ்ல இருக்கும் போது இப்படி நடந்துக்கலாமா...

ஆனாலும் பணம் வேண்டுமே... என்ன செய்வது? வேலை கெட்டுப் போனதுதான் மிச்சம்.... வாடிக்கையாளர்களிடம் கெட்ட பெயர் வாங்கினது தான் மிச்சம்... இரவு சாப்பிடும்போது அம்மா கேட்டான், "என்னப்பா ஒரு மாதிரியா இருக்கே பத்து நாளா?"

''அதெல்லாம் ஒண்ணுமில்லம்மா'' என்றான். ஆனால் உண்மையில் அவன் வாட்டத்துடன்தான் இருந்தான். எப்போதோ படித்த காந்தியின் பொன் மொழி அவன் ஞாபகத்துக்கு வந்தது. 'அவசரப்பட்டு வாக்குறுதி தராதே... தந்துவிட்டால் உயிரைத் தந்தாவது நிறைவேற்று..' எப்படி நிறைவேற்றப் போகிறான்?

"இல்ல தம்பி... நீ ஒரு மாதிரியாத் தான் இருக்கே... எனக்குத் தெரியாதா உன்னைப் பத்தி... கடையில் வேலை இல்லையா? புதுசா வைச்சதால் மெள்ளதான் வேலை வரும்... கொஞ்ச நாளாச்சுன்னா சரியாப் போகும்..." என்றாள்.

"அதெல்லாம் வேலைக்கு எந்தக் குறையும் இல்லம்மா" என்றவன், அம்மாவிடம் சகலமும் சொன்னான். "சுந்தரம் சாருக்கா?" என்று கேட்டார். அம்மாவுக்கு சுந்தரம் சாரைத் தெரியும்.

"பாவம்மா சுந்தரம் சார்... அவருக்கு யாரையும் தெரியாது. நான் வாக்குக் கொடுத்துட்டேன்... என்ன பண்றதுன்னு தெரியல..." என்றான்.

"எவ்வளவு கேட்டார்னு சொன்னே?"

"இருபதாயிரம்மா!"

''நம்மால் அவ்வளவு தர முடியாது. வீட்ல இருக்கிற நகையைச் சேர்த்து அஞ்சு பவுன் தேத்தலாம். அடகு வைச்சா பத்து, பன்னிரண்டாயிரம் ரூபாய் கிடைக்கும். அதக் கொடுத்துரு. இவ்வளவு தான் சார் புரட்ட முடிஞ்சதுன்னு சொல்லு... நம்ம ரூபான்னு சொல்லாதே... வட்டி கேட்டு வாங்கிக்கோ'' என்றவள் எழுந்து அலமாரியில் இருந்து செயின், தோடு, மோதிரம் எல்லாவற்றையும் எடுத்து கையில் கொடுத்தாள். "காலையில் அடகு வைச்சு, முதல் வேலையா சார் வீட்டுல கொண்டு போயி கொடுத்துரு."

"ஏம்மா... நம்ம நகையத் தானே கொடுக்கிறோம்... எதுக்கு வட்டி?" என்றான்.

"வட்டிய நாமா எடுத்துக்கப் போறோம். அடகு கடைக்காரருக்கு வட்டி கொடுக்க வேணாம்?" என்றாள்.

இரவு நிம்மதியாய்ப் படுத்தான். ஏதோ பாரத்தை இறக்கி வைத்த மாதிரி இருந்தது. அம்மாவுக்கு நன்றி சொன்னான். மறுநாள் காலையில் அடகுக் கடையில் அடகு வைத்தான். பன்னிரண்டாயிரம் ரூபாய் கொடுத்தார்கள். வாங்கிக் கொண்டு சுந்தரம் சார் வீட்டுக்குப் போனான். சுந்தரம் சார் இருந்தார். ''என்னப்பா திடீர்னு, இந்தப் பக்கம்... உட்காரு"என்றார்.

உட்கார்ந்தான்.

"சார்... என்கிட்ட நீங்க பணம் கேட்டிருந்திங்க. பணம் புரட்ட லேட்டாயிடுச்சு."

''உன்கிட்டயும்மா பணம் கேட்டு இருந்தேன்? ஒருத்தர்கிட்ட சொன்னா பணம் கிடைக்குமோ, கிடைக்காதோன்னு நாலு பேர்கிட்ட சொல்லி வைச்சேன். பணம் கிடைச்சிருச்சு... உன்கிட்ட பணம் கேட்ட ஞாபகமே எனக்கு இல்லப்பா!" என்று சொல்லிக் கொண்டே போனார்.

படபடவென்று சரவணனுக்குள் எதுவோ சரிந்தது. ○



# அரைப்பட்டினியில் அரங்கன்!

"ஆற்று மணலைக்கூட எண்ணி விடலாம். அண்ணங்கார் சிஷ்யர்களை எண்ணி விட முடியாது" எனக் குறிப்பிடுவார்கள். 'எதனை எண்ணி என்ன ஆகப் போகிறது?' என்கிறார்கள் ஸ்ரீரங்கவாசிகள்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு ஸ்ரீரங்கம் கோயிலில் வைத்து கோயிலுக்கென அஷ்டமங்கல ப்ரஸ்னம் பார்க்கப்பட்டது. கேரள ஜோதிடர் உன்னி கிருஷ்ண பணிக்கர் என்பவர், ப்ரஸ்னம் கண்டார். கோயில் ஆகம விதிமுறை மீறல்கள் மற்றும் நடைமுறைக் குறைபாடுகள் என நூற்றுக்கும் மேற்பட்ட குறிப்புகள் அப்போது வெளிப்பட்டனவாம். அவற்றில் எதுவும் உண்மைக்குப் புறம்பானவை என்று கோயில் நிர்வாகத்தால் மறுக்கப்படவே முடியாத குறிப்புகளாய் இருந்தனவாம். நாம் இது குறித்து முன்னரே 18.3.2001 'கல்கி' இதழில் பிரச்னைகள் கிளப்பும் பிரச்னம்' என்கிற தலைப்பில், அப்போதைய கோயில் இணை ஆணையர் பேட்டியுடன் விரிவான கட்டுரையாக வெளியிட்டிருந்தோம்.

ப்ரஸ்னத்தில் வெளிப்பட்ட குறிப்புகளில் கடந்த இரண்டு ஆண்டுகளில், ஏதேனும் சிலவற்றையாவது, கோயில் நிர்வாகம் களைந்துள்ளதா என அறிய முற்பட்டோம். 'ஏதுமில்லை' என்கிற வார்த்தையே பதிலாகக் கிடைத்தது.

ஆர்ய பட்டாள் வாசலின் உள்ளே இருப்பது பொன் கம்பம் எனப்படும் துவஜஸ்தம்பம். கோயிலின் ஜீவ நாடி அது. காலங்காலமாய் அதனருகில் தேங்காய் உடைத்து வழிபட்டு வந்ததை, கடந்த இருபது ஆண்டுகளாக (வெடிகுண்டு புரளி காரணமாக) தடுத்து நிறுத்தி விட்டது கோயில் நிர்வாகம். அங்கு தேங்காய் உடைத்து வழிபட்டால் பருவ காலங்களில் மழை பொழிந்து வளம் கொழிக்கும் என்பது ஐதிகம். அதிலும் விழுந்தது மண்.

நம் பெருமாளின் திருவாராதனக் கட்டளை 365 நாட்களும் நடைபெற வேண்டி, மும்பை மனோரமாதேவி சோமானி என்பவர் 3, 65,000 ரூபாய் நிரந்தர வைப்புநிதியாக கோயிலுக்கு பல ஆண்டுகளுக்கு முன்பே அளித்துள்





• சேஷராயர் மண்டபமா? சைக்கிள் ஸ்டாண்டா?

ளார். அதில் ஓர் அங்கமாக, தினசரி பகல் 12 மணியளவில் கிளி மண்டபத்தில் வைத்து அந்தச் சமயத்தில் அங்கு வந்து செல்லும் பக்தர்களுக்கு உள்ளங் கையளவு தயிர் சாதப் பிரசாதம் தந்து வந்தனர். தமிழக முதல்வர் ஜெயலலிதா, திருக் கோயில்களில் மதிய உணவு அன்னதானத் திட்டம் கொண்டு வந்த பிறகு, அதனைக் கைவிட்டு விட்டது கோயில் நிர்வாகம். நடைமுறையில் இரண்டும் வேறு வேறு வகையானவை என்பதனை கோயில் நிர்வாகம் புரிந்து கொள்ளவில்லை.

மூலஸ்தானத்தில் இருக்கும் விளக்குகளில் மிக முக்கியமானது தரையூன்றி நிற்கும் திருமுன் குத்துவிளக்கு. அணையா விளக்கு அது. ஒரு நாளைக்கு ஐந்து கிலோ நெய் ஆகும் அதற்கு. பன்னெடுங்காலமாய் நெய் மட்டுமே அதிலிட்டு நிரப்பி ஒளியேற்றி வந்ததில், சமீப வருடங்களாக கோயில் நிர்வாகம் அதற்கு விளக்கெண்ணெய் மட்டுமே தந்து வருவதாகச் சொல்லப்படுகிறது. இதில் விசேஷம் என்னவெனில், சமீபத்திய நான்கைந்து பட்டங்களுக்கு முன்பிருந்த கோயில் ஜீயர் ஸ்வாமிகள் ஒருவர், திருமுன் குத்து விளக்கில் நெய் மட்டுமே நிரப்பப்பட வேண்டுமென ஒரு பெரும் தொகையைக் கோயில் நிர்வாகத்துக்குத் திரட்டித் தந்திருக்கிறாராம்.

* தரைமட்டமாக்கப்பட்ட வசந்த உற்சவ மண்டபம்





* மதிலை ஒட்டி கழிப்பிடம்

* இதுவும் சைக்கிள் நிறுத்துமிடமாக...

உச்சிக் கால பூஜை என்பது பெரிய திரு வாராதனம் எனச் சொல்லப்படும். அதற்குரிய நேரம் மதியம் 12.30 மணியிலிருந்து 2.30 வரை. கட்டண வசூலை கருத்தில் கொண்டு பக்தர்கள் நெரிசலைக் காரணம் காட்டி, அதனை அரை மணி நேரத்திற்குள் நிறைவு செய்யும்படி கோயில் நிர்வாகம் கட்டளையிடுகிறது.

மூலஸ்தான பெருமாளுக்கு தினசரி ஆறு கால பூஜைகளில் நைவேத்யம் சமர்ப்பிக்கப்படுகிறது. படுத்திருக்கும் அரங்கனுக்கு அவனது நீள, அகல, உயரத்துக்குத் தகுந்தவாறு ஒவ்வொரு வேளைக்கும் எந்தெந்த அளவுக்கு நைவேத்யம் கண்டருளப்பண்ண வேண்டுமென் நியதிகள் வகுக்கப்பட்டு, அதனைப் பல நூற்றாண்டுகளாக கடைப்பிடித்து வந்துள்ளனர். விஸ்வரூபம், பொங்கல் தளிகை, பெரிய அவசரம் எனப்படும் உச்சிக் காலம், க்ஷீரான்னத் தளிகை, செலசம்பா, அரவணை பால் அமுது என ஆறு காலப் பூஜைகள். இவைகளின்போது ரொட்டி, வெண்ணெய், பாசிப்பருப்பு, தோசை, தேன்குழல், திருமால் வடை, அரிசி வடை, வெறும் சாதம், பொங்கல், அரவணை, பசும்பால் ஆகியன நைவேத்யங்கள் ஆகும். மேற்கண்ட ஒவ்வொரு நைவேத்யப் பொருட்களின் அளவுகளில் சரி பாதியைக் குறைத்து விட்டது கோயில் நிர்வாகம், கடந்த பதினைந்து ஆண்டுகளாக. இது ஒரு வகையில் அரங்கனை தினசரி அரைப் பட்டினி போட்டு வருவதற்குச் சமமாகின்றது.

“முன்னவனார் கோயில் பூசைகள்



* ரெங்கநாதம்

முட்டிடின் மன்னர்க்குத் தீங்குள; வாரி வளம் குன்றும்; கள்ளம் களவு மிகுந்திடும் காசினி; என்னரும் நந்தி எடுத்துரைத்தானே!'' என்று திருமூலர் அருளிய திருமந்திரத்தின் 550வது பாடல் ஒன்று மனசுக்குள் விரிந்தது. 'அரங்கன் கோயிலுக்குள் இத்தனை அவலங்களா?' என்கிற அதிர்ச்சியுடன் பக்தர்கள் சிலரைச் சந்தித்தோம்.

அழகிய கற்சிற்பங்களை முகப்பிலே கொண்டது சேஷராயர் மண்டபம், ஆயிரங்கால் மண்டபம் எதிரே உள்ளது. கிழ வாசல் வெள்ளைக் கோபுரம் வழியாக கோயில் பணியாளர்களும், பட்டர்களும் தங்கள் மோட்டார், இரு சக்கர வாகனங்களில் ஏறியமர்ந்து பயணித்து, மணல்வெளி கடந்து, சேஷராயர் மண்டபத்தின் உள்ளே ஸ்ரீகோதண்டராமன் சந்நிதி அருகிலிருந்து வரிசையாகத் தங்கள் வாகனங்களை நிறுத்தி விட்டுச் செல்கின்றனர். சேஷராயர் மண்டபமா? இரு சக்கர வாகன நிறுத்துமிடமா? கோயிலின் உள் பகுதியில் வாகன மீதேறி உலா வருதல் சரியா? கோயில் இணை ஆணையரான (பொறுப்பு) ப. சிவக்குமார், பலமுறை மேற்கண்ட கோயிலின் உள்பாதை வழியாகவே அலுவலகக் காரில் தேவஸ்தான ஆபீஸ் வாசல் வரை வாகன உலா வந்திருக்கிறார். 'மேற்குறிப்பிட்ட பகுதிகள் யாவும் மகான்கள் உலவிய இடமெனக் கருதி, ஸ்ரீ இராமானுஜர் கூட, தன் வெற்றுப் பாதங்களால் நடந்து வரக் கூசிய பிரதேசம் எனச் சொல்கிறார்கள்' என்று ஆதங்கப் படுகிறார் நாராயண மோகன்ராம்.

'கோயில் வாசலில் பக்தர்களுக்கென இருக்கும் கட்டணக் கழிப்பிடம் போதிய பராமரிப்பு இல்லாதது. அதன் செப்டிக் டேங்க் கழிவு நீர் மிகுதியாகி தெருவெங்கும் பரவி விடுவதால், என் போன்ற எதிர்வரிசை வீட்டுக்காரர்கள் இங்கு குடியிருக்கவே முடியவில்லை. அதனை அடிக்கடி சுத்தப் படுத்தாமல் கோயில் நிர்வாகமும், மாநகராட்சியும் கண்ணாமூச்சி காட்டி எங்கள் ஆரோக்கியத்தைக் கெடுத்து வருகின்றன. இதனால் கோயில் நிர்வாகத்தின் மீது பொதுநல வழக்கொன்று தொடுத்து, இந்த ஒரு கழிப்பிட வசதியையும் மூடச் செய்து விட்டால் என்னவென்று தோன்றுகிறது!'' என்கிறார் ஆர். ரெங்கனாதம் (69), ஓய்வு, துணை இயக்குநர், கல்வித் துறை.



* நாராயண மோகன்ராம்



* எஸ். நடராஜன்

"சக்கரத்தாழ்வார் சந்நிதியின் வடபுறத்தில் ஒரு நந்தவனத்தின் உள்ளே இருப்பது அழகிய வசந்த மண்டபம். கோடையில் எட்டு நாள் உற்சவமாக தினசரி மாலை வேளைகளில் இதனுள் எழுந்தருளி, பக்தர்களுக்கு இரவு வரை ஸேவை சாதிப்பார் பெருமாள். வசந்த மண்டபத்தைச் சுற்றியுள்ள அகழியில் தண்ணீர் நிறைந்திருக்கும். ஜில்லென்று குளுமையுடன் வீற்றிருப்பார் பெருமாள். அந்த எழில்மிகு வசந்த மண்டபத்தை பத்து நாட்கள் முன்னதாக முற்றிலும் இடித்துத் தரை மட்டமாக்கி விட்டனர். இத்தனைக்கும் அதில் ஒரு விரிசல் இல்லை, பழுது இல்லை. ஏன் இடித்தார்கள் என்பதும் தெரியவில்லை. அதனை எவ்விதம் மாற்றி அமைக்கப் போகிறார்கள் என்றும் புரியவில்லை'' எனக் கவலை கொள்கிறார் காங்கிரஸ் பிரமுகரான பாதயாத்திரை எஸ். நடராஜன்.

"பாஞ்சராத்ர ஆகமத்தின் வழியிலான 'பாரமேஸ்வர ஸம்ஹிதை' மற்றும் 'பாத்ம ஸம்ஹிதை' ஆகிய சமஸ்கிருத நூல்களில் ஸ்ரீரங்கம் கோயிலுக்கென ஆகம விதிகள் அனைத்தும் குறிப்பிடப்பட்டுள்ளன. இங்கு பூஜா காலங்கள் அந்தந்த நேரத்தில் நடைபெறுவது இல்லை. திருமஞ்சனக் காலங்களில் பெருமாளுக்குக் கிரமப்படி திருமஞ்சனம் செய்யப்படுவது இல்லை. இவற்றுக்குக் கோயில் நிர்வாகத் தரப்பில் கூறப்படும் காரணங்கள் எதையும் ஏற்க முடியவில்லை. கடவுள் நம்பிக்கையின் அடிப்படையில் ஒரு பக்தனுக்கு சேவா காலங்

களில் பெருமாளை சேவிக்க எவ்வித தடையும் இருக்கக் கூடாது. கட்டணம் செலுத்தித்தான் அரங்கனை தரிசிக்க வேண்டுமென பக்தர்களை கோயில் நிர்வாகம் நிர்ப்பந்தப்படுத்துவது நியாயமில்லை. ஏனெனில் இது ஒரு பொருட்காட்சி மையம் அல்ல. சிறப்புக் கட்டணம் செலுத்தி தரிசிக்க விரும்புபவர்களிடம் கட்டணம் வசூலித்துக் கொள்ளட்டும். ஆனால் கோயில் நடை திறந்திருக்கும் எல்லா நேரங்களிலும் இலவச தரிசனம் என்பது தனி நபர் சிவில் உரிமைப்படி அனுமதிக்கப்பட வேண்டும்" என்று ஆணித்தரமாக சொல்கிறார் திருச்சி மாவட்ட ஹனுமன் சேனா அமைப்பாளர் ஆர். சுரேஷ்.

"பக்தர்கள் பெருமாளுக்கு நைவேத்யமாகப் படைப்பதில் தேங்காய்த் திருகல் அம்சை என்பதும் ஒன்றாகும். பண்டாரிகள் கொடி மரம் அருகே மண்டபத்தில் அமர்ந்திருப்பார். விரும்பும் பக்தர்களுக்கு தேங்காய்த் திருகல் அம்சை செய்வித்து, அதனை அவர்களே மூலஸ்தானம் வரை கொண்டு சென்று பட்டர்கள் வாயிலாக அரங்கனுக்குப் படைக்கச் செய்து, பின்னர் அந்தந்த பக்தர்களிடம் வழங்கி விடுவர். பெருமாளுக்கும் பக்தனுக்கும் இடையே ஒரு நூலிழை போல ஆத்மார்த்தமாக தரிசிக்க உதவிய வழிபாடு இது. கடந்த இருபது ஆண்டுகளாக கோயில் நிர்வாகம் இதனையும் ஏனோ தடை செய்துவிட்டது. மேலும் துவஜஸ்தம்ப பலி பீட திருமஞ்சனம் என்பது, ஒவ்வொரு ஆண்டிலும் பன்னிரண்டு நாள் நடைபெற்று வருவது. அதை ஆண்டு தோறும் செய்து வந்தால் நல்ல மழை பெய்து நாடு சுபிட்சமடையும் என்பது நம்பிக்கை. இந்த வழிபாடும் கடந்த பதினைந்து ஆண்டுகளாக கோயிலில் நடத்தப்படாமல் உள்ளது. ஆகமங்களையும், ஆலய வழிபாடுகளையும் கடந்த பல ஆண்டுகளில் ஒவ்வொன்றாகச் செயல்படுத்தத் தவறி வருகிறது கோயில் நிர்வாகம். அனைத்தையும் மீண்டும் நடைமுறைக்குக் கொண்டு வந்தால் போதும். அரங்கன் அனைவர்க்கும் நன்மைகள் செய்வார்" என உறுதியுடன் சொல்கிறார் ஸ்ரீரங்கம் நியூஸ் ஏஜெண்ட் ரா. ரங்கனாதன்.


● ஆர். சுரேஷ்


● ரா. ரங்கனாதன்

**வி**ளக்கம் பெறுவதற்காக கோயில் இணை ஆணையரை நேரில் சந்திக்க பலமுறை முயன்றோம். திருச்சி மண்டல இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின் இணை ஆணையராகப் பணியாற்றி வரும் ப. சிவக்குமார், கடந்த ஓராண்டாகக் கூடுதல் பொறுப்பாக ஸ்ரீரங்கம் கோயில் இணை ஆணையர் பணிகளையும் சேர்த்து கவனித்து வருகிறார். அவரை ஸ்ரீரங்கம் கோயிலில் சந்திக்க இயலவில்லை. அதனால் திருச்சி மண்டல இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை அலுவலகத்தின் தொலைபேசி எண்ணுடன் தொடர்பு கொண்டோம். இணை ஆணையர் அருகிருந்தபோதிலும் மேனேஜர் எனப்படுபவரே நம்மிடமிருந்து வார்த்தைகளை வாங்கி, இணை ஆணையரிடம் தெரிவித்து நமக்கு பதில் தந்து பேசிக் கொண்டிருந்தார். பேட்டி எதுவும் கொடுக்க கோயில் இணை ஆணையர்க்கு விருப்பமில்லை என்றும், வேறு விஷயமாக தாங்கள் (நிருபர்) சந்திக்க விரும்பினால் மட்டும் நேரம் ஒதுக்கித் தரப்படுமென்றும் மேனேஜர் வாயிலாக பதில் கிடைத்தது. பேட்டி தவிர 'வேறு விஷயம்' இல்லையென்பதால் அத்துடன் முடித்துக் கொண்டோம்.

ஸ்ரீரங்கம் கோயில் ஜீயர் மடத்தின் ஐம்பதாவது பட்டம் ஸ்ரீரெங்க நாராயண ஜீயர் ஸ்வாமிகளை அவர்களது இருப்பிடத்தில் நேரில் சந்தித்தோம். தமக்கு உடல்நிலை சரியில்லையென்றும், தற்போது விளக்கங்கள் ஏதும் கூற இயலாது என்றும் பதிலளித்தார் ஸ்ரீரெங்க நாராயண ஜீயர் ஸ்வாமிகள்.

கட்டுரை, படங்கள்:
ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

-தமிழ்நாடு முதலீட்டில் முதல் இடமா?

# "ஜெ. சொல்வது சரியல்ல!"

"உற்பத்தித் துறையில் முதலீடு செய்வதில், கடந்த ஜனவரி மாதம் வரை, தமிழ்நாடு இந்தியாவிலேயே முதல் இடத்தில் இருக்கிறது என்று முதலமைச்சர் ஜெயலலிதா சட்டமன்றத்தில் கூறியது வியப்பாக இருக்கிறது" என்கிறார் என்.எஸ். வெங்கட்ராமன். இவர் பன்னாட்டு நிறுவனங்களில் பணியாற்றியவர். தந்திவி கன்சல்டன்ஸி சென்டர் என்ற கெமிகல் எஞ்சினியரிங் துறை ஆலோசகர். சமூக சேவகர். அவரைப் பேட்டி கண்டபோது

● முதலமைச்சரின் கூற்று உண்மையல்ல என்று எப்படிச் சொல்லுகிறீர்கள்?

முதலமைச்சரின் அறிவிப்பு, இந்தியப் பொருளாதாரக் கண்காணிப்பு மையம் – சென்டர் ஃபார் மானிடரிங் இண்டியன் எகானமி – வெளியிட்ட ஆய்வறிக்கையின் அடிப்படையில் அமைந்ததாகச் சொல்கிறார். அப்படியும் கூட, இந்த ஆய்வறிக்கை அறிவிக்கப்பட்ட தொழில்களின் திட்டத்தை ஆதாரமாகக் கொண்டது. அதாவது, நிறைவேறாத பல பிராஜெக்ட்டுகளைப் பற்றி எதுவும் கூறவில்லை.

● அப்படி என்னென்ன நிறைவேறாத திட்டங்கள்?

நாகார்ஜுனா நிறுவனத்தின் மூவாயிரம் கோடி ரூபாய் பெட்ரோலிய இரசாயனக் கலவை ஆலை, கடலூரில் தொடங்கப்படாமலேயே இருக்கிறது. நானூற்றைம்பது ஏக்கர் நிலம் இதற்காக ஒதுக்கப்பட்டது. முந்நூற்றைம்பது கோடி ரூபாய்க்கு இயந்திரங்களும், கருவிகளும் வாங்கப்பட்டன. ஆரம்பக் கட்டப் பணிகளுக்கான ஆயிரத்து ஐந்நூறு கோடி ரூபாய் நிதி வசதி பெற முடியாததால், திட்டம் அப்படியே நின்று போய்க் கிடக்கிறது. அறிவித்து விட்டால் மட்டும் போதுமா? ஏன் நின்று போயிற்று? அரசு மேற்கொண்டு என்ன செய்ய வேண்டும் என்று கேட்க வேண்டாமா? திட்டம் வருமா, வராதா என்று பலத்த சந்தேகம் எழுந்துள்ள நிலையில், அரசு இதைக் கண்டு கொண்டதாகவே தெரியவில்லை.



• என்.எஸ். வெங்கட்ராமன்

அடுத்ததாக, கெம்ப்ளாஸ்ட் சன்மார் நிறுவனம் ஆயிரம் கோடி ரூபாய் முதலீட்டில், பிவிசி பிராஜக்ட் ஒன்றை கடலூரில் நிறுவ முன் வந்தது. பெரிய அளவில் ஆன 65,000 டன் பாலிவினைல் குளோரைடு தொழிற்சாலை இது. ஆனால் தமிழ்நாடு மாசுக் கட்டுப்பாட்டு வாரியம் இதற்கு அனுமதி தர மறுத்துவிட்டது. இழுத்தடித்த பிறகு இதே ஆலையை இப்போது ஆந்திர மாநிலம் தடாவில் நிறுவ, முதல்வர் சந்திரபாபு நாயுடு வரவேற்கவே, இந்த பிராஜக்ட் அண்டை மாநிலத்துக்குப் போய்விட்டது.

● சரி, இவை மட்டும் தானா? வேறு இன்னும் இருக்கிறதா?

ஸ்பிக் நிறுவனம் ஆயிரத்து ஐந்நூறு கோடி ரூபாய் முதலீட்டில் ஒரு பிடிஏ (Purified Terephthalic Acid) பிராஜக்ட்டைத் தொடங்கியது. சுமார் இருநூற்றைம்பது கோடி ரூபாய் இது வரை இதற்காகச் செலவழித்தும் ஆயிற்று. இப்போது திட்டம் கைவிடப் பட்டுவிட்டது!

தனியார் மின் உற்பத்தித் திட்டங்கள் அறிவிக்கப்பட்டு, பிறகு கைவிடப்பட்டு விட்டன. ஒரு நிறுவனத்திடம் தமிழ்நாடு



'ஷெட்டு'கள் மூடப்பட்டுத் தான் இருக்கின்றன. ஒரு விதமான இயக்கமும் இல்லை. இந்த நிலைமையில் இன்னொரு தொழில்நுட்பப் பூங்காவைத் திட்டமிட வேண்டிய அவசியம் என்ன என்று புரியவில்லை. எம்.எஸ். சுவாமிநாதன் ஆராய்ச்சி நிறுவனத்தின் ஆதரவோடு தொடங்கப்பட்ட, சிறுசேரியில் உள்ள பூங்கா, செயல்படாமல் போனது ஏன் என்று ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? அதை அறியாமல் இன்னொன்று திறப்பானேன்?

மின்சார வாரியம், வாங்கிய மின்சாரத்துக்குப் பணம் கொடுக்காததால், அந்த நிறுவனமே மூடப்பட்டுவிட்டது.

மிகப் பெரிய டைட்டேனியம் – டை – ஆக்ஸைடு திட்டம் தூத்துக்குடியில் வரப் போவதாகப் பல தடவை அறிவித்தும், துவங்கப்படவே இல்லை. இப்போது டாடா நிறுவனம் மீண்டும் அதைத் தொடங்கும் என்ற அறிவிப்பு வந்தாலும், வருமா வராதா என்று நிச்சயமாகச் சொல்வதற்கு இல்லை.

இதற்குத் தேவையான கச்சாப் பொருள் இல்மனைட் என்ற கனிமம். நாகர்கோயில் – கன்யாகுமாரி வரம்பில் சுமார் இருபத்தி நான்கு கிலோ மீட்டருக்கு இது கிடைக்கிறது. நான்காயிரம் கோடி ரூபாய் முதலீட்டில் இந்த ஆலை இயங்கும் என்று பல காலமாகச் சொல்லப்பட்டாலும், இதுவரை அதற்கான அறிகுறி எதுவும் தென்படவில்லை. கேரள மாநிலத்தில் ஏற்கெனவே இதே போன்ற இரண்டு ஆலைகள் இயங்கி வருகின்றன.

● முதல்வர் இன்னொரு உயிரியல் தொழில்நுட்பப் பூங்காவைத் திறந்து வைத்திருக்கிறாரே? முதலில் திறந்தது என்ன ஆயிற்று?

முதலில் திறந்து வைத்தது, பெண்களுக்காக மட்டும் திறக்கப்பட்ட உயிரியல் தொழில்நுட்பப் பூங்கா. இது சென்னையை அடுத்த சிறுசேரியில் அமைந்திருக்கிறது. இதில் பல

● அப்படியானால், முதலமைச்சரின் விருப்பப்படி தமிழ்நாடு தொழில் முதலீட்டில் முன்னணியில் நிற்க என்ன செய்ய வேண்டும்?

தமிழ்நாட்டில் விவசாயிகளின் நிலைமை மிகவும் மோசமாக இருக்கிறது. காரணம், விளைபொருட்களின் விலை வீழ்ச்சி. மேலும், அரசாங்க தானியக் கிடங்குகள் நிரம்பி இருக்கின்றன. அரசு நெல் கொள்முதல் செய்யும் நிலையில் இல்லை. எனவே, மழை பெய்து விளைச்சல் கூடியிருந்தாலும், விவசாயிகளின் நிலைமையில் மாற்றம் எதுவும் நிகழ்ந்திருக்காது. விவசாயிகள் இப்போதிருக்கிற பொருளாதாரச் சிக்கலிலிருந்து விடுபட வேண்டுமானால், மூலிகைப் பயிர் சாகுபடி மூலம் மட்டுமே அது முடியும். இந்திய மூலிகை வகைகள் சுமார் நாற்பத்தைந்தாயிரத்துக்கு மேல் இருக்கின்றன. சீனா இருபத்திரண்டாயிரம் கோடி ரூபாய்க்கு மூலிகை ஏற்றுமதி செய்யும்போது, நாம் வெறும் ஐந்நூறு கோடி ரூபாய்க்கு மட்டுமே ஏற்றுமதி செய்கிறோம். மூலிகைத் தொழில் மட்டும் விரிவடையுமானால், கெமிஸ்ட்ரி, பாட்டனி, வேளாண்மை, எஞ்சினியரிங், தொழில்நுட்பம், நிர்வாகம், டாக்ஸிகாலஜி டெஸ்ட்டிங், ஃபார்மகாலஜி, விற்பனைத் துறை என்று பல பிரிவுகள் மேம்பாடு அடைந்து வேலை வாய்ப்புகளும் பெருகும்.



தரிசு நில மேம்பாட்டில் இப்போது கவனம் செலுத்தும் தமிழக அரசு, காட்டாமணக்குச் செடிகளைப் பயிரிட்டு, அதன் எண்ணெயை டீசலுடன் கலந்து, டீசல் உபயோகத்தை மிச்சப்படுத்தலாம். இந்தத் தரிசு நில மேம்பாட்டில் காட்டாமணக்கிலிருந்து தயாரிக்கப் படும் எண்ணெயைப் பற்றி விரைந்து ஒரு முடிவு எடுக்க வேண்டும். ஏனென்றால், க்யோடா புரோடோகால் ஒப்பந்தப்படி 2012 வரையே இந்தியாவுக்கு 'கார்பன் டிரேடிங்' என்ற சலுகையைப் பயன்படுத்த இயலும். காட்டாமணக்கு வளர்ந்து பலன் தர ஆறு – ஏழு வருடங்கள் ஆகும். எனவே இதை விரைவில் செயல்படுத்த வேண்டும். தரிசு நிலத்தைப் பரியிட்டுப் பயன்படுத்துவோம் என்று அறிவித்தால் மட்டும் போதுமா? அடுத்து



''தீ பிடிக்காத, வழியில் கவுந்து விழாத ரயிலாப் பார்த்து ஒரு டிக்கெட் கொடுங்க!''

– எஸ். மோகன்

என்ன செய்ய வேண்டும் என்று அரசு முடி வெடுத்துச் செயல்படுத்த வேண்டாமா?

சேலத்தில் ஜவ்வரிசி தயாரிக்கும் ஸ்டார்ச் தொழிற்சாலைகள் ஒவ்வொன்றாக இழுத்து மூடப்பட்டு வருகின்றன. இங்கே ஆயிரத்து ஐந்நூறு கோடி ரூபாய் வரை முதலீடு செய்ய வாய்ப்பு இருக்கிறது. மரவள்ளிக் கிழங்கிலிருந்து ஸ்டார்ச், ஸார்பிடால், குளுகோஸ், டெக்ஸ்ட் ரோஸ், வைட்டமின் – சி என்று பல பொருள்கள் தயாரிக்கலாம். இவற்றுக்கு உலகம் முழுக்கச் சந்தை இருக்கிறது. இது பற்றிய கருத்தரங்கம் நடத்தியபோது, சேகோசெர்வ் அமைப்பின் தலைவரான ஐ.ஏ.எஸ். அதிகாரி, அதில் கலந்து கொள்ளவே இல்லை!

கரும்பு பயிரிட்டுச் சர்க்கரை ஆலை களுக்கு வழங்கும் மகாராஷ்டிரா, உத்தரப் பிரதேசம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களில், பெட்ரோலுடன் கலந்து பயன்படுத்த 'எத்னால்' தயாரிக்கலாம் என்று முடிவு செய்யப்பட்டது. இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன் இதற்குத் தயார் நிலையில் இருந்தது. மகாராஷ்டிரா, உ.பி. இரண்டும் இதைச் செயல்படுத்தத் தொடங்கி யும், தமிழ்நாட்டில் மட்டும் இதற்கான அனுமதி இன்னும் வழங்கப்படாதது ஏன் என்பது மர்மமாகவே இருக்கிறது. இதனால் ஐஓசி. தன் குறியீட்டை எட்ட முடியவும் இல்லை.

● மூலிகை உற்பத்தி செய்தால் மட்டும், விவசாயிகள் பலன் அடைந்துவிட முடியுமா? விற்பனைக்குத் திணற மாட்டார்களா?

அரசு தலையிட்டுச் செய்ய வேண்டும். 'ஸென்னா' இலைகள் மலச்சிக்கலுக்கு மாற் றான மருந்து தயாரிக்க உதவும். இதை கிலோ ஒரு ரூபாய்க்கும், ஒன்றரை ரூபாய்க்கும் தரகர் களிடம் விற்று விடும் விவசாயிகள் இருக் கிறார்கள். அவர்களை ஏமாற்றிக் கொள்ளை லாபம் சம்பாதிப்பதை அரசுதான் தடுக்க வேண்டும்.

மூலிகை விவசாயத்தைப் பற்றி அமைச் சர்களும், முதல்வரும் நிறையப் பேசினாலும், இது துவக்க நிலையிலேயே இன்னும் இழுக்கிறது. இது பற்றிய கருத்தரங்குகளில் பேசிவிட்டுப் போனால் மட்டுமே இதில் உள்ள சிக்கலைப் போக்க முடியாது. மூலிகைகளைப் பற்றி சித்தர் பாடியிருக்கிறார், திருவள்ளுவர் பாடியிருக்கிறார் என்று பேசிவிட்டு அமர்வ தால் என்ன பலன்?

'எத்னால்' பற்றிக் குறிப்பிட்டேன் அல் லவா? அமெரிக்காவில் அதே போல் சோயா சாகுபடி விவசாயிகளின் நஷ்டத்தைப் போக்க, அதிலிருந்து எண்ணெய் தயாரிக்க அங்கு அரசு உதவுகிறது. ஒரு கருத்தரங்கில் கிளிண்டன் கலந்து கொண்டபோது, எட்டு மணி நேரம் அங்கேயே இருந்து உன்னிப்பாகக் கவனித்தா ராம். இந்த எண்ணெயை டீசலுடன் கலக்க லாம்.

**வெ**ங்கட்ராமன் ஆதங்கப்படுவது எல்லாம் குஜராத்தும், மகாராஷ்டிராவும் LNG பிராஜக்டிலும் PTA பிராஜக்டிலும் எந்தவிதச் சிக்கலும் இல்லாமல் செயல்பட்டு இலாபம் ஈட்டிக் கொண்டிருக்கும்போது, தமிழ்நாட்டில் மட்டும் ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி இவை தடைப்படுவது ஏன் என்பதுதான். 'தேவையான நிலமும், சலுகைகளும் கொடுக் கப்பட்டால், உள்ளூர் வேலைவாய்ப்புகள் பெருகும் அல்லவா' என்கிறார். இந்த மாதிரி விஷயங்களில் எல்லாம் சந்திரபாபு நாயுடு முந்திக் கொண்டு, செயல்பட்டு வருவதைச் சுட்டிக் காட்டுகிறார்.

சந்திப்பு : **சாருகேசி**

# மூட்டு வலி! மூட்டு வலி! மூட்டு வலி!

பல வருட வேதனை
சில நாட்களில் பக்க
விளைவுகள் இல்லாத
முழுமையான ஆற்றல்

அசமந்த ஓமம்
(Celery Seeds)
ஆஸ்திரேலியாவின்
விஞ்ஞானப் புரட்சி
இப்பொழுது இந்தியக்
கூட்டு முயற்சி



Mr. K. V. Mahaadevan
Old No. 2, New No. 3,
1st Avenue, Ashok Nagar,
Chennai - 600 083.

# ஆர்தோக்யூர்®






Product of
**NATURE REMEDIES (P) LIMITED**
CHENNAI-600 083

MARKETED BY:




CHENNAI-600083
PH: 044 2489 3013
044 2471 1719

இப்பொழுது தமிழகம் மற்றும்
*கர்நாடகம் எங்கும் கிடைக்கும்

*Super stockist for Karnataka:
**ARIES MARKETING**, Bangalore - 560010.
Ph: 3526356, Mobile: 9844152615.

## STOCKISTS

| | | |
|---|---|---|
| Chinmaya Nagar | Vasantha Enterprises | 24795251 |
| Sowcarpet | Srinath Medical Agencies | 25352799 |
| Annanagar | Perfect Medical Enterprises | 26150253 |
| Teynampet | Prism Pharmaceuticals | 24338456 |
| Mylapore | S.V.S.Agencies | 24941057 |
| Perambur | Kumaran Pharma Agencies | 26704265 |
| Tiruvottiyur | Kumaran Agencies | 25734336 |
| Tambaram(W) | Sri Saravana Pharma | 22263890 |
| Nanganallur | Sunmoon Enterprises | 22310186 |
| Pallavaram | Ganesh Agencies | 22402159 |
| Pudukkottai | A.V.Medical Agencies | 220181 |
| Dindigul | Alagappa Agencies | 2433914 |
| Palani | Best Medical Agencies | 245049 |
| Mayiladuthurai | Chellas Enterprises | 243272 |
| Madurai | Dhanalakshmi & company | 2621421 |
| | Sri Pushpa Agencies | 2630371 |
| Nagapattinam | Eagammal Agencies | 220983 |
| Krishnagiri | Kuttappa Agencies | 231211 |
| Tirupur | Kumaran Pharma | 2427193 |
| Kanchipuram | Kanagavalli Pharma | 220326 |
| Karaikal | Maragatham Medicals | 222079 |
| Coimbatore | M.S.Agencies | 2491554 |
| Thiruvallur | Medicare Agencies | 264997 |
| Arakonam | Murugan Pharma | 224225 |
| Tiruvannamalai | Mohana Agencies | 227689 |

| | | |
|---|---|---|
| Tiruvarur | Maharaja Traders | 222894 |
| Pollachi | Pharmaceutical Services | 220435 |
| Pondycherry | Pharm House | 2212001 |
| Cuddalore | Arcot Agencies | 230592 |
| Tindivanam | P.R.R.Pharma | 224313 |
| Karur | Showraa Agencies | 236573 |
| Thanjavur | Sidharth Pharma | 224024 |
| Vandavasi | Srinivasa Medicals | 225135 |
| Chengalpattu | State Pharma Distributors | 222159 |
| Kumbakonam | Sri Bargavi Agencies | 2426426 |
| Ranipet | Sri Rajeswari Pharma | 222788 |
| Villupuram | Saraswathi Agencies | 224224 |
| Tirupattur | Srinivasa Pharma | 227498 |
| Tirunelveli | SPM Medical mart | 2333801 |
| Erode | Shri Ramana Medical Agencies | 2253421 |
| | ESS Jay Agencies | 2268855 |
| Chidambaram | Salamia Distributors | 220871 |
| Arni | Sri Guna & Company | 226470 |
| Nagercoil | Saravana Pharmaceutical | 232341 |
| Trichy | Uthra Marketing | 2760542 |
| | V.R.Agencies | 2740933 |
| Salem | Vinayaga Agencies | 2266098 |



# லேசா... லேசா!

தலைப்பை உச்சரிக்கும்போதே ஒற்றை இறகால் வருடியது போலிருக்கிறது. ஆனால் சுமை... சுமை... எனத் தலைப்புச் சூட்டியிருக்கலாம். காரணம், படத்தில் கதை அல்ல, கதைகள். ஊட்டியில் அநாதையாக இருக்கும் பணக்கார இளைஞர் ஷாம், அவரது போர்ஜரி நண்பர் விவேக் நட்பு ஒரு கதை.

விவேக்கின் பெயரைச் சொல்லிக் கொண்டு ஷாம் வீட்டுக்கு கோடை விடுமுறையைக் கழிக்க வரும் த்ரிஷா அண்ட் ஃபேமிலியின் டார்ச்சர் ஒரு கதை. விடுமுறைக்கு வந்த யுவதிகளில், விவேக்கை காதலிப்பதாய் மொட்டைக் கடுதாசி போட்டவரைக் கண்டுபிடிக்க ஷாமும், விவேக்கும் போடும் திட்டங்கள் ஒரு கதை. த்ரிஷாவிடம் மனத்தைப் பறி கொடுக்கும் ஷாமிடம், தனக்குக் கல்யாணம் ஆகிவிட்டது என்று தாலியைத் தூக்கிக் காட்டி, தமது கல்லூரி ஃப்ளாஷ்பேக்கை ஓபன் பண்ணுவது தனிக்கதை.

இப்படி சீக்குவன்சுக்கு ஒரு கதை வீதம் நமக்கு வதை. (தமிழ் சினிமாவில் கதை அம்சம் இல்லையென்று யார் சொன்னது...!) இதை ஹாரிஸ் ஜெயராஜின் அட்டகாசமான இசையும், திருவின் திகட்டாத ஒளிப்பதிவும் ஈடுகட்டி விடுவதில் படம் கடைசி வரை இளமைத் திருவிழாவாகி விடுகிறது.

இடைவேளைவரை கதாநாயகன் ஷாமா? இல்லை விவேக்கா? என்று சந்தேகம் வரும் அளவுக்கு, பல கதாபாத்திரங்களை இயக்குனர் கட்டுப்படுத்தாதது படத்தில் பெரும் குறை.

ஃப்ளாஷ்பேக்கில் நாட்டு வெடிகுண்டு வீசும் முரட்டுப் பேராசிரியராக வந்து, ஐம்பது நிமிடப் படத்தை தூக்கி நிறுத்திவிட்டுப் போகும் மாதவன்தான் ஹீரோ என்று கடைசியில் முடிவுக்கு வர வேண்டியுள்ளது.

சீனிவாசன், வி.எம்.சி. ஹனிபா, இன்னோசண்ட் என மூன்று மலையாள நடிகர்கள் கதையோடு ஒட்டிய நகைச்சுவையில் பிய்த்து உதறி, விவேக்கை ப்பூ! என்று ஊதித் தள்ளி விடுகிறார்கள்.

இசை, ஒளிப்பதிவு, தவிர 'பிரமாதம்' என்று சொல்ல வைக்கிறது சாபுசிரிலின் கலை இயக்கம். 'கதை சொல்லும் விதத்தில் கலக்கிடுவார்ப்பா'' என்று விமர்சிக்கப்படும் ப்ரியதர்ஷன், இந்தப் படத்தைப் பொறுத்தவரை பேக் அப்!

- விஷ்ணுவல்தாசன்

● ஆவரெஜ்

# வேலையை நேசியுங்கள்!

ஆர்.கண்ணன்

திங்கட் கிழமை காலைப் பொழுது விடிகிறது என்றாலே சிலருக்கு வயிற்றைக் கலக்கும். சனி – ஞாயிறு விடுமுறையை ஜாலியாகக் கழித்துவிட்டு, திங்கட் கிழமை அலுவலகம் போக வேண்டும் என்றாலே, 'அடடா, இன்றைக்கும் ஏதாவது விடுமுறையாக இருக்கக் கூடாதா!' என்று நினைக்கத் தோன்றும்.

வேலையில் சேர்ந்த புதிதில் இருந்த உற்சாகமும், மகிழ்ச்சியும் உங்களிடம் எப்போது டாடா சொல்லிவிட்டுப் போயின? 'ஸ்டேட்மெண்ட் தானே ரெடி பண்ணணும்? கொடுங்க இப்படி! அரை மணியிலே தயார் பண்ணிடறேன்' என்று நீங்களாக வலுவில் போய் வாங்கிச் செய்த உற்சாகம் என்ன ஆயிற்று? நாளாக ஆக, எல்லாமே மாறிப் போய்விட்ட மாதிரி இருக்கும். எப்போதுடா வெள்ளிக் கிழமை மாலை வரும் என்று வார ஆரம்பத்திலேயே எண்ணத் தோன்றும். ரொம்பவும் முறைக்கிற மானேஜரா? அலுவலக அரசியலா? வேலை போர் அடிக்கிறதா? எதுவாக இருந்தாலும் அப்படியே அவற்றை ஒதுக்கி வையுங்கள். உங்கள் வேலையை ரசிக்கக் கற்றுக் கொள்ளுங்கள்.

அடுத்த மேசையில் வேலையைக் குவித்துக் கொண்டு முடியைப் பிய்த்துக் கொண்டிருப்பார் உங்கள் சக ஊழியர் ராஜா. "இங்கே கொஞ்சம் தள்ளி விடுங்க, ராஜா. ஐ வில் ஹெல்ப் யு'' என்று அவரிடம் சொல்லிப் பாருங்கள்.



எப்படிச் செய்ய வேண்டும் என்று அவர் சொல்லிக் கொடுத்து விட்டால், அந்தப் புதிய வேலையை முடிப்பதில் உள்ள சவாலிலும், சந்தோஷத்திலும் உங்களுக்கு நேரம் பறப்பதே தெரியாது. உங்களுக்கு ஒரு புது உற்சாகம் பிறப்பது

இருக்கட்டும்; நிறுவனத்துக்கு அது எப்படி உதவுகிறது! உங்களுக்கும் சக ஊழியர் ராஜாவுக்கும் இடையே நட்பு இன்னும் விரிவடையும்



அல்லவா?

"ஆமா, என்ன செஞ்சு என்ன, ஒரு பாராட்டா, ஒரு தாங்க்ஸா, ஹூம், ஒண்ணும் கிடையாது!" என்று முணுமுணுப்பதை மூட்டை கட்டி வையுங்கள். வேறு ஒருவர் உங்களை உற்சாகப்படுத்தி, 'மோட்டிவேட்' பண்ண வேண்டும் என்று எதிர்பார்க்காதீர்கள். உங்கள் வேலையை நீங்கள் திருப்திகரமாக முடித்து விட்டாலே ஒரு தனி மகிழ்ச்சி உண்டாகிறது இல்லையா? உங்கள் திறமையையும், பலத்தையும் அந்தக் கணத்தில் அவை உணர்த்துகின்றபோது ஏற்படுகிற மன நிறைவுக்கு ஈடாக எதுவும் இல்லை என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். உங்கள் முதுகில் நீங்களே தட்டிக் கொடுத்துக் கொண்டாலும் தவறே இல்லை!

உங்கள் வேலையில் குற்றம் குறை கண்டு பிடித்தால் முகம் சுளித்துக் கொள்ளாதீர்கள். அதில் நியாயம் இருக்கிறதா என்று ஆராயுங்கள். நண்பர்களிடம் கேளுங்கள். குற்றம் கண்டுபிடித்து விட்டாரே என்பதற்காக உங்களைப் பாதுகாத்துக் கொள்ளும் வழிகளைத் தேட வேண்டாம். குற்றம் கூறியவர் நல்ல நோக்கத்தோடு கூறியிருந்தால், உங்கள் பணிக்கும், உங்கள் முன்னேற்றத்துக்கும் அது நிச்சயம் உதவும். இல்லை, உங்களைச் சும்மா சீண்டுவதற்காகக் குறை சொல்லியிருந்தால் அதைக் கண்டு கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. அதைப் பற்றி நினைத்துக் கொண்டு அவஸ்தைப் படவே வேண்டாம்!

இப்போதெல்லாம் புதிதாக 'ஆபீஸ் பாலிடிக்ஸ்' எல்லா அலுவலகங்களிலும் இடம் பிடித்துக் கொண்டிருக்கிறது. அவற்றைச் சொல்லிச் சொல்லி ஆதங்கப்படுவதைவிட, அதில் சிக்கிக் கொள்ளாமல் உறுதியாக இருங்கள். அப்படி இருப்பது ஒரு சவால் மாதிரிதான். ஆனால் எத்தனை பேர், அப்படிப்பட்ட சூழலில் சிக்கிக் கொள்ளாமல், புன்னகையோடு சமாளிக்கிறார்கள் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

சக ஊழியர்களுடன் சுமுகமான உறவு வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் பிறருக்கு உதவும் தருணங்களும், அவர்கள் உங்களுக்கு உதவும் தருணங்களும் இது போன்ற 'பாஸிடிவ் ரிலேஷன்ஷிப்'பை வலுப்படுத்தும். (சிலர் விஷயத்தில் இது, உணவு இடைவேளையின்போது சர்வ சுதந்தரத்துடன் டிபன் பாக்ஸிலிருந்து பரஸ்பரம் எடுத்து உண்ணும் செய்கையோடு முடிந்துவிடும்!) உங்களைச் சுற்றி ஒரு வட்டம் போட்டுக் கொண்டு அதற்குள்ளேயே இருந்துவிடப் பார்க்காதீர்கள். அடுத்தவர் பணியையும், இழுத்துப் போட்டுக் கொண்டு செய்யாவிட்டாலும், கூடுமானவரை உங்கள் அவகாசத்தைப் பொறுத்து, கேட்டு வாங்கிச் செய்யுங்கள். அவன் ஒரு 'டீம் பிளேயர்' என்ற விருதை விட வேறு என்ன வேண்டும்?

வேலையில் மகிழ்ச்சி காண வேண்டும் என்றால், கூடுதல் பொறுப்புக்களைச் சுமக்கத் தயங்கக் கூடாது. தவறுகளைக் கண்டு பிடிப்பதில் நேரம் செலவழிப்பதைவிட, பாஸிடிவ் ஆகத் தெரியும் உண்மைகளைப் பாராட்டி எடுத்துச் சொல்லுங்கள்.

வெற்றிகரமான எந்த நபரையும் பாருங்கள்: அவர் தம் வேலையை மட்டுமல்லாமல், தமது வாழ்க்கையையும் நேசிக்கும் மனிதராக இருப்பார். ஒரு சிலர் தவிர, இவர்கள் எல்லோருமே பாஸிடிவ் சிந்தனை உள்ளவராகவே இருக்கிறார்கள். அப்படி இருப்பது ஏதோ தற்செயலாக நிகழ்வதல்ல. அவர்களுக்குள் இருக்கும் உற்சாகமும், ஊக்கமுமே அவர்களை அப்படி உருவாக்கியிருக்கின்றன. அவர்கள் அவற்றுக்காகக் காத்திருக்கவில்லை.




**பா**ஸிடிவ் சிந்தனையை வளர்த்துக் கொள்ளுவது என்றால், சிலர் கண்மூடித்தனமான நம்பிக்கையை ஏற்படுத்திக் கொள்ளுவது என்று தவறாக நினைக்கிறார்கள். வாழ்க்கையில் நேரும் சவால்களைக் கண்டுகொள்ளாமல் இருப்பதல்ல பாஸிடிவ் சிந்தனை; அதையே நினைத்து அதிலேயே உழன்று கொண்டிருக்க வேண்டாமே?

விஷயம் கொஞ்சம் கை மீறிப் போகும்

போல் தோன்றினால் கலவரம் அடையாமல் இருக்க, பாஸிடிவ் சிந்தனை நிச்சயம் உதவும். 'என்னால் இதைத் தீர்க்க முடியும்!' என்று உங்களுக்குள் உறுதியாகச் சொல்லிக் கொள்ளுங்கள். 'ஒரு வழி கண்டுபிடித்து விட்டுத்தான் மறு வேலை' என்று உறுதி கொள்ளுங்கள். யாரால் பிரச்னை எழுந்தது என்று குடைந்து கொள்ளாமல், தீர்வு என்ன என்பதைக் காண்பதில் கவனமும் அக்கறையும் செலுத்துங்கள்.

கடினமான சூழ்நிலையில், உங்கள் மனப்போக்கு மாறி விடுமோ என்ற சிந்தனைக்கு இடம் கொடுக்காதீர்கள். உங்கள் பாஸிடிவ் சிந்தனைதான் உங்கள் செயலைத் தீர்மானிக்கிறது. அந்தச் செயல் பயனுள்ளதாக இருக்க வேண்டாமா? 'எல்லாம் நம் மனசில்தான் இருக்கிறது' என்று நினைத்துக் கொள்ளுங்கள். உற்சாக ஊற்று உங்களுக்குள்ளே பொங்கிப் பெருகுவதை உணருவீர்கள்!




"இல்லே சார், நீங்க பாட்டுக்குச் சொல்லிட்டுப் போயிடுவீங்க. வேலை பார்க்கிற எனக்குத்தான் கஷ்டம் தெரியும்!" என்று சொல்லுபவர்களும் இருக்கிறார்கள்.

ஒரே வேலையில் தொடர்ந்து பல வருடங்கள் இருப்பது என்பதே இப்போது அபூர்வமாக இருக்கிறது. "இருபத்தைந்து வருட சர்வீசுக்காக இந்த வாட்ச் கொடுத்தாங்க எங்க கம்பெனியிலே!" என்றால், "ட்வெண்டிஃபைவ் இயர்ஸ்? எப்படிடா இருந்தே ஒரே கம்பெனியிலே?" என்று ஏதோ அதிசயப் பிராணியைப் பார்ப்பது போல் பார்க்கிறார்கள், இளைய தலைமுறையைச் சேர்ந்தவர்கள்.

**'நா**ன் பார்த்த வேலை அப்படி ஒன்றும் என் திறமைக்குச் சவாலாக இருக்கவில்லை. அப்படி இருந்தால்தானே பதவி உயர்வுக்கும் வாய்ப்பு இருக்கும்?' என்று பதில் சொல்லுபவரைத் தான் அந்தப் புதிய நிறுவனத்தின் அதிகாரி இருகரம் நீட்டி வரவேற்பார்.

நிறுவனங்கள் இப்போதெல்லாம் சாதாரண வேலை செய்பவரை எதிர்பார்ப்பதில்லை. பலவகை அனுபவங்களைத் தம் பணிக்குக் கொண்டு வரும் நபர்களைத்தான் எதிர்பார்க்கிறார்கள். ஒரு வேலையிலிருந்து இன்னொரு வேலைக்கு மாறும்போது, அதிக அனுபவம் மட்டுமே நீங்கள் பெறுவதில்லை. புதிய சூழலில் வேலை பார்க்கிற சவாலையும் சந்திக்கிறீர்கள். ஒவ்வொரு முறை மாறும்போதும் இந்தச் சவாலை எதிர்கொள்ள நீங்கள் தயாரா என்பதை யோசித்துப் பாருங்கள்!

உங்கள் முழுத் திறனையும் உபயோகிக்கிற வாய்ப்பு இருக்கிறதா என்று பாருங்கள். இன்னொரு வேலைக்குப் போவது என்று தீர்மானித்த பிறகு, அதைச் செவ்வனே செய்யுங்கள். 'எக்ஸிட் வித் க்ரேஸ்' என்பார்களே, அதை நினைவு வைத்துக் கொள்ளுங்கள்.

சுமுகமாக விலகுங்கள். நீங்கள் ஏன் விலகுகிறீர்கள் என்பதைக் கூடுமானவரை புரிந்து கொள்ள வையுங்கள். உங்கள் மேஜையின் மீதமிருக்கும் பணியைக் கூடியவரை முடித்து வைப்பதோடு, உங்களுக்குப் பதிலாக நியமிக்கப்படும் நபர் வரும்வரை காத்திருந்து, அவருக்கு உங்கள் பணியில் பயிற்சி அளியுங்கள். (ஓர் இளம் அதிகாரி புதிய வேலையில் சேர இரண்டு நாள் தாமதம் ஆகியது. காரணம், தமக்குப் பதிலாக வந்தவரை அவர் பழக்க வேண்டியிருந்தது. புதிய அலுவலக அதிகாரியிடம் இதை வெளியிட்டபோது, அவர் அதைப் பாராட்டிய சம்பவம் உண்டு!) பழைய தொடர்புகளைத் துண்டித்துக் கொள்ளுவதைவிட, தொடருவதுதான் உங்களுக்குப் பிற்காலத்தில் உதவும்!

வேலையை விட்டு இன்னொரு வேலைக்குத் தாவும் 'ஜாப் ஷாப்பிங்', மிகத் திறமை வாய்ந்த ஊழியர்களிடம் வெகு சகஜம். நீண்ட நாளைய உத்தியோக அனுபவம்தான் முக்கியம் என்று கருதுபவர்கள், ஒரு முறைக்குப் பல முறை யோசிப்பார்கள். ஆனால் அது ஒவ்வொருவர் மனோபாவத்தைப் பொறுத்தது!

(தொடரும்)



# மேடை சுகம்!

முப்பத்தைந்தாவது தேசிய நூலக வார விழாவின் நிறைவு நாள் கூட்டத்திற்கு ஏற்பாடு நடைபெற்றுக் கொண்டிருந்தது. இராம. அசோகனைப் புன்முறுவலோடு வரவேற்றார் நூலகர் பரமசிவம்.

அவரது வரவேற்பைக் கண்டு கொள்ளாத இராம. அசோகன், ''எனக்கு ஏன் சார் விழாவுக்கான தகவலைச் சொல்லவில்லை!'' என்று வருத்தப்பட்டுக் கொண்டார்.

"நீங்க வந்ததும் சொல்லிக்கலாம்னு இருந்தேன். ஆனால் நீங்க விழா முடியும் நாள்லதான் வருவீங்கன்னு நான் எதிர்பார்க்கலை. நல்ல வேளையாக இப்பவாவது வந்தீங்களே! அதுவே எனக்கு சந்தோஷம். இன்றைய கூட்டத்தில் நீங்க கவிதை வாசிக்கணும்னு இருந்தால் அதை யாரால் தடுக்க முடியும்!"

இராம. அசோகனின் மனம் நோகாதவாறு பதில் சொன்னார்.

''கவிதையா? பிரிப்பேர் பண்ணாமல் எப்படி சார் முடியும்? அதெல்லாம் வேண்டாம் சார்'' என்றவர் நாற்காலியில் உட்கார்ந்தபடி வார ஏடு ஒன்றைப் புரட்டத் தொடங்கினார்.

இராம. அசோகனின் உள்மனம் விசும்பியது.

இவர் லைப்ரரிக்கு வராவிட்டாலும் வார விழாவுக்கான ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருப்பதை ஏற்கெனவே தெரிந்து வைத்திருந்தார்.

முன் கூட்டியே வந்தால், ''அதைச் செய்யுங்க, இதைச் செய்யுங்க..'' என்று நூலகர் பரமசிவம் சொல்வதை நிராகரிக்க முடியாது என்பதோடு, இருபதுக்கும் குறைவானவர்களே பங்குபெறும் விழாவில் முக்கியப் பங்காற்றிட ஆர்வம் இல்லாததாலேயே... நிறைவு நாள்

கூட்டம் நடைபெறும் நேரத்திற்கு வந்திருக்கிறார்.

இவர் நினைத்தபடி இல்லாமல் இன்றைய விழாவில் ஐம்பதுக்கும் மேற்பட்டவர்கள் கலந்து கொள்ளப் போகிறார்களோ என்ற சந்தேகம் இவருக்குள் நெருடலைப் புகுத்தியது.

**ஊ**ர்ப் பெரியவர்கள் சிலரும், பள்ளி மாணவர்கள் சிலரும் வந்து உட்கார்ந்திருக்க, காலேஜ் மாணவர்கள் இருவர் இவரது அருகில் வந்து உட்கார்ந்தனர்.

"ஏய் ரகு, ஃபுல் சைஸ்ல கலர் போட்டோ ஒண்ணு எடுக்கணும்."

"எதுக்கு?"

"என்னோட ஆள் கேட்குது."

"ம்ம்... ரொம்பத் தேவைதான். நம்ம மணி இப்போ போட்டோ எடுக்க வருவான். அவனிடம் சொல்லு."

"போட்டோவா...?"

"ஆமாம். பொது நூலகச் செய்தி மடல்னு... ஒரு மாத இதழ் வருதுல்ல... அதுல இந்த மாதிரி நிகழ்ச்சி போட்டோவை எல்லாம் போடுவாங்க."

"போயும்... போயும் நம்மூர்ல நடக்கிறதையா போடுவாங்க!"

"நம்ம ஊரு என்ன? சின்னச் சின்ன கிராமத்துல நடக்கறதைக் கூட போடுவாங்க."

அந்தப் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த இராம. அசோகன், பேசிக் கொண்டிருப்பவர்களில் ஒருவன் கட்டுரை வாசிக்கப் போகும் ரகு என்பதை உணர்ந்து கொண்டார்.

ஊராட்சி ஒன்றிய அலுவலகம் இருக்கும் கம்மாபுரத்தில் ஒரு போட்டோ ஸ்டுடியோ இருப்பது இவருக்குத் தெரிந்த போதிலும், ஃபோட்டோ எடுக்கு மளவிற்கு பரமசிவம் ஏற்பாடு செய்துள்ளாரா என்பதுதான் இவரது சந்தேகம்.

**த**லைமை வகிக்கும் கண்ணாடி ஆசாமி எழுந்து, "தமிழ்த் தாய் வாழ்த்து" என்று சொல்ல, இரண்டு சிறுமிகள் வந்து நின்று ராகமாகப் பாடினார்கள்.

பரமசிவம் வரவேற்புரை நிகழ்த்திய போது அவரை ஒருமுறை போட்டோ எடுத்துக் கொண்ட கேமிராமேன், சிறிது நேரத்தில் தலைமை வகிப்பவர்களை மொத்தமாக ஒரு முறையும், பார்வையாளர்கள் அனைவரையும் ஒரு முறையும் போட்டோ எடுத்துக் கொண்டான்.

'கவிதை என்றால் என்னவென்று தெரியாதவர்கள் எல்லாம், ஒரே வரியை இரண்டு முறை படித்துவிட்டுச் செல்லும் போதே இப்படி கைத்தட்டுகிறார்கள் என்றால் தனக்கு எப்படி கைத்தட்டுவார்கள்' என்ற ஆதங்கம் இவரது இதயத்தைத் தட்டி எழுப்பவே, 'தானும் பேசுகிறேன் என்று சொல்லியிருக்கலாமோ!' என்றொரு எண்ணம் இவருக்குள் புகுந்து கொண்டது.

அனைவரும் பேசி முடித்த நிலையில் எழுந்து நின்ற தலைவர், "அடுத்ததாக செந்தில் நன்றியுரை வாசிக்கப் போகிறார். அதற்கு முன்னர் யாரேனும் பேச விரும்பினால் பேசலாம்" என்றவர் பார்வையாளர்களை நோட்டமிட்டார்.

இவருக்குள் பூகம்பம். பேசலாமா? வேண்டாமா!

"பொறு... மனமே பொறு. குதிக்காதே! இது சாதாரண விழா. விழுந்தடித்துக் கொண்டு ஓடாதே. நீ பேசி அப்படி என்ன நிகழ்ந்துவிடப் போகிறது!"

"ஆமாம். இரண்டு வார்த்தை பேசுவதில் ஒன்றும் குறைந்துவிட மாட்டாய். எழுந்து பேசு!"

இவரது மனசுக்குள் சகோதரச் சண்டை.

"சார், நீங்க இரண்டு வார்த்தை பேச





# தொட்டுக்கத் கிடைத்த லட்டு!

'அன்பே சிவம்' படத்துக்குப் பிறகு ஒரு கலக்கு கலக்கலாம் என்று நினைத்த கிரணுக்கு, எதிர்பார்த்த வாய்ப்புகள் வராததில் அதிர்ச்சி. நடிகர் சங்கத் தலைவர் விஜயகாந்திடம் சென்று, ஒரு துளி கண்ணீர் சிந்துங்கள் என்று யாரோ கொடுத்த ஐடியாவை கிரண் செயல்படுத்த, தமது 'தென்னவன்' படத்தில் கிரணுக்கு லட்டு போன்ற வாய்ப்புக் கொடுத்து விட்டாராம் விஜயகாந்த்.

– ஸ்ரீ

லாம்ல!" செந்தில் இவரைப் பார்த்துச் சொன்ன மறு நொடியே... கரண்ட் ஷாக் கொடுக்கப் பட்டவராக எழுந்து விட்டார்.

அனைவருக்கும் பொதுவான வணக்கத்தை சொன்னவர் கொஞ்சமும் தயக்கமில்லாமல் சரவெடியைப் போல பேசினார். அதற்காகவே காத்திருந்தவன் போல புகைப் படக்காரனும் அருகில் வந்து பல கோணங்களில் படமெடுத்துத் தள்ளினான்.

"பிறப்புக்குப் பின்னர் நம்மைத் தேடி வருவது இறப்பு ஒன்றுதான். மற்ற எதையும் நாம் தான் தேடிப்போக வேண்டும். அறிவுத் தாகம் உள்ள எவரும் நூலகத்தைத் தேடிப் போவதுதான் சரியாக இருக்கும். இதையே... கொஞ்சம் மாற்றிச் சொல்ல வேண்டுமானால், நூலகத்தைத் தேடிப்போகிற எவரும் அறிவாளியாகத்தான் இருப்பர்" என்று பேசி,

***"கனவுகள் நிகழ்ந்திட கடவுளை***
***வணங்கிடு – அறியாமைக்***
***கதவுகள் திறந்திட நூலகம் வந்திடு"***

என்று முடித்தபோது பலத்த கைத் தட்டல் கிடைத்தது.

பேசி, கைத்தட்டல் வாங்கிக் கொண்டதோடு, போட்டோவும் எடுத்துக் கொண்டதில் இவரது ஆத்மாவுக்கே ஒரு திருப்தி வந்திருந்தது.

அதே சந்தோஷத்தில் அனைவரிடமும் விடைபெற்றுக் கொண்டு, பஸ் நிறுத்தத்தை நோக்கி விரைந்தார்.

சிதம்பரம் – விருத்தாசலம் சாலையில் அமைந்துள்ள கம்மாபுரம் முக்கிய நிறுத்தம் என்பதால் சற்றே நீளமாக நிழற்குடை கட்டப்பட்டு அதன் நடுவில் ஆளுயர சுவர் எழுப்பப்பட்டு இருந்தது. அதன் ஒரு புறத்தில் இவர் உட்கார்ந்திருக்க, மறுபுறத்தில் இருவர் பேசிக் கொண்டிருந்தனர்.

பின்புறமிருந்து பேச்சுக் குரல் கேட்டது.

"ஏய்... நான் போறதுக்குள்ள ஒரு போட்டோ எடுக்கணும்டா..."

"ஏன்..?"

"வசந்திக்குக் கொடுக்கணும்."

"அதுக்கென்ன ஸ்டுடியோவுக்கு வந்துட்டுப் போயேன்" என்று எதிர்க் குரல் சொல்ல, ரகுவின் நண்பனோடு கேமிரா மேன் பேசிக் கொண்டிருக்கிறான் என்பது இவருக்குப் புரிந்து போனது.

"யப்பா... ஸ்டுடியோங்குற வம்பே வேணாம். சினிமாத் தியேட்டர்ல எங்க இரண்டு பேரையும் உங்க அண்ணன் பார்த்த பிறகு அவரு முகத்துல முழிக்கவே பயமா இருக்கு. கேமிராதான் கையிலேயே வைச்சிருக்கியே... இங்கேயே எடுத்துடேன்."

"அதெல்லாம் சரிவராதுடா..."

"என்னடா சரிவராது. நான்தான் நீட்டா டிரஸ் பண்ணிட்டு வந்திருக்கேனே!"

"ஃபோட்டோ எடுக்க டிரஸ்ஸா முக்கியம்? ஃபிலிம் இருந்தா இங்கேயே எடுத்திட்டுப் போறேன்."

"ஃபிலிம் இல்லையா! லைப்ரரியில் பளிச் பளிச்னு ஸ்டில்லா அடிச்சுத் தள்ளுனியே."

"அதையேண்டா கேக்குற...! அந்த லைப்ரரிக்காரர் என் அண்ணனிடம் மூணு போட்டோ மட்டும்தான் எடுக்கச் சொன்னாராம். லோடோட இருந்த இந்த கேமிராவை அண்ணன் என்னிடம் கொடுத்தப்போ, இதில் நாலு ஸ்டில்தான் பாக்கி இருந்தது. அதை மட்டும் அடிச்சுட்டு ஏன் சும்மா நிப்பானேன்னுதான் பேசின எல்லாரையும் பந்தாவா வெறும் ஃபிளாஷ் மட்டும் அடிக்க வைச்சேன்" என்றவன் சப்தம் போட்டுச் சிரிக்க, ஓட்டி மேடு செல்லும் டவுன் பஸ் வந்து நின்றது. ○



# பரிகார ஸ்தலமான இராமேஸ்வரத்தில்
# ஆடி அமாவாஸை திதியில்
# அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

**அமாவாஸையில் சூரியனும் சந்திரனும் ஒரே நேர்க்கோட்டில் சஞ்சரிப்பதால் அன்றைய தினம் மனிதர்களது புத்தி சஞ்சலம் இல்லாமல் தெளிவாகச் செயல்படுகிறது. நாம் எதை நினைத்து அமாவாஸை தினத்தில், இராமேஸ்வரத்தில் தான தர்மங்கள் செய்கிறோமோ, அந்த எண்ணங்கள் பல மடங்கு உறுதியோடு வெற்றி பெறும். ஆடி அமாவாஸை அன்னதானம் மேலும் சிறப்பான பலன்களை அளிக்கும் என்பதில் ஐயமில்லை.**

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் இராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். ஸ்ரீ இராமனும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும், முனிவர்கள் பலரும் இங்கு வந்து நீராடியதால் இராமேஸ்வரம் க்ஷேத்ரத்திற்கு மென்மேலும் பெருமை உண்டு. இராமேஸ்வரத்தில் அன்னதானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் என்றென்றும் அழியாத பலனைக் கொடுக்கும்.

இராமேஸ்வரத்தில் அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். இராமேஸ்வரத்தில் அமாவாஸை அன்று அன்னமளிப்பவன் ப்ராணனளிப்பவன் ஆகிறான். இந்த புண்ணிய பூமியில் அன்னமளிப்பவன் மிக்க செல்வந்தராய் பிறப்பான். அன்னதானம் செய்பவனுக்கு போகமும், ஆயுளும், அழகும் பெருகும். பலம், புகழ், கீர்த்தி இவை உண்டாகும்.

★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக வடை, பாயசத்துடன் அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.

- ★ சிறிய தொகை மற்றும் அரிசி போன்ற உணவுப் பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.
- ★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ★ ரூ.1000, ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கந்தபுராணம் (அ) பகவத்கீதை புத்தகம் அனுப்பி வைக்கப்படும்.

இராமேஸ்வரத்தில் பிறந்தநாள், திருமணநாள் என நீங்கள் நினைக்கும் நாளில் அன்னதானம் செய்ய எமது அறக்கட்டளை சிறப்பான ஏற்பாடுகள் செய்துள்ளன. ஆகவே, நீங்கள் நினைக்கும் நாளில் அந்தணர்கள், சாதுக்கள், ஏழைகளுக்கும் அன்னதானம் செய்யலாம்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் **GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். என்றென்றும் புனித ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது ஒத்துழைப்பை நாடுகிறோம்.

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*

## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

**GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST**

**M-11/F-4, RAGAM APTS., I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR, THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA**

**☎: (044) 24900303, 24900603, 24416122 Mobile : 94441 16300**

ஆடி அமாவாஸை நாளில் நேரில் கலந்து கொள்ள விரும்பும் அன்பர்கள் முன்பதிவு செய்துகொள்ளவும்.

★ நீங்கள் தேடும் மனநிம்மதி அன்னதானத்தில் கிடைக்கிறது ★ ஸர்வேஜனா: - ஸுகினோபவந்து

# சிவகாமியின் சபதம்

எட்டாம் அத்தியாயம்

## வானமா தேவி



ன்றைய இரவைக் காஞ்சிவாசிகள் பகலாகவே மாற்றிக் கொண்டிருந்தார்கள். காஞ்சி நகரில் வாழ்ந்த ஐந்து லட்சம் ஜனங்களில் கைக் குழந்தைகளைத் தவிர யாரும் அன்றிரவு உறங்கவில்லை.

நகரமெங்கும் வீதி விளக்குகள் ஜகஜ்ஜோதியாய் பிரகாசித்துக் கொண்டிருந்தன. யானைப் படைகளும், குதிரைப் படைகளும், காலாட் படைகளும், வெண் புரவிகள் பூட்டிய ரதங்களும் வரிசை வரிசையாக நின்றன. பொழுது புலரும் சமயத்தில் அரண்மனை வாசலில் வந்து சேருவதற்கு ஆயத்தமாக அவை அணிவகுக்கப்பட்டு வந்தன.

மறுநாள் காலையில் சக்கரவர்த்தி போருக்குப் புறப்படும் வைபவத்தை முன்னிட்டு நகர மாந்தர்கள் இரவெல்லாம் கண் விழித்து வீதிகளையும், வீட்டு வாசல்களையும் அலங்காரம் செய்தார்கள். முற்றிய தார்களையுடைய வாழை மரங்களையும், செவ்விளநீர்க் குலைகளையும், தோரணங்களையும், திரைச் சீலைகளையும், தென்னங் குருத்துக் கூந்தல்களையும், எங்கெங்கும் தொங்க விட்டார்கள். ஒவ்வொரு வீட்டின் உச்சியிலும் ரிஷபக் கொடியைப் பறக்க விட்டார்கள்.

பெண்மணிகள் வீட்டுத் திண்ணைச் சுவர்களுக்கு வர்ணப் பட்டைகள் அடித்தார்கள். தெருவாசல்களில் சித்திர விசித்திரமான கோலங்களைப் போட்டார்கள். பெரும்பாலும் போர்க்களக் காட்சிகளே அந்தக் கோலங்களில் அதிகமாகக் காணப்பட்டன.

யானை வீரர்களும், குதிரை வீரர்

களும், வாள்களும் வேல்களும் தரித்த காலாள் வீரர்களும் அக் கோலங்களில் காட்சியளித்தனர். ஒரு கோலத்தில் ஐந்து ரதங்களிலே பஞ்ச பாண்டவர்கள் தத்தம் கைகளில் வளைத்த வில்லும், பூட்டிய அம்புமாகக் காட்சி தந்தார்கள். இன்னொரு கோலத்தில் இராம லக்ஷ்மணர்கள் தசகண்ட இராவணனுடன் கோர யுத்தம் செய்யும் காட்சி தென்பட்டது.

மற்றொரு கோலத்தில் மகாரதர்கள் பலருக்கு மத்தியில் அபிமன்யு தன்னந்தனியாக நின்று போராடும் காட்சி தோன்றியது.

ஆஹா! காஞ்சி நகரத்துப் பெண்மணிகள் பாரத நாட்டு வீரர் கதைகளை நன்கு அறிந்திருந்ததோடு சித்திரக் கலையிலும் மிக வல்லவர்கள் என்பதிலே சந்தேகமில்லை.

சக்கரவர்த்தியின் அரண்மனையிலும் அன்றிரவெல்லாம் ஒரே கலகலப்பாயிருந்தது. அரண்மனை வாசலிலும் நிலா முற்றத்திலும் அலங்காரங்கள் செய்யப்பட்டன. வாழை மரங்களும் தோரணங்களும் கட்டினார்கள். செக்கச் சிவந்த மலர்க் கொத்துக்களோடு கூடிய தொண்டைக் கொடிகளைக் கட்டுக் கட்டாய்க் கொண்டு வந்து நெடுகிலும் கட்டித் தொங்கவிட்டார்கள்.

நிலா முற்றத்தில் வாள்களையும் வேல்களையும் நெய் தடவித் தேய்த்துத் தீட்டிக் கண்கள் கூசும்படி மின்னச் செய்தார்கள். யானைகளுக்கும் குதிரைகளுக்கும் பூட்ட வேண்டிய ஆபரணங்களுக்கு மெருகு கொடுத்துப் பளபளக்கச் செய்தார்கள்.

வீதிகளிலும் அரண்மனை வாசலிலும் இப்படியெல்லாம் அல்லோலகல்லோலமாயிருக்க, அரண்மனையின் அந்தப்புரத்துக்குள்ளே மட்டும் அமைதி குடிகொண்டு நிசப்தமாயிருந்தது.

அங்குமிங்கும் முக்கிய காரியமாகச் சென்ற தாதிகள் அடிமேல் அடி வைத்து மெல்ல நடந்தார்கள். ஒருவருக்கொருவர் பேசும்போது காதோடு வாய் வைத்து மிகவும் மெதுவாகப் பேசினார்கள்.

இதன் காரணம் அச்சமயம் சக்கரவர்த்தி அந்தப்புரத்துக்கு வந்து தமது பட்ட மகிஷியிடம் விடைபெற்றுக் கொண்டிருக்கிறார் என்று அவர்களுக்கெல்லாம் தெரிந்திருந்ததுதான்.



துவரையில் நாம் பிரவேசித்தறியாத பல்லவ சக்கரவர்த்தியின் படுக்கை அறைக்குள்ளே, சந்தர்ப்பத்தின் முக்கியத்தைக் கருதி நாமும் இப்போது போய்ப் பார்ப்போம்.

நீலப் பட்டு விதானத்தாலும் முத்துச் சரங்களினாலும் அலங்கரிக்கப்பட்டிருந்த தந்தணைக் கட்டிலில் பஞ்சணை மெத்தை மீது சக்கரவர்த்தி அமர்ந்திருக்கிறார். அவருக்கெதிரில் பல்லவ சாம்ராஜ்யத்தின் பட்டமகிஷி பாண்டிய ராஜன் குமாரி, வானமா தேவி மிக்க மரியாதையுடன் நின்று கொண்டிருக்கிறாள். சற்றுத் தூரத்தில் திறந்திருந்த வாசற்படியின் வழியாகப் பார்த்தால், அடுத்த அறையிலே தங்கக் கட்டில்களில் விரித்த பட்டு மெத்தைகளிலே பல்லவ குமாரன் மகேந்திரனும், அவன் தங்கை குந்தவியும் நிம்மதியாகத் தூங்குவது தெரிகிறது.

ஒன்பது வருஷத்துக்கு முன்னால் மாமல்லரை மணந்து, பல்லவ சிம்மாசனத்துக்குரியவளான பாண்டிய குமாரி வானமா தேவியை முதன் முதல் இப்போதுதான் நாம் நெருங்கி நின்று பார்க்கிறோம். அப்படிப் பார்க்கும்போது, பாண்டிய நாட்டுப் பெண்ணின் அழகைப் பற்றிக் கவிகளிலும் காவியங்களிலும் நாம் படித்திருப்பதெல்லாம் நினைவிற்கு வருகிறது. அந்த அழகெல்லாம் திரண்டு

**அமரர் கல்கி**

ஓர் உருவம் பெற்று நம் முன்னால் நிற்கிறதோ எனத் தோன்றுகிறது.

அவளுடைய திருமேனியின் நிறம் செந்தாமரை மலரின் கண்ணுக்கினிய செந்நிறத்தை ஒத்திருக்கிறது. அவளுடைய திருமுகத்திலுள்ள கருவிழிகளோ, அன்றலர்ந்த தாமரை மலரில் மொய்க்கும் அழகிய கரு வண்டுகளை ஒத்திருக்கின்றன...

இதென்ன அறியாமை? வானமா தேவியின் சௌந்தரியத்தையாவது, நாம் வர்ணிக்கவாவது?

தபஸிகளுக்குள்ளே மிகக் கடுந் தபஸியான சிவபெருமானுடைய தவம் கலைவதற்கு எந்தத் திவ்ய சுந்தராங்கி காரணமாயிருந்தாளோ எவளுடைய மோகன வடிவத்தைக் கண்டு அந்த ருத்ர மூர்த்தியின் கோபாக்னி தணிந்து உள்ளம் குளிர்ந்ததோ அத்தகைய உமாதேவி பூமியில் அவதரிக்கத் திருவுளங் கொண்ட போது, மதுரைப் பாண்டியனுடைய குலத்தையல்லவா தேர்ந்தெடுத்தாள்? சுடுகாட்டில் பூத கணங்களுக்கு மத்தியில் சாம்பலைப் பூசிக் கொண்டு பீபத்ஸ நடனம் புரிந்த எம்பெருமான் மண்டை ஓடு முதலிய தன்னுடைய கோர ஆபரணங்களையெல்லாம் அகற்றி விட்டுச் சுந்தரேசுவரராக உருக்கொண்டு எந்தச் சகல புவன சுந்தராங்கியைத் தேடி வந்து மணம் புரிந்தாரோ, அந்தப் பார்வதி தேவி பிறந்த குலமல்லவா பாண்டிய குலம்? அப்பேர்ப்பட்ட குலத்தில் உதித்த வானமா தேவியின் சௌந்தரியத்தை நம் போன்றவர்களால் வர்ணிக்க முடியுமா?

**"தே**வி! புறப்பட வேண்டிய தருணம் வந்து விட்டது. நாளைச் சூரியன் உதயமாகும்போது, நானும் போருக்குப் பிரயாணமாவேன்!" என்றார் சக்கரவர்த்தி.

வானமாதேவி மறுமொழி ஒன்றும் சொல்லவில்லை. அவளுடைய கண்களின் ஓரத்திலே இரு கண்ணீர்த் துளிகள் ததும்பி நின்று தீபச் சுடரின் ஒளியில் முத்துக்களைப் போல் பிரகாசித்தன.

"திரும்பி வர எத்தனை காலம் ஆகுமோ தெரியாது. ஒருவேளை திரும்பி வருகிறேனோ, என்னவோ! அதுவும் சொல்வதற்கில்லை. தேவி! உனக்குப் பெரும் பொறுப்பைக் கொடுத்து விட்டுப் போகிறேன். மகேந்திரனையும் குந்தவியையும் நீ கண்ணும் கருத்துமாய் வளர்த்து வர வேண்டும். இந்தப் பல்லவ ராஜ்யத்தைப் பாதுகாத்து, மகேந்திரனுக்கு வயது வந்ததும் அவனிடம் ஒப்புவிக்க வேண்டும்!" என்று மாமல்லர் கூறியபோது, அதுவரை தலை குனிந்து நின்று கொண்டிருந்த வானமாதேவி சக்கரவர்த்தியின் காலடியில் அமர்ந்து, அவருடைய பாதங்களைக் கண்ணீரால் நனைத்தாள்.

"தேவி! இது என்ன? வீரபாண்டியன் குலத்தில் உதித்தவள் கணவனைப் போர்க்களத்துக்கு அனுப்பத் தயங்குகிறாயா?" என்று சக்கரவர்த்தி சிறிது பரபரப்புடன் கேட்டார்.

வானமா தேவி நிமிர்ந்து நோக்கிக் கூறினாள்: "பிரபு! அத்தகைய தயக்கம் எனக்குச் சிறிதும் இல்லை. இந்த இராஜ்யத்தைப் பாதுகாத்து மகேந்திரனிடம் ஒப்படைக்கும் பொறுப்பும் எனக்கு நிச்சயமாய் ஏற்படாது. நான் பிறந்த மதுரைமா நகரில் ஜோசியக் கலையில் தேர்ந்த நிபுணர்கள் பலர் உண்டு. அவர்கள் என்னுடைய மாங்கல்ய பலத்தைப் பற்றி ரொம்பவும் சொல்லியிருக்கிறார்கள். தாங்கள் சளுக்கரை வென்று, வாதாபியை அழித்துவிட்டு வெற்றி வீரராகத் திரும்பி வருவீர்கள், சந்தேகம் இல்லை!"

"பின் எதற்காக உன்னுடைய கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் சிந்தின? உனக்கு என்ன துயர் யாரால் ஏற்பட்டது? மனத்தைத் திறந்து சொல்ல வேண்டும்" என்றார் மாமல்லர்.

"சுவாமி என்னுடைய மாங்கல்யத்தின் பலத்தைப் பற்றிச் சொன்ன அரண்மனை ஜோசியர்கள் இன்னொரு விஷயமும் சொல்லியிருக்கிறார்கள். என் கழுத்திலே

மாங்கல்யத்தோடு என் நெற்றியிலே குங்குமத்தோடு, மீனாக்ஷியம்மனின் பாதமலரை நான் அடைவேன் என்று சொல்லியிருக்கிறார்கள். ஒருவேளை தாங்கள் திரும்பி வருவதற்குள் அவ்விதம் நேர்ந்து விடுமோ என்று எண்ணினேன். அதனாலேதான் கண்ணீர் வந்தது. தாங்கள் வெற்றி மாலை சூடி இந்த மாநகருக்குத் திரும்பி வருவதைக் கண்ணாற் பாராமல் வானுலகத்துக்குப் போகக் கூட எனக்கு இஷ்டமில்லை!" என்று வானமா தேவி கூறியபோது, மீண்டும் அவளுடைய விசாலமான நயனங்களிலிருந்து கலகலவென்று கண்ணீர்த் துளிகள் சிந்தின. அப்போது மாமல்லர் அந்தப் பாண்டியர் குலவிளக்கைத் தமது இரு கரங்களினாலும் தூக்கிக் கட்டிலில் தம் அருகில் உட்கார வைத்துக் கொண்டார். தமது வஸ்திரத்தின் தலைப்பினால் அவளுடைய கண்களில் பெருகிய கண்ணீரைத் துடைத்தார்.

"தேவி! நானும் ஒரு ஜோசியம் சொல்லுகிறேன், கேள்! புலிகேசியைக் கொன்று, வாதாபியையும் அழித்துவிட்டு நான் வெற்றி மாலை சூடித் திரும்பி வருவேன். திக்விஜயம் செய்து விட்டுத் திரும்பி வரும் சக்கரவர்த்தியைக் காஞ்சி நகர்வாசிகள் கண்டு களிக்கும் பொருட்டு, வெண்புரவிகள் பூட்டிய தங்க ரதத்திலே நான் ஏறி நகர்வலம் வருவேன். அப்போது என் அருகில் நீ வீற்றிருப்பாய். உன்னுடைய மடியில் மகேந்திரனும் என்னுடைய மடியில் குந்தவியும் அமர்ந்திருப்பார்கள்...!"

"பிரபு! அத்தகைய ஆசை எல்லாம் எனக்கில்லை. தாங்கள் திக்விஜயத்திலிருந்து திரும்பி வருவதைக் கண்ணால் பார்க்கும் பேறு பெற்றேனானால் அதுவே போதும். தாங்கள் திரும்பி வந்த பிறகும் நான் இந்தப் பூமியில் இருக்க நேர்ந்தால், நான் இத்தனை நாளும் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் ஸ்தானத்தை, தங்கள் அருகில் வீற்றிருக்கும் பாக்கியத்தை, அதற்கு நியாயமாக உரியவளிடம் உடனே ஒப்புவித்துவிட்டு அகன்று விடுவேன். இந்த அரண்மனையில் தாங்கள் மனம் உவந்து ஒரு சிறு இடம் கொடுத்தால் இங்கேயே இருப்பேன். தங்கள் சித்தம் வேறு விதமாயிருந்தால் என் பிறந்தகத்துக்குப் போய்விடுவேன்!" என்று வானமா தேவி கூறிய மொழிகள் மாமல்லரைத் தூக்கி வாரிப் போட்டன.

"தேவி! இது என்ன? இந்த ஒன்பது வருஷமாக ஒருநாளும் சொல்லாத வார்த்தைகளைக் கூறுகிறாய்? உன்னிடம் யார் என்ன சொன்னார்கள்? எதை எண்ணி இவ்வாறெல்லாம் பேசுகிறாய்?" என்று மாமல்லர் மனக் கிளர்ச்சியோடு வினவினார்.

"சுவாமி! இந்த அரண்மனையிலும் இந்த மாநகரிலும் இந்தப் பல்லவ ராஜ்யத்தில் எல்லாருக்கும் தெரிந்த விஷயம் எனக்கு மட்டும் தெரியாமலிருக்கும் என்றா நினைத்தீர்கள்!"

'நீ எதைப் பற்றிச் சொல்லுகிறாய் என்பது இன்னமும் எனக்குத் தெரியவில்லை. அரண்மனையிலும் ராஜ்யத்திலும் எல்லாருக்கும் தெரிந்த அந்த மர்மமான விஷயந்தான் என்ன?" என்று சக்கரவர்த்தி ஆர்வத்துடன் கேட்டார்.

"மர்மம் ஒன்றுமில்லை பிரபு! தாங்கள் வாதாபிக்கு எதற்காகப் படையெடுத்துச் செல்கிறீர்கள் என்பதைப் பற்றித்தான்!"

"எதற்காகப் படையெடுத்துப் போகிறேன்? அதைப் பற்றி நீ என்ன கேள்விப்பட்டாய்?" என்று மாமல்லர் கேட்டார்.

"என் வாயினால் சொல்லத்தான் வேண்டுமா? ஆயனச் சிற்பியின் மகளைச் சிறை மீட்டுக் கொண்டு வருவதற்காகப் போகிறீர்கள்...!"

"ஆஹா! உனக்கும் அது தெரியுமா? எத்தனை காலமாகத் தெரியும்? எப்படித் தெரியும்?"

"எத்தனையோ காலமாகத் தெரியும். ஒன்பது வருஷத்துக்கு முன்னால் நான் இந்த அரண்மனையில் பிரவேசித்த புதிதில் தாய்மார்களும் தாதிகளும் என்னை அடிக்கடி பரிதாபமாகப் பார்த்தார்கள். என்னைப் பற்றி ஒருவருக்கொருவர் அனுதாபத்துடன் பெருமூச்சு விட்டுக்

கொண்டு பேசினார்கள். சிறிது சிறிதாக அவர்களுடைய பேச்சுக்களிலிருந்து நான் ஊகித்துத் தெரிந்து கொண்டேன். சுவாமி! நான் தங்களுடைய பட்ட மகிஷியாகி ஒரு வருஷத்துக்குள்ளேயே தங்களுடைய இதய





சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் பட்ட மகிஷி வேறொருத்தி உண்டு என்று அறிந்துகொண்டேன்...''

''அப்படித் தெரிந்திருந்தும், நீ என்னை ஒருமுறையாவது அந்த விஷயமாகக் கேட்கவில்லை. ஒன்பது வருஷத்தில் ஒருமுறையாவது என்மீது குற்றங்கூறி நிந்திக்கவில்லை. தேவி! கதைகளிலும் காவியங்களிலும் எத்

# அருள்வாக்கு!

உள்ளத்தில் எவ்வளவுக்கெவ்வளவு அமைதி நிலவுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு இன்பம் மேலிடுகிறதென்பது பிரத்தியட்ச அனுபவம். மன அமைதியின் உயர் நிலையே மேலான புருஷார்த்த மாகும். அமைதி குறையக் குறையத் துன்பமும் வளரும். மனிதர்கள் தங்கள் துன்பங்கள் நீங்குவதற்கு முயற்சி செய்யும்பொழுது, பிறரைத் துன்புறுத்தவும் நேருகிறது. இவ்விதம் ஒவ்வொருவரும் சந்தர்ப்பங்களை ஒட்டி மற்றவர்களைத் துன்புறுத்த முயலும்பொழுது சமுதாயத்தில் குழப்பம் ஏற்படுகிறது. அவ்விதம் நேரும்போதெல்லாம் அதை அடக்கி, அமைதியையும் சமாதானத்தையும் நிலை நிறுத்த அரசாங்க அதிகாரிகள் சட்டத்தின் மூலம் நடவடிக்கைகள் எடுக்கிறார்கள். ஆயினும் உண்மையான பரிகாரம் யாதெனில், மக்கள் எல்லோரும் புலன்களைப் பறிக்கும் வெளி விஷயங்களிலிருந்து தங்கள் மனசைத் திருப்பி, அதைத் தங்கள் வசமாக்கி, அமைதியாக இருக்க எப்பொழுது முற்படுகிறார்களோ, அப்பொழுதுதான் துன்பம் அவர்களை அணுகாமல் இருக்கும். அதோடு, அவர்களால் பிறருக்குத் துன்பம் விளையாமலும் இருக்கும். நல்ல கல்வியைப் பயிலும் பயனாகத்தான் இத்தகைய வெளி அமைதியும் உள் அமைதியும் நம் நாட்டிலே தொன்றுதொட்டு சித்தித்து வந்திருக்கின்றன.



நம் பாரத நாட்டின் முற்காலக் கல்வியின் முதல் நோக்கம், மன அமைதியை அடைவதேயாகும். புதிது புதிதாகத் தோன்றும் பௌதிக விஞ்ஞான ஆராய்ச்சித் துறைகளில் மேன்மேலும் கல்வியைப் பெருக்குவதில் தவறில்லை. ஆனால் அதன் பயனைத் தர்ம மார்க்கத்தில் மட்டுமே உதவுமாறு செய்தால்தான் நாடும் மக்களும் உயர்வான அமைதி நிலையை அடைய முடியும். இவ்வாறில்லாமல், புலன்கள் போன வழியே அவைகளைப் பிரயோஜனப் படுத்திக் கொண்டிருந்தால், எத்தனை படிப்பும் விஞ்ஞான அறிவும் இருந்தாலும் கெட்ட எண்ணங்களும் துராசைகளுந்தான் வளரும். இன்னல்களும் துன்பங்களும் பெருகும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**

தனையோ கற்பரசிகளைப் பற்றி நான் கேட்டிருக்கிறேன். அவர்களில் யாரும் உனக்கு இணையாக மாட்டார்கள்'' என்று மாமல்லர் பெருமிதத்துடன் கூறினார்.

''பிரபு! தங்களுடைய வார்த்தைகள் எனக்குப் புளகாங்கிதத்தை அளிக்கின்றன. ஆனால், அந்தப் புகழுரைகளுக்கு நான் அருகதையுடையவள் அல்ல!'' என்றாள் பாண்டியகுமாரி.

''நீ அருகதையுடையவள் அல்ல என்றால் வேறு யார்? உன்னை அக்கினி சாட்சியாக மணந்த புருஷன் இன்னொரு பெண்ணுக்குத் தன் உள்ளத்தைப் பறிகொடுத்தவன் என்று தெரிந்திருந்தும் நீ ஒரு தடவையாவது அதைப்பற்றி என்னைக் கேட்கவில்லை. என் பேரில் குற்றம் சொல்லவும் இல்லை. பெண் குலத்திலே இதைக் காட்டிலும் உயர்ந்த குண நலத்தை யார் கண்டிருக்கிறார்கள்?''

''சுவாமி! தங்கள் பேரில் எதற்காகக் குற்றம் சொல்ல வேண்டும்? குற்றம் ஏதாவது இருந்தால் அது என் தந்தையையும் தமையனையுமே சாரும். அவர்கள் தானே என்னைத் தாங்கள் கலியாணம் செய்து கொள்ள வேண்டுமென்று பிடிவாதம் பிடித்தார்கள்? தாங்கள் அதை மறுத்ததற்காக என் தமையன் ஜயந்தவர்மன் கோபங்கொண்டு இந்தப் பல்லவ

ராஜ்யத்தின் மேல் படையெடுத்துக்கூட வந்தானல்லவா? அவனைத் தாங்கள் கொள்ளிடக் கரையில் நடந்த போரில் வென்று புறங்காட்டி ஓடச் செய்ய வில்லையா? என் தமையன் திரும்பி வந்து தங்களை ஜயித்து விட்டதாகச் சொன்னபோது மதுரை அரண்மனை யிலே நாங்கள் யாரும் அதை நம்ப வில்லை. தற்பெருமை மிகுந்த என் தமையனுக்குத் தங்களால் நேர்ந்த கர்வ பங்கத்தைப் பற்றிப் பேசிப் பேசி மகிழ்ந்தோம். அப்படியும் என் அண்ணன் தங்களை விடவில்லை. தன்னுடைய வார்த்தையை நிலை நாட்டுவதற்காக எப்படியாவது என்னைத் தங்கள் கழுத்தில் கட்டிவிடப் பிரயத்தனம் செய்தான்...''

''தேவி! ஜயந்தவர்மனுடைய கட்டாயத்துக்காகவே நான் உன்னை மணந்ததாக இன்னமும் நீ நம்புகிறாயா?'' என்று நரசிம்ம வர்மர் கேட்டபோது அவருடைய முகத்தில் புன்னகை தோன்றியது.

''இல்லை, பிரபு! ஜயந்தவர்மனுடைய கட்டாயத்துக்காக என்னைத் தாங்கள் மணக்கவில்லை. பல்லவ ராஜ்யத்தின் நன்மைக்காக என்னை மணந்தீர்கள். வடக்கேயுள்ள ராட்சதப் பகைவனோடு சண்டை போடுவதற்காகத் தெற்கேயுள்ள மன்னர்களுடன் சிநேகமாயிருக்க வேண்டுமென்று என்னை மணந்தீர்கள். என் தமையனுடைய கட்டாயத்துக்காக என்னைத் தாங்கள் மணக்கவில்லை. தங்கள் தந்தையின் உபதேசத்தைக் கேட்டு மணந்தீர்கள். இந்த அரண்மனைக்கு வந்த சில நாளைக்குள்ளேயே இதெல்லாம் நான் தெரிந்து கொண்டேன்..!''

''ஆயினும் ஒரு தடவையாவது இதையெல்லாம் பற்றி என்னிடம் நீ கேட்கவில்லை. ஆகா! பெண்களின் இருதயம் வெகு ஆழமானது என்று சொல்வது எவ்வளவு உண்மை?'' என்று மனத்திற்குள் எண்ணிய வண்ணம் மாமல்லர் தன் பட்டமகிஷியின் முகத்தை உற்றுப் பார்த்தார். அந்தச் செந்தாமரை முகத்தில் கபடத்தின் அறிகுறியை அணுவளவும் அவர் காணவில்லை; எல்லையில்லாத நம்பிக்கையும் அளவு காணாத அன்பும் சாந்தமும் உறுதியும் காணப்பட்டன!

வானமாதேவி கூறினாள்: ''சுவாமி, தாங்கள் எதற்காக என்னை மணந்து கொண்டீர்கள் என்பது பற்றி நான் என்றைக்கும் கவலைப்படவில்லை. ஏனெனில், நான் எதற்காகத் தங்களை மணந்தேன் என்பது என் உள்ளத்தில் நன்கு பதிந்திருந்தது. ஜயந்தவர்மன் கொள்ளிடக் கரையில் தங்களால் முறியடிக்கப்பட்டு திரும்பி வந்த செய்தியைக் கேட்டபோது, என் உள்ளம் தங்களைத் தேடி வந்து அடைந்தது. அடுத்த நிமிஷத்தில், மணந்தால் தங்களையே மணப்பது, இல்லாவிடில் கன்னிகையாயிருந்து காலம் கழிப்பது என்ற உறுதி கொண்டேன். என் விருப்பம் நிறைவேறியது. தங்களை மணக்கும் பாக்கியத்தை அடைந்தேன். தங்கள் அரண்மனையில் ஒன்பது வருஷ காலம் எவ்வளவோ ஆனந்தமாக வாழ்ந்து வந்தேன். பிரபு! இந்த ஆனந்தம் என்றென்றைக்கும் நீடித்திருக்க வேண்டுமென்று நான் ஆசைப்படவில்லை. சில காலமாவது மற்றவர்களும் சந்தோஷமாயிருக்க வேண்டுமல்லவா, ஆயனர் மகளைச் சிறை மீட்டு அழைத்துக் கொண்டு தாங்கள் என்றைக்கு இந்த மாநகருக்குத் திரும்பி வருகிறீர்களோ, அன்றைக்கே நான் இந்தப் புராதன பல்லவ சாம்ராஜ்யத்தின் தங்கச் சிம்மாசனத்திலிருந்தும் இந்தப் பூர்வீக அரண்மனையின் தந்தக் கட்டிலிலிருந்தும் கீழே இறங்கச் சித்தமாயிருப்பேன்'' என்று தழுதழுத்த குரலில் கூறி வானமாதேவி கண்ணீர் ததும்பிய கரிய கண்களினால் மாமல்லரைப் பார்த்தாள்.

உணர்ச்சி ததும்பிய அந்த வார்த்தை ஒவ்வொன்றும் கள்ளம் இல்லாத உண்மை உள்ளத்திலேயிருந்து வந்தன வென்பதை மாமல்லர் தெளிந்து உவகை கொண்டார்.

(தொடரும்)

# செயற்கை மழைத் திட்டம்
# பெய்யுமா? காயுமா?

● முகவை முத்துசாமி, தொண்டி.

? ஸ்டிரைக்குகளை அடித்து நொறுக்கும் தமிழக அரசால், ஏன் சட்டம் ஒழுங்கைக் கட்டுக்குள் வைத்திருக்க முடியவில்லை...?

! "வேலை போய்விடும்"; "அத்தியாவசியப் பணிகள் சட்டம் பாயும்" போன்ற மிரட்டல்களால் ஸ்டிரைக்கை வாபஸ் பெறச் செய்ய முடியும். ஆனால், அரசு ஊழியரை நேர்மையாகவும் சுறுசுறுப்பாகவும் வேலை செய்ய வைக்க முடியாது. லஞ்ச ஊழலும் தாமதங்களும் அதிகரிக்கும். அணுகு முறையே தவறு. சட்ட ஒழுங்கைக் கட்டுக்குள் வைத்துக் கொள்வது என்பது முற்றிலும் வேறான விஷயம். அது பற்றி ஓய்வுபெற்ற, மூத்த போலீஸ் அதிகாரிகளைக் கலந்தாலோசித்துச் செயல்பட்டால் பலன் கிடைக்கும். அதை இன்றைய முதல்வரிடம் நாம் எதிர்பார்க்க முடியாது.

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

? டெல்லியில் வாங்கிய அடிக்கு உ.பியில் அஜித் சிங் பதிலடி கொடுத்துள்ளாரே...?

! டில்லியில் வாங்கிய அடி இலேசானது; உ.பியில் பதிலடி பலமானது; மக்களவைத் தேர்தல் நெருங்க, அஜித் கொடுக்கப் போகிற அடி செம அடி!

● முருகசொ.தியாகராஜன், திருச்சி - 6.

? கணவன், மனைவியை 'நீ, வா, போ' என்கிறான். ஆனால், மனைவியோ கணவனை 'நீங்க, வாங்க, போங்க..' என்கிறாரே...?

! நீங்க சென்னைப் பக்கமே வந்ததில்லையோ, தியாகராஜன்...? இங்கே திருமணத்துக்கு முன் காதலி, காதலனை 'வாடா, போடா' என்பதும், மணமானபின் மரியாதையோடு 'வா, போ' என்று அழைப்பதும் ரொம்ப சகஜம்.

● மா. உலகநாதன், திருநீலக்குடி.

? ஜெ. அறிவித்துள்ள செயற்கை மழைத் திட்டம் பெய்யுமா? காயுமா...?

! பெய்தாலும் சரி, காய்ந்தாலும் சரி... சிலருக்கு நன்றாகவே பழுக்கும்.

• வாபஸான விருப்பம்!



● ரேவதிப்ரியன், ஈரோடு.

? த.கி. கொலை செய்யப்பட்டது பற்றி நிருபர்கள் கேட்டால், "அரசியலில் இதெல்லாம் சகஜம்" என்கிறார் கருணாநிதி; அதே பாணியில் வைகோ, செஞ்சியார் பதவி விலகியதற்கு, "அரசியலில் இதெல்லாம் சகஜம்" என்கிறார்... எப்படி ஸார், நமது அரசியல்வாதிகள் ஒரு சேர, ஒரே மாதிரி பேசுகிறார்கள்...?

! இது கூடத் தெரியாதா ஸார்...? அரசியலில் இதெல்லாம் சகஜம்!

● கி. துரைசாமி, மங்கலப்பட்டி.

? ஏக்கத்துக்கும் ஆசைக்கும் என்ன வித்தியாசம்...?

! ஏக்கம் – ஆழ்மனம் சார்ந்தது; ஆசை புறத்தேவைகள் சார்ந்தது.

• அடியும் நெருக்கடியும்!



• நிலுவையில்...



• ...கௌரவம்!

● ஆர். அப்துல் சலாம், திருச்சி - 21.

? தி.மு.கவைப் பிளக்க அ.தி.மு.க. சதி செய்வதாக, பிரதமருக்குக் கருணாநிதி புகார்க் கடிதம் எழுதியிருப்பது குறித்து...?

! தி.மு.கவைப் பிளக்க அ.தி.மு.க. வர வேண்டாம்; தி.மு.க.வே போதும் என்பது பிரதமருக்குத் தெரியும்; நமக்கும் தெரியும். ●

● கா.அ. தாஜ்மஜீத், திருமயம்.

? செஞ்சி ராமச்சந்திரனின் பி.ஏ. வாங்கிய நான்கு லட்சம் ரூபாய் லஞ்சம் பற்றி தராசு என்ன கூற விரும்புகிறார்?

! அரசியல்வாதிகளும் அவர்களுடைய பரிவார தேவதைகளும் லஞ்சம் வாங்குவது விசனத்துக்குரியது என்றாலும் புதிதல்ல... கணக்கு வழக்குகளை ஒழுங்குபடுத்தி, நேர்மையாய் வரி செலுத்தச் செய்ய வேண்டிய ஆடிட்டர் ஒருவர், இந்த லஞ்ச நாடகத்தைப் பின்னின்று இயக்கியது தலை குனிவு. அவர் தமிழர் என்பது நிமிர முடியாத தலைகுனிவு.

● லெ.நா. சிவகுமார், சென்னை – 33.

? அயோத்தியில் ராமர் கோயிலுக்கு அருகிலேயே மசூதியும் கட்ட வேண்டும் என்கிற பா.ஜ.க. தலைவர் வெங்கையா நாயுடுவின் விருப்பம் குறித்து...?

! அந்த விருப்பத்தை' வி.எச்.பி. கண்டனம் செய்ததுமே அது 'வெறுப்பம்' ஆகிவிட்டதே! 'நான் அப்படிச் சொல்லவேயில்லை; என்னைத் தவறாகப் புரிந்து கொண்டு செய்திகள் வெளியிட்டு விட்டார்கள் என்று அரசியல்வாதிக்குரிய வழக்கமான பல்லவி பாடிவிட்டாரே!

• ...அசம்பாவிதமும்!





● பி.குமார், சேலம் - 6.

? அத்வானி, ஜெயலலிதாவுக்கு அண்ணா பல்கலைக்கழகம் டாக்டர் பட்டம் வழங்குவது பற்றி...?

! இவர்களைக் கௌரவித்தால்தான் கௌரவம் என்று கருதியிருப்பின் டான்ஸி வழக்கு தீர்ப்பும் பப்ரி மசூதி தகர்ப்பு வழக்கு தீர்ப்பும் வெளியாகும் வரை காத்திருந்திருக்கலாம். இன்று அண்ணா பல்கலைக்கழகத்துக்கு உலகளாவிய கௌரவம் உண்டு.



• அரசியலும்...

## நீங்கள் கேட்டவை-தராசு



## தப்புமா? தப்பாதா?

மனீஷா கொய்ராலா சரித்திரத்தில் இடம் பிடித்தே தீருவது எனத் தீர்மானித்து விட்டார் போலிருக்கிறது. இந்திரா காந்தியாக ஒரு படத்தில் வேடமேற்கப் போகிறார் என்று முன்பு செய்தி வந்தது. இப்போது 'அடிபட்ட புலி' (ஊன்டெட் டைக்ரஸ்) என்ற ஒரு படத்தில் முக்கிய வேடமேற்கப் போகிறாராம். செப்டெம்பர் 11 அன்று அமெரிக்காவிலுள்ள வணிகக் கோபுரங்கள் தீவிரவாதிகளால் தாக்கப்பட்டன அல்லவா...? அதுதான் இந்தத் திரைப் படத்தின் அடித்தளமாம். இந்தப் படம் தமிழில் வந்தால் தலைப்பு, 'பொடா'வுக்குத் தப்புமா?

— குல்லூ

அதைக் கெடுத்துக் கொள்ளக் கூடாது.

● ரஞ்சனிப்ரியன், பள்ளிபாளையம்.

? மதுபானங்களின் விலை உயர்வு குறித்து...?

! பள்ளிப் பாடப் புத்தகங்களின் விலை உயர்வு உமது கண்ணில் படவில்லையோ!

● எஸ். ஜோதி, வேலூர் - 1.

? பாலியல் தொழிலாளர்கள் கைது செய்யப்பட்டால் 'அழகிகள்' கைது என மீடியா அதைச் செய்தியாக்குவது சரியா...?

! மீடியாவில் பல பிரிவினர் வேண்டுமென்றே இழைக்கும் பல விகாரமான தவறுகளுள் ஒன்று இது.

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

? பிரபல சரோட் இசைக்கலைஞர் அம்ஜத் அலிகானின் மனைவி சுப்புலட்சுமி என்பவர் தமிழ்நாட்டுப் பெண்ணா...?

! இல்லை; அஸ்ஸாமிலிருந்து தமிழ்நாட்டுக்கு (கலாக்ஷேத்ரா) நடனம் பயில வந்தவர். 'மீரா' திரைப்படத்தைப் பார்த்த அவருடைய தந்தை பரூவா, அதில் நடித்த எம்.எஸ்ஸின் நினைவாக மகளுக்கு சுப்புலட்சுமி என்று பெயரிட்டார்.

● எம். அசோக் ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? எது காதில் பூ சுற்றும் வேலை...?

! அடிக்கடி அமைச்சரவையையும் அதிகாரிகளையும் மாற்றிக் கொண்டிருந்தால் தாம் மிகவும் சுறுசுறுப்பாகவும் திறம்படவும் ஆட்சி செய்வதாக ஓர் அபிப்பிராயத்தை உருவாக்கலாம் என்ற கருத்தில் ஜெ.யின் செயல்பாடு! எல்லாம் 'ஆயா ராம், கயா ராம்' தவிர வேறு ஒரு புண்ணாக்கும் இல்லை.

● எஸ்.வி. பார்த்தசாரதி, திருச்சி - 20.

? சபாநாயகர் பதவி என்பது வேலை அதிகம் இல்லாத பதவி என்று கலைஞர் கூறியிருப்பது பற்றி...?

! அது சபாநாயகரின் மனப் போக்கை யொட்டிய விஷயம். பதவியை சீரியஸாக எடுத்துக் கொண்டால் May's Parliamentary Practices படித்து ஜீரணிப்பதற்கே பதவிக் காலம் போதாது. ஆளுங்கட்சிக்கு 'ஓ' போடும் வகையில் சபையை நடத்திப் போவதென்றால் வேலை அதிகமில்லை தான்.

□ ரூ. 100/- பரிசு பெறுபவர்:

முகவை முத்துசாமி,
10-251, வெள்ளை மணல்தெரு,
தொண்டி, ராமநாதபுரம் மா.வ.
623 409

* ரூ. 50/- பரிசு பெறுபவர்:

கா. அ. தாஜ்மஜீத்,
6196, சந்தனப்பேட்டை,
திருமயம் (அஞ்சல்)
புதுகை மா.வ.
622 507

'அக்யூபங்சர், ரெய்கி, கலர் தெரபி மியூஸிக் தெரபி, ஜெம் தெரபி போன்ற சிகிச்சை முறைகளின் பலன்கள் விஞ்ஞான பூர்வமாக நிரூபிக்கப்படாததால் இவற்றை ப்ராக்டிஸ் செய்யும் மருத்துவர்களுக்கு பிராக்டீஷனர் லைசென்ஸ் தர முடியாது' என இந்திய மருத்துவக் கழகம் சமீபத்தில் மறுத்திருக்கிறது.

கலர் தெரபி, மியூஸிக் தெரபி, ஜெம் தெரபி போன்றவற்றுக்கு உரிமம் தர முடியாது என மறுத்திருப்பதை ஓரளவு ஏற்றுக் கொள்ள முடிகிறது. ஆனால், ரெய்கி, அக்யூபங்சர் போன்ற தொன்மையான மருத்துவக் கலைகளுக்கும் அங்கீகாரம் மறுக்கப்பட்டிருப்பது குறித்து, சம்பந்தப்பட்ட நிபுணர்களிடம் கருத்து கேட்டபோது...

**லட்சுமி நாராயணன்**
**(ரெய்கி கிராண்ட் மாஸ்டர்)**

பிரபஞ்சம் முழுக்க வியாபித்திருக்கும் தெய்வீக சக்தியை, உடலுக்குள் பாய்ச்சி உடல், மனம், ஆன்மா மூன்றையும் மேம்படுத்தச் செய்வதுதான் ரெய்கி. இது நூறு சதவிகிதம் விஞ்ஞான பூர்வமானது என்றாலும், இதை பிரயோகிக்கும் நிபுணர்கள், தங்களை 'டாக்டர்' என்று சொல்லிக் கொள்ளக் கூடாது. நிபுணர்கள் தங்களை 'ஹீலர்' என்றும், கற்றுக் கொடுப்பவர்கள் 'மாஸ்டர்' என்று மட்டுமே சொல்லிக் கொள்ளலாம்.

மருந்து, உபகரணம், உடல் கூறு அறிவியலுடன் முன்னேறிக் கொண்டிருக்கும் ஆங்கில மருத்துவம், ஒரே ஒரு தளத்தில் மட்டுமே செயல்படக் கூடியது. ஆனால் ரெய்கி அப்படியல்ல! குருவின் நேரடி தீட்சை மூலம் முழுமையான நிவாரணம் தரக் கூடியது.

உச்சி முதல் பாதம் வரை உள்ள சக்கரங்களுக்கு, தண்டுவடம் மூலம் சக்தி ஓடிக் கொண்டிருக்கிறது. இதில் ஏதாவது ஒரு பகுதியில் பாதிப்பு ஏற்பட்டாலும், நோய் வருகிறது. அது எந்தப் பகுதி என்று அறிந்து இயற்கை சக்தியைத் திரட்டி, சக்கரங்களைத் திறந்து, சிகிச்சை அளிக்கிறோம்.

'ரெய்கி' பற்றிய வெப்சைட்டுகளில் நுழைந்து பார்த்தால், வெளிநாடுகளில் உள்ள சூப்பர் ஸ்பெஷாலிட்டி மருத்துவமனைகளில் ரெய்கி தனி பிரிவாகவே இயங்கி வருவது தெரிய வரும். பக்க விளைவுகள் இல்லாததாலேயே ரெய்கிக்கு

• குழந்தைகளுக்கும் ரெய்கி




• பசியெடுக்க சிகிச்சை

இவ்வளவு மகத்துவம்.

ஆஸ்துமா, அல்ஸர், சரும வியாதி, தூக்கமின்மை, மன அழுத்தம் போன்ற நாள்பட்ட வியாதிகளுக்கு ரெய்கி சிறந்த பலன் தருவதை குணமானவர்கள் அறிவார்கள்.

ரெய்கி முறையில் பற்பல அதிசயங்களைச் சாதிக்க முடியும் என்கிறபோது, அங்கீகாரத்துக்காகப் போராட வேண்டிய அவசியமில்லை. மக்கள் ரெய்கி சிகிச்



• டாக்டர்கள் அனூப், மேகலா, செந்தில்

• மூளை வளர்ச்சி குன்றிய குழந்தைக்குச் சிகிச்சை

சையை ஏற்றுக் கொண்டு பலனடைந்து வருவதே சான்று.

டாக்டர் அனூப் (அக்யூபங்சர் மருத்துவர், ரோஹிணி மருத்துவ மனை, அண்ணா நகர், சென்னை)

'இந்தியன் மெடிக்கல் கவுன்ஸில்' என்பது இந்திய அலோபதி மருத்துவர்

# சரியா?

களைக் கொண்ட அமைப்பு. இவர்கள் மற்ற சிகிச்சை முறைகளை விஞ்ஞானபூர்வமானவை என அங்கீகரிப்பது இல்லை. ஆனால் ஜெனீவாவில் இயங்கும் 'உலக சுகாதார மையம்' அக்யூபங்சருக்கு அங்கீகாரம் வழங்கியுள்ளது.

இலங்கையின் புகழ் பெற்ற அலோபதி கற்ற அக்யூபங்சர் மருத்துவர் ஆன்டன் ஜெயசூர்யா. இவர் உலகமெங்கும் அக்யூபங்சரின் சிறப்புகளைப் பரப்பி வரும் இந்தச் சூழ்நிலையில் 'இந்திய மருத்துவக் கழகம்' லைசென்ஸ் வழங்க மறுப்பது ஏற்றுக் கொள்ள முடியாதது.

அக்யூபங்சர் என்பது சீன, ஜப்பானியர்களின் பழங்கால வைத்தியமுறைதான். ஆனால் இன்றைக்கு எம்.பி.பி.எஸ் படித்த டாக்டர்கள், அனாடமியைக் கற்ற மருத்துவர்கள் பலரும் ஆங்கில மருத்துவத்தின் குறை

• இடுப்பு வலிக்கு அக்யூபங்சர் சிகிச்சை...



களைக் களைந்து அக்யூபங்சரின் நிறைகளைக் கூட்டி, ஒருங்கிணைந்த சிகிச்சை தந்து வருகிறார்கள்.

எங்கள் ரோஹிணி மருத்துவமனையிலேயே ஹோமியோ, சித்தா, யுனானி, ஆயுர்வேதம் மருத்துவ முறைகளை, அக்யூபங்சருடன் இணைத்து ஹோலிஸ்டிக் முறையில், தீராத நோய்களைக் குணப்படுத்தி வருகிறோம்.

வலி சம்பந்தப்பட்ட நோய்கள், தண்டுவட பிரச்னைகள், சைனஸ், காது கேளாமை, மூட்டுகளைத் தாக்கும் நோய்கள் போன்றவற்றுக்கு அக்யூபங்சரில் நிரந்தர குணம் காண முடியும்.

எனவே அக்யூபங்சர் நிபுணர்களின் செயல்திறமையின் அடிப்படையில், 'இந்திய மருத்துவக் கழகம்' அங்கீகாரம் தர முன் வரலாம்.

— அனு

படங்கள்: ஸ்ரீஹரி

ஆந்திர முதலமைச்சர் சந்திரபாபு நாயுடு தகவல் தொழில் நுட்பத்துறையில் தான் பெரும் புரட்சி செய்திருக்கிறார் என்று பலரும் நினைத்துக் கொண்டிருக்க, இன்னொரு அமைதிப் புரட்சி ஆந்திராவில் அரங்கேறிக் கொண்டிருக்கிறது. அதுதான் தியானப் புரட்சி. ஆம்! பிரம்ம குமாரிகள் விஸ்வ வித்யாலயா என்ற அமைப்பு மூலம் அரசாங்க அதிகாரிகளுக்கு 'ராஜ யோகா' என்கிற தியானப் பயிற்சி அளிக்கப்படுகிறது. "இது, அரசு இயந்திரம் தன் பொறுப்பு உணர்ந்து, செம்மையாகச் செயல்பட பெரிதும் உதவுகிறது" என்கிறார் ஒரு ஐ.ஏ.எஸ். அதிகாரி.


• சகோதரி குல்திப்ஜீயுடன் சந்திரபாபு நாயுடு

# நெகிழ்ந்து


• 'தெலுங்கு தேசம்' கட்சியின் மகளிர் பிரிவுக்கு தியானப் பயிற்சி

சந்திரபாபு நாயுடு, பிரம்ம குமாரிகள் அமைப்பின் தலைமையகமான ராஜஸ்தான் மாநிலம் மவுண்ட் அபுவுக்கு நேரில் தமது மனைவியுடன் சென்று, இரண்டு நாட்கள் தியானப் பயிற்சி பெற்றார். உடனே, பரவசமடைந்த நாயுடு, ஆந்திர மாநில சட்டசபை உறுப்பினர்கள், பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு ராஜ யோகா கற்றுத்தர ஏற்பாடு செய்து விட்டாராம்.

"இதெல்லாம் எப்படி ஆரம்பித்தது?" என்று ஹைதராபாத் பிரம்ம குமாரிகள் அமைப்பின் தலைமைப் பொறுப்பில் இருக்கும் சகோதரி குல்தீப்ஜி கூறுகிறார்:

"ஏழெட்டு ஆண்டுகளுக்கு முன், ரக்ஷா பந்தன் சமயத்தில் முதலமைச்சர் சந்திரபாபு நாயுடுவைச் சந்தித்து ராக்கி கட்டினோம். அப்போது, பிரம்ம குமாரிகள் அமைப்பின் சார்பில், முக்கியமான இடங்களில், 'தினம் ஒரு பொன்மொழி' வைக்கும் திட்டம் குறித்துச் சொல்லி, தலைமைச் செயலகத்தின் பிரதான இடங்களில், 'பொன் மொழி' வைக்க அனுமதி கேட்டோம். உடனே அனுமதி கொடுத்தார் முதல்வர்.

"அதுதான் ஆரம்பம். நாங்கள் பொன்மொழிகள் வைக்கத் தேர்ந்தெடுத்த இடங்களில், முதலமைச்சர் தமது அலுவலகத்துக்குப் போகிற லிஃப்டுக்கு நேர் எதிரில் உள்ள இடமும் ஒன்று. தினமும் நாங்கள் வைக்கும் பொன்மொழிகளை ஆர்வமுடன் படித்தார் நாயுடு. தாம் ஊரில் இல்லாத தினங்களில் வைக்கப்பட்ட பொன்மொழிகள் என்னென்ன, என்று விசாரிக்கும் அளவுக்கு ஆர்வம்

காட்ட ஆரம்பித்தார்.

"இந்தச் சூழ்நிலையில், நாங்கள் ஏற்பாடு செய்திருந்த அமைதிக் கண்காட்சி ஒன்றைத் துவக்கி வைக்க அவரை அழைத்தோம். ஆயிரக்கணக்கில் கூடியிருந்த பிரம்ம குமாரிகள் அமைப்பினர் மிகுந்த கட்டுப் பாட்டுடனும், அமைதியாகவும் நடந்து கொண்ட முறை அவரை வெகுவாகக் கவர்ந்து விட்டது. அடுத்து நடந்த எங்கள் கண்காட்சிகளில் அரசாங்கமும் பங்கேற்றது எங்களுக்குப் பெருமை தந்தது.

"ராஜ யோகா தியானப் பயிற்சி பற்றி அறிந்து, தலைமைச் செயலகத்தில் பணி யாற்றும் ஐ.ஏ.எஸ். அதிகாரிகளுக்கு, தியானப் பயிற்சி வழங்க ஏற்பாடு செய்தார். தினமும் அரை மணி நேர தியானம், எப்படி நாள் முழுக்கப் புத்துணர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது என்று அனுபவபூர்வமாய் உணர்ந்த அதிகாரிகள், முதல்வரிடம் தத்தம் அனுபவங்களைப் பகிர்ந்து கொள்ள, படிப்படியாக பல மட்டங்களிலும் ராஜ யோகா தியானப் பயிற்சி வழங்க உத்தர விட்டார் நாயுடு."

சகோதரி ஷீலா சொன்ன சுவையான ஒரு அனுபவம்:

"ஒருமுறை முதலமைச்சர் நாயுடுவைச் சந்திக்கப் போனபோது, எனக்கு எலுமிச்சை ஜூஸ் வரவழைத்துக் கொடுத்தார். நாங் களே தயாரித்த உணவைத் தவிர்த்து, வேறு எதுவும் சாப்பிடக் கூடாது என்பது அமைப் பின் கொள்கையாதலால், முதல்வர் கொடுத்த ஜூஸை நான் மறுக்க நேரிட்டது. இதற்காக மனம் வருந்தினார் முதல்வர். உடனே, எலுமிச்சம் பழம் கொண்டு வரச் சொல்லி, நானே நறுக்கி, ஜூஸ் பிழிந்து, குடித்தபோது நெகிழ்ந்து, 'என் உணர்வுக்கு மதிப்பு தந்து, அதே நேரம் உங்கள் கொள் கையையும் கைவிடாது நீங்கள் செய்த செயல் என்னை வியப்படைய வைத்து விட்டது' என்றார் முதல்வர் சந்திரபாபு நாயுடு."

தகவல்: எஸ். சந்திரமௌலி

# போனா நாயுடு!



பிரம்ம குமாரிகள் அமைப்புக்கு, ஆந்திரா முழுவதும் நானூறு கிளைகள் உள்ளதால், பரவலாக மாநிலம் முழுவதும் சிரமமின்றி தியானம் சொல்லித் தர முடி கிறதாம். ஆந்திராவில் வியக்கத் தகு முன்னேற்றங்களை நிறைவேற்ற 'ஸ்வர்ண ஆந்திரா 2020' என்று ஒரு திட்டம் வைத்திருக்கிறாராம் நாயுடு.

பிரம்ம குமாரிகள் அமைப்புக்கு முப் பத்து நான்கு ஏக்கர் நிலம் வழங்கியிருக்கிறது ஆந்திர அரசு. இங்கே பிரம்மாண்டமான அளவில் தியானம் மற்றும் நிர்வாக மேம் பாட்டு இயல் பயிற்சி மையம் ஒன்று உருவாகப் போகிறது.

பிரம்ம குமாரிகள் அமைப்பைச் சேர்ந்த

• மவுண்ட் அபுவில் நாயுடு

# சில்லுக் கருப்பட்டி

## தாமரை மணாளன்

பரபரத்துக் கொண்டிருந்த கருக்கல் நேரம். தூங்கிக் கொண்டிருந்த கண்ணன் விழித்த போது தெருவின் அலறல் அவன் காதுகளைக் கூர்மையாக்கியது. எப்போதாவது கோயில் கொடை நாளில் மட்டுமே ஊரில் இது போன்ற சப்தங்களைக் கேட்க முடியும். இங்கு தினந்தோறும் கூச்சல். ஜன சந்தடி நெரிசலில் இது ஒன்றும் புதிதல்ல.

அறையிலிருந்து வெளியே வந்து பார்த்தான். மாடியிலிருந்து கீழே பார்த்தவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. வளைந்து வளைந்து போகும் ரோடு. கண்களுக்கெட்டும் தூரம் வரை விளக்குகள் பூத்திருப்பதைப் பார்க்க அவனுக்கு வியப்பாக இருந்தது.

"என்ன முழிச்சாச்சா?" என்றாள் ருத்ரம்மா.

அவளைப் பார்த்ததும் ஏதோ பரபரப்புத் தொற்றிக் கொள்ள 'ஆமாம்' என்றான்.

புது ஊரு, புது மனிதர்கள் என்ற பயமெல்லாம் அவனுக்கு இல்லை. ருத்ரம்மா தண்டபாணிக்கு உறவுக்காரியாக இருக்கலாம் என்ற மரியாதைதான் அவனது பரபரப்புக்குக் காரணம்.

"இங்க என்ன பண்றதா உத்தேசம்?" கேட்டாள். அவனுக்குத் திக்கென்றது. தண்டபாணியும், பலவேசமுத்துவும் கடையையே தனக்கு எழுதித் தரப்போவதாகச் சொல்லியிருக்கிறார்கள். இவள் இப்படிக் கேக்கிறாளே?

"தண்டபாணி ஒண்ணும் சொல்லலியா?"

"ஆங்... சொன்னான்... உங்கிட்ட என்ன சொல்லி அனுப்புனான்?"

"எனக்கு இந்தக் கடையை எழுதித் தரதா..."

"அப்படியா சொன்னான்? எம்பேர்ல இருக்கிற கடையை உங்களுக்கு நான்தான் மாத்தித் தரணும்?"

"உங்க பேர்லயா?" அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"ஆமா தம்பி. உனக்கு பலவேசமுத்துவையும் தண்டபாணியையும் பற்றி என்ன தெரியுமோ எனக்குத் தெரியாது. ஆனா... அவங்க ரெண்டு பேருமே ஏமாத்துப் பேர்வழிகள்?"

"என்ன சொல்லுறீங்க?"

"சொல்லுறதைப் பொறுமையா கேளு. இந்தக் கடை இப்ப எம்பேர்லதான் இருக்கு. அவங்க ரெண்டு பேரும் உங்கிட்ட பொய் சொல்லியிருக்காங்க. இந்தப் பொய்யை வச்சு அவங்க என்ன காரியம் சாதிக்கப் போறாங்களோ தெரியாது. ஆனா நிச்சயமா ஏதாவது ஒரு விவகாரத்துல மாட்டப் போறாங்க?"

"நீங்க என்னென்னமோ சொல்றீங்களே..."

"பதற்றப்படாதே.. உன்னைப் பார்க்க எனக்குப் பரிதாபமா இருக்குது. அவங்க சொன்னாங்கன்னு வந்திருக்கியேன்னு. நீ வர்றத தண்டபாணி எங்கிட்டே ஃபோன் பண்ணிச் சொன்னான். கடை விற்ற விஷயம் எதுவும் உனக்குத் தெரியவேண்டாம்னு. எனக்கு அப்பவே பத்திக்கிச்சு. யாரையோ ஏமாத்தப் போறான்னு. உன் முகத்தைப் பார்த்தா எனக்கு மனசு கேட்கலை. அதான் உண்மையைச் சொல்லிட்டேன்."

"அப்படின்னா, நான் இப்பவே ஊருக்குக் கிளம்புறேன். அவனை..."

"அவசரப்படாதே, தம்பி. இப்ப நீ ஊருக்குப் போய் நின்னா, அவனோட பணபலத்தாலயும் அரசியல் பலத்தாலயும் எதையும் செய்வான்..."

கண்ணனுக்கு நெஞ்சுக்குள் நெருப்பு மூண்டது. இப்படிப்பட்ட மனிதர்களை அவன் இப்போதுதான் உணர்ந்தான். பலவேசமுத்துவின் அடாவடிப் பேச்சும் தண்டபாணியின் தறிகெட்ட பார்வையும் அவனுக்கு இப்போது புரிந்தது. இவர்களால் செண்பகத்துக்கு ஏதாவது நேர்ந்துவிடுமோ என்ற பயமும் அவனுள்.

"என்ன தம்பி அமைதியாயிட்டே?.."

"இல்ல இப்படி ஏமாத்திட்டாங்களேன்னு தான்."

"இதென்ன விஷயம். இது மாதிரி நிறையப் பேரோட வாழ்க்கையை காலி பண்ணிதான் அவன் பணத்தையும் அரசியல்ல செல்வாக்கையும் அடைஞ்சது... அதை விடு. நீ என்ன பண்ணப் போறே...?"

"நான் ஊருக்கே..."




''வேண்டாம். ஊர்ல உனக்கு வேலையில்லை. அங்க போய் ஊர் சுத்தறதுக்குப் பதிலா இங்கயே இரு..''

''இங்க எப்படி?''

''தம்பி, சென்னையில் எப்படியும் பிழைக்கலாம். கொஞ்சம் திறமையும் நிறைய பேச்சு சாமர்த்தியமும் இருந்தா போதும். அதுக்காக என் கடையில நீ வேலை பாருன்னு சொல்ல வரலை. பாரீஸ் கார்னர்ல துணிமணிகளை இஸோ கணக்குல வாங்கி, என் கடை முன்னால தரையில போட்டு வித்துக்கோ. நீயும் சுயமா தொழில் பண்ற மாதிரி இருக்கும். அதுல வர்ற லாபத்துல கொஞ்சம் கொஞ்சமா சேமிச்சேன்னா, சில வருஷங்கள்ல நீ தனியா கடையே போடலாம்.''

கொஞ்சம் யோசித்தான். இது நல்ல விஷயம்தான். செய்யலாம். ஏதோ ஒரு வியாபாரம். சுய தொழில். யாரிடமும் போய் கைகட்டி நிற்க வேண்டாம். செண்பகத்தின் மனத்தில் இடம் பிடிக்க இது நல்ல வழி.

''பணத்துக்கு?'' இழுத்தான் கண்ணன்.

''பணந்தானே... நான் தாரேன். ஆயிரம் ரூபாய் தாரேன். இந்தத் தொழிலுக்கு இந்தப் பணம் போதும். இந்தப் பணத்தைக் கடனாத்தான் தாரேன். வட்டியில் லாக் கடனா... நீ ஸ்டெடி ஆகற வரைக்கும் இங்கயே தங்கிக்கலாம். முதல் வேலையா நாளைக்கு மெட்ராஸைச் சுற்றிப் பாரு. பிளாட்பாரத்துல என்னென்ன வியாபாரங்கள் நடக்குதுன்னு கவனி. பத்து நிமிஷம் அவங்க பக்கத்துல நின்னு பார்த்தியானா போதும்'' என்றாள் ருக்ரம்மா.

அவனுக்கு மனசுக்குள் மழை பெய்தது. நாட்டில் நல்லவர்களும் இருக்கிறார்கள்!

"அக்கா, அந்தக் கொள்ளிக் கண்ணு உங்க வீட்டுக்குள்ளலா நிக்கி."

செண்பகத்துடன் வந்து கொண்டிருந்த பக்கத்து வீட்டுச் சிறுமி இப்படிச் சொன்னதும் அவளுக்குச் சிரிப்புத் தாங்கவில்லை.

"கொள்ளிக்கண்ணா? ஏட்டி... உன்னையும் வெறிச்சு வெறிச்சுப் பாத்தானா?"

"பாத்தானாவா? முருங்கைக் குச்சிக்கு பேண்ட்டும் சட்டையும் போட்ட மாதிரி இருந்துக்கிட்டு, தெருவுல ஒரு புள்ளை யலுவோல விடாம, பாத்துக்கிட்டிருக்கான் அந்தப் பய, நீ எதுக்கும் பாத்து இருந்துக் கோக்கா, நான் வாரேன்."

அவள் தனது வீட்டுக்குச் சென்றாள்.

செண்பகம் அவளையனுப்பிவிட்டு வாசலுக்கு வந்தாள். கார் நின்று கொண்டிருந்தது. டிரைவர் பீடியை இழுத்துக் கொண்டே எதிர்வீட்டை நோட்டம் விட்டுக் கொண்டிருந்தான்.



"கவலைப்படாதீங்க; என் சொந்த வீடு மாதிரி பார்த்துக்கறேன்'னு சொன்னாரேன்னு நம்பி வீட்டை வாடகைக்கு விட்டது தப்பாப் போச்சு..."

"ஏன் சுவரில் ஆணி அடிக்குறாரா?"

"அப்படியிருந்தா தேவலையே, வீட்டை விற்கவே விலை பேசறாரு!"

— பம்மல் நாகராஜன்

வீட்டுக்குள் போனவள் தாம்பாளத் தட்டைப் பார்த்தாள். திரும்பி அம்மாவின் முகத்தைப் பார்த்தாள். அவள் முகத்தில் தெரிந்த கடுகடுப்பு விவகாரத்தை அவளுக்குப் புரிய வைத்தது. சேரில் உட்கார்ந்திருந்த தண்டபாணியும், பலவேசமுத்துவும், சொருக அக்காவிடம் ஜாடையாக ஏதோ சொல்ல, அவன், "வா செண்பவம், நீயே வந்துட்டே" என்றான்.

"எங்க வந்துட்டேன்?"

"நல்ல விஷயம் பேசிட்டிருந்தோம். உன்னைக் காணலை. நீயே இப்ப வந்துட்டே. உங்கிட்டயே கேட்டுர வேண்டியதுதான்..."

"என்ன கேக்கப் போறிய?"

"நம்ம தண்டபாணிக்கு உன்னைக் கட்டிக் கொடுக்கலாம்னு அவிய அப்பா விருப்ப படுதாவ."

"அவியளுக்கு மட்டும் விருப்பம் இருந்தா போதுமா?"

"நீ உன் விருப்பத்தைச் சொல்லு."

"சொல்லுறதுக்கு என்ன இருக்கு. விருப்பம் இருந்தாத்தான் உள்ள நுழைஞ்ச உடனேயே சொல்லியிருப்பேனே."

பலவேசமுத்துக்கு இருக்க முடியவில்லை. முகத்தில் கோபம் ஜிவ்வென்று ஏறியது. கண்களில் சிவப்பு.

"செண்பகம், நீ சின்னப் புள்ளை. வாழ்க்கையைப் பத்தி உனக்கு என்ன தெரியும்? பெரியவங்க எதையும் நல்லதுக்குத் தான் செய்வாங்கன்னு புரிஞ்சுக்கோ."

"யாரை பெரியவங்கன்னு சொல்லுறியோ... உங்களையா, எங்கம்மாவையா? இல்ல இந்த சொருக அக்காவையா? நீங்க எங்க ஊருக்கு வந்திருக்க விருந்தாளிக்க மாதிரிதான் இப்பவும். வந்த இடத்துல தூங்குறதுக்கு இடம் கொடுக்கலாம். குடித்தனம் நடத்த இடம் கேட்கறது தப்பு.... பெரியமனுஷங்க இதத் தெரிஞ்சுக் கணும். உங்க பணமும் அரசியல் செல்வாக்கும் மட்டும் நல்ல வாழ்க்கையைத் தந்துராது. பொம்பளைக்கும் மனசு இருக்கு. ஆசாபாசம் இருக்கு. அந்த உரிமையில இதைச் சொல்லு தேன். முதல்ல இங்கிருந்து கிளம்பிப் போங்க."

ஆக்ரோஷமாக எழுந்த தண்டபாணியை, கையைப் பிடித்து இருத்தினார் பலவேசமுத்து. அவளைப் பார்வையால் முறைத்துவிட்டு, "சரி சொருக, கௌம்பு" என்றார். ராமக்கனி அம்மாளிடம் திரும்பி, "பரவாயில்லை, என்னை எப்படி மூக்கறுக்கணுமோ அப்படி அறுத்திட்டீங்க, வரட்டுமா?" என்றார்.

"இதுல மூக்கறுக்க என்ன இருக்கு? நீங்க பொண்ணு கேட்டீங்க. இல்லைன்னு சொன்னோம். அவ்வளவுதான்."

"சரி சரி வாரேன். போய்ட்டு வாரேன்." என்றார் பலவேசமுத்து.

வீட்டுக்குள்ளிருந்த செண்பகம் "ஆ..." என்று அலறினாள்.

(தொடரும்)



# அமரர் கல்கி நினைவு
# இளமைச் சிறுகதைப் போட்டி-2003

**படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!**

**முதல் பரிசு – ரூ.10,000 இரண்டாம் பரிசு – ரூ. 7,500**
**மூன்றாம் பரிசு – ரூ.5000**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ.500 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு! எழுதுபவர், முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராக இருந்தால் கூடுதல் போனஸ்! மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை.

கதை இளைஞர்களை மையப்படுத்தி எழுதப்பட வேண்டும் என்பது முதல் நிபந்தனை.

***விதிமுறைகள்:***

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்படமாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராயின் ஏதாவதொரு அத்தாட்சி (உம்: பத்தாம் வகுப்பு டி.சி.ஜெராக்ஸ்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2003'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 3 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும்***
***உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

**– ஆசிரியர்**





• ஊர்மிளா

# அழகான கணக்கு!

**ம**னித கம்ப்யூட்டர் சகுந்தலா தேவி பயங்கர கோபத்திலிருக்கிறார். பெங்களூரில் மிகவும் புகழ் பெற்ற வோக்கார்ட், கார்டன் சிட்டி மருத்து வமனை, ஒரு சில லேப்கள் யாவும் சேர்ந்து, தமக்கில்லாத வியாதி ஒன்றை இருப்பதாகக் கூறி, தம்மை துன்பத்திற்குள்ளாக்கியதாகக் குற்றம் சுமத்துகிறார் சகுந்தலா.

எனக்கு மூச்சுவிட சிரமமாகயிருந்ததால் ஆஸ் பத்திரிக்குப் போனேன். அங்கிருந்த நிபுணர்கள் சில பரிசோதனைகள் செய்வதற்காக ஒரு லேபுக்கு அனுப்பினார்கள். பிறகு ரிப்போர்ட்டைப் பார்த்து 'நீ இன்னும் இரண்டு மாதங்களுக்குத்தான் உயிருடன் இருப்பாய்' என்று சொல்லிவிட் டார்கள். ஒரு டாக்டர் வந்து என்னிடம் 'உன்னுடைய உறவினர்கள், சொத்து விவரம், பாங்க் பாலன்ஸ் போன்ற விவரங்கள் வேண்டும். நீ இறந்து விட்டால் 'பாடியை' எடுக்க மற்றும் ஆஸ்பத்திரி, பில் செட்டில்மெண்டுக்கு இதெல் லாம் தேவை'' என்றார். முதலில் எனக்குக் கான்ஸர் என்றார்கள். பிறகு காசநோய் என்று சொல்லி அதற்கு சிகிச்சை ஆரம்பித்த னர். எனக்கு ஏதோ இடறவே, மும்பைக்கு ஓடி ஹிந்துஜா மருத்துவமனையில் சேர்ந் தேன். எனக்குக் கான்ஸரும் இல்லை, டி.பியும் இல்லை என்று சொல்லிவிட்டனர். அந்தப் பொய்யர்களைச் சும்மா விடுவதாக இல்லை...'' என சூளுரைக்கும் சகுந்தலா நுகர்வோர் மன்றத்தில் சுமார் இருபத்தைந்து கோடி ரூபாய்க்கு நஷ்டஈடு வழக் குத் தொடர இருக்கிறாராம்.



• சகுந்தலா தேவி

வோக்கார்ட் மருத்துவர்களும் கொதித்துக் குமறுகிறார்கள். ''சகுந்தலாவிடம் நாங்கள் 'கால(ன்) விவரம்' குறித்துப் பேசவே யில்லை. அட்மிட் பண்ணுவதற்கு முன், உள்ளூரில் உறவினர் இருக்கிறார்களா என, எல்லாரிடமும் மாமூலாகக் கேட்கும் கேள்விதான் இவரிடமும் கேட்கப்பட்டது. சொத்து விவரம் பற்றிப் பேசவேயில்லை. கான்ஸர் இருக்கிறது என்று திட்டவட்டமாகச் சொல்லவேயில்லை. சந்தேகித்தோம், அவ்வளவு தான். அபாண்டமாக அக்மார்க் பழிகளை எங்கள் மீது அள்ளி வீசி யிருக்கிறார். எங்கள் பெயர் கெட்டு விட்டது. களங்கம் ஏற்படுத்தி விட்டார். நாங்களும் சும்மா இருப்பதாயில்லை' என்கிறது மருத்துவமனை.

கணக்கு, எங்கியோ உதைக்கிறது!

● டபுள் ரோல் சினிமாவில் மட்டும்தானா? நிஜ வாழ்விலும் முடியும் என சாதித்திருக்கிறார் ஒரு விஞ்ஞானி. சுமார் இருபது வருடங் களாக இந்த ரோலில் வெளுத்து வாங்கிக் கொண்டிருந்தார் என்கிறது சிபிஐ.

வெங்கட்ரமணப்பா, மத்திய அரசு சார்ந்த நேஷனல் ஏரோனாடிக்ஸ் லேபரட்ரியில் சுமார் முப்பது வருடங் களாக விஞ்ஞானியாகப் பணிபுரிந்து

வருகிறார். கூடவே ஹாவேரியில் மாநில அரசு சார்ந்த அலுவலகம் ஒன்றில் இருபது வருடங்களாக பொறுப்பான பதவி வகித்து வருகிறார். டபுள் வேலையையும் யாருக்குமே சந்தேகம் எழா வகையில் சிறப்பாகவே செய்து வந்திருக்கிறார்.

மத்திய அரசு அலுவலகங்களில் சனி விடுமுறை என்பதால் இவர் ஹாவேரிக்குப் போய் ஒருநாள் வேலையைப் பார்த்து விட்டு கூடவே வாரம் முழுவதற்குமான கையொப்பமும் போட்டு விடுவாராம். (அடடா!) பெங்களூர் – ஹாவேரி எட்டு மணி நேரப் பயணம். சுளையாக இரண்டு சம்பளங்களையும் வாங்கியிருக்கிறார். இவரைப் பற்றிய புகார்கள் வரவே (யாரது போட்டுக் கொடுத்தது?) சிபிஐ தீவிரமாகக் கண்காணிக்க ஆரம்பித்திருக்கிறது. "இரண்டு வேலை பார்த்தேன்" என்பதை அவரே ஒப்புக் கொண்டிருக்கிறார். ஆனால் எந்த விளக்கமும் தர மறுத்து விட்டாராம். அதுதான் பிடித்து விட்டீர்களே'' என சலித்துக் கொள்கிறாராம்! ஒரு விஞ்ஞானி இப்படி டபுள் - ஆக்ட் கொடுத்திருக்கிறாரே, என்று கணக்கில்லாமல் பாராட்டு வேறு குவிந்ததாம்!

சுகாதார அமைச்சர் சுகோடு திம்மப்பா அடிக்கடி மருத்துவமனைகளுக்கு திடீர் விஸிட் கொடுப்பது வழக்கம். இதனால் வேலைகள் ஒழுங்காக நடக்கும் என்பது அவர் மனக் கணக்கு. ஆனால் சமீபத்தில் ஒரு ஆஸ்பத்திரிக்கு திடீர் விஸிட் அடித்த போது அவருக்கு ஓர் அதிர்ச்சி. காலை ஏழு மணிக்கு மருத்துவமனைக்குச் சென்றிருக்கிறார் மாண்புமிகு. ஆனால் நோயாளிகளுக்கோ அமைச்சரைப் பார்த்து முகம் சுருங்கி விட்டதாம். "நீங்களும் உங்க குழுவும் இங்க வந்தா, காலை உணவா எங்களுக்கு வைச்சிருக்கிற பாலும் பிரட்டும் உங்களுக்குப் போயிடும். நாங்க பசியோட கிடக்க வேண்டியதுதான்'' என்றனராம் ஈனஸ்வரத்தில். அதிர்ச்சியடைந்த அமைச்சர் உடனே நோயாளிகளைக் காப்பாத்தணும்' என்று பால், பிரட்டு, கணக்கு வழக்கு பார்க்க உட்கார்ந்து விட்டாராம்!

பிரட்டு கணக்கா? புரட்டு கணக்கா.. விசாரணையில் தெரியவரும்...

பெங்களூர் புறநகர்ப் பகுதியில் அமைந்திருக்கும் 'சௌக்யா' இயற்கை மருத்துவமனைக்கு ரஜினியை ஒரு விஸிட் அடிக்க வைத்துவிட்டால் போதும், ஆஸ்பத்திரி மிகுந்த புகழ் பெற்றுவிடும் என்று நிர்வாகத்தினர் போட்ட கணக்கு, சுளையாக மதிப்பெண்கள் பெற்று விட்டதாம்.

லேட்டஸ்ட் விஸிட்: - நடிகை ஊர்மிளா. அழகான கணக்குதான்!

— லதா சேகர்

## மினி மேஜிக்!

படத்தைப் பாருங்கள். சிவப்பு உடையில் படுத்திருப்பது குழந்தை இல்லை. நாலரை அடி உயர இளம் பெண். அந்தப் பெண்ணைப் படுக்க வைத்து, வலது பக்கத்தில் உள்ள சக்கரத்தைச் சுழற்றச் சுழற்ற, பெண்ணின் உடம்பு அப்படியே உயரம் குறைந்து, குழந்தை சைஸுக்கு ஆகிவிடுகிறாள். ஆச்சரியத்தில் மிதக்கிறது அரங்கம். "இது நானே உருவாக்கிய மேஜிக்'' என்று பெருமையுடன் சொல்கிறார் மித்ரா. "ஒரு பெண்ணை, இரண்டாகத் துண்டிப்பது என்பது, எல்லா மேஜிக் நிபுணர்களும் செய்து காட்டும் ஐட்டம்தான். ஒரு சிறுமி, பெண்ணைத் துண்டாக்கும் என்னுடைய மேஜிக்கைப் பார்த்துவிட்டு, "இது எனக்குப் பிடிக்கவில்லை; என்னைப் போன்ற சிறுமிகள் ரசிக்கும்படியாக வேறு ஏதாவது செய்து காட்டக் கூடாதா?'' என்று கடிதம் எழுதியிருந்தாள். அதன் விளைவுதான் இந்த மேஜிக்!'' என்றார் மித்ரா.

— எஸ். சந்திரமௌலி

சாஸ்தா கோவில் பந்தலைப் பிரிக்கிறார்கள். இன்றும் வாத்தியார் கல்பீடத்தில் தான் உட்கார்ந்து இருந்தார். அவருக்கு இருப்பாக இருக்கவில்லை. நிம்மதியாக உட்கார முடியாமல் இருந்தார். என்றுமில்லாமல் இன்று கோவிலுக்குள் அருள் கூடினாற்போல் இருந்தது! சாஸ்தாவுராயனும் கருப்பசாமியும் தீர்க்கமாக இருந்தனர். கல் விளக்கில் சுடர் நடுங்கிக் கொண்டிருந்தது! அவர் மனமும் அப்படித்தான். கண்ணை மூட முடியவில்லை. மூடினால் அந்தச் சுடர் மாதிரி நடுங்கியது.

கோவில் வாசலில் பெண்கள் கூட்டம். கடைசி நாள் இன்று. வழக்கத்துக்கு மாறான கூட்டம். சிவப்பும் நீலமும் பச்சையுமாகப் புடைவைகள். பொட்டும் வளையல்களும், ஜரிகைப் பாவாடையுமாகச் சிறுசுகள். கோவிலைப் பார்த்தார். வசந்தியைக் காணவில்லை. பழைய பட்டும், நகையும், மஞ்சள் தெறிக்கின்ற முகமுமாய் பளபளக்கின்ற பெண்கள் கூட்டத்தில் அவளைக் காணவில்லை. இதோ வந்து விடுவாள் என்று இரண்டு மூன்று மணி நேரம் காத்திருந்தார். வரவில்லை.

அவனைக் கோவில் மாடு முட்டிவிட்டது. குத்துயிரும் குலையுயிருமாகத் தெருவில் கிடந்தவன், எப்படியோ பிழைத்துக் கொண்டான். அதிலிருந்து அவனை மாடுமுட்டி என்றுதான் கூப்பிடுவது. சரி! அவன் மகனுக்காவது பேர் வேண்டாமா?

அவன் சிறு வாங்கருவாளை வைத்துக் கொண்டு, முடிச்சுகளை அவிழ்த்துக் கொண்டிருந்தான். ஆள் வாட்ட சாட்டமாகத்தான் இருக்கிறான், ஒங்கு தாங்கான ஆள் தான். வாத்தியார் அவனைப் பார்த்தார். இப்போதுதான் அவனைப் பார்க்கிறார். தெருவில், கடை வீதியில், வாய்க்காலில், ஆற்றில் இப்படி பந்தல் பிரிக்கிற இடத்தில், போடுகிற இடத்தில் பார்த்திருக்கலாம். கண் பார்த்தால் போதுமா? மனசில் நிற்க வேண்டாமா. எப்படியோ அந்தப் புண்ணியத்தை தெய்வானைதான் கட்டிக் கொண்டாள். வாத்தியார் அவனையே சற்று நேரம் பார்த்தார். அவருக்குச் சங்கடமாக இருந்தது.

தான் அந்தத் தெய்வானையிடம் பேசியிருக்கப்படாதோ! ஏதோ வேடிக்கை பண்ணிவிட்டோமோ என்னவோ. என்ன வார்த்தை சொல்லி விட்டாள். அப்போது ஒன்றும் தெரியவில்லை. அவள் அப்பால்

# சுவாசிக்கத் தெரிந்தவர்கள்

பந்தல் பிரிக்கின்ற வேலை ஒரு பக்கம். பிரித்த பகுதிகளில் பாலை நார் சுருண்டு சுருண்டு கிடந்தன. பிரிக்காத பகுதிகளில் பொட்டுப் பொட்டாய் மஞ்சள் வெயில் திட்டுகள். பந்தலை வேகமாகப் பிரிக்கிறான். அவன் தான் இந்தப் பந்தலைப் பிரிக்கிறது. மாடுமுட்டி மகன். அவன் பேர் என்ன? அவன் அப்பனுக்கே பேர் இல்லை.

நகர்ந்து விட்ட பின்புதான் அந்தச் சங்கடம். ஏதோ அசிங்கத்தை மிதித்துவிட்டது போல் ஓர் உணர்வு. இப்படி மொட்டையாக உட்கார்ந்திருப்பதே, சிந்திப்பதே, முள்ளாக இருந்தது அவருக்கு. வசந்தியைக் காணோம். ஏன் வரவில்லை? அவள் வராததை

4

பாரதிபாலன்

அவரால் வேறு விதமாக அர்த்தம் கொள்ள முடியவில்லை. ஆனால் அவள் வரலையே வரலையே என்று ஒரு குறை உறுத்திக் கொண்டுதான் இருந்தது. வாத்தியார் சிந்தனையில் இறங்கிவிட்டார். இதோ இந்த மாடுமுட்டி மகனுக்கும் அவளுக்கும் தொட்டுக் கொள்ளும் தூரமா? எத்தனை மைல் கடந்தாலும் அவளைத் தொடவா முடியும்? அதற்குத் தனித் துணிவு வேண்டும். மனம் பழக வேண்டும். எப்போது மனம் அவளிடம் மண்டியிட்டது? சங்கரி உயிரோடு இருக்கும் போதும் அவளைப் பார்த்திருக்கிறார். ஆனால் இத்தனை விசாலமாகக் கவனிக்கவில்லை. பின்பு எப்போது அவர் மனம் கடிபட்டது என்று மட்டும் தெளிவில்லை.



அவளைப் பார்த்த ஒவ்வொரு கணத்தையும் கூட்டித் திரட்டினார். ம்ஹூம்! இந்தக் கோவில் அவருக்குப் பெரிய சந்தோஷம். இதோ! இந்த அரசமரம், வேம்பு, கல்மாடம் எல்லாம் சந்தோஷம். இதோ இந்த மணம் கூட அவருக்குச் சந்தோஷம் தரும். பூஜை மணம். பூ. சந்தனம், விபூதி, ஜவ்வாது, கற்பூரம், பத்தி எல்லாம் சேர்ந்த மணம்! ஒரு நாள் உங்களோட இருக்கிறப்பதான் எனக்கு பத்திரமா இருக்கிறாப்புல்ல ஒரு நிம்மதி என்றாளே! அதற்கு என்ன அர்த்தம்? அவளுடைய பார்வை, குழைவு, தொனி எல்லாம் தான் நினைவில் நிற்கிறது. சில சமயம் மௌனம் சூழ நிற்கின்ற போது மின்னும் வான் போல அவள் கண்கள் சுழலும், முகம் முழுவதும் புன்னகை. மனத்தின் அதிர்ச்சிக்கு அவள் புன்னகை தான் மருந்தாகும்!

அதோ! வசந்தி பிராகாரத்தைச் சுற்றிக் கொண்டு வருகிறாள். அவளுடைய நிறத்துக்கு ஒத்துப் போகும் நிறத்தில் ஒரு புடைவை! ஜிலு ஜிலுப்பு மங்கிய

பட்டுப் புடைவை. தோள் வரை நான்கைந்து மடிப்பாகத் தொங்கும் மல்லிகை. ஏதோ சிலையழகு மாதிரி இருந்தது. வாத்தியார் எல்லாவற்றையும் பார்த்தார். கோவில் அழகு மங்கிவிட்டாற்போல் இருந்தது. அவள் இவரைப் பார்த்துக் கொண்டேதான் நகர்ந்தாள். பேசவில்லை. இந்த அன்புக்கு, ஆசைக்கு வார்த்தை எதற்கு? ஒரு பார்வை போதும். தன் அன்புக்கும் ஆசைக்கும் வேட்கைக்கும் வசந்தியைத் தவிர வேறு ஆதரவு ஏது? பந்தல் பிரித்து கிடுகளை அடுக்கி, கட்டிக் கொண்டிருந்தான். அவள் முதல் சுற்றை முடித்து, அந்த வேம்புக்கு அருகில் வந்தாள். வாத்தியாரும் அதற்குத் தோதாகப் போய் நின்று கொண்டார்.

"அதோ அவன் தான் அவள் சொன்னவன்?"

"ம்."

"மாடுமுட்டி மவன்!"

"ம்."

"அவனைப் பாருங்கள்."

"பார்த்தேன்."

"தெளிவாகா விட்டால் மனசு புழுங்கும்."

"நான் ஏன் புழுங்குறேன்."

"நான் சம்பந்தப்பட்டிருக்கேன்."

"ம்ச்சு."

"உங்க மனசுலெ இருந்து என்னை அடிச்சு விரட்டிடணும்னு பாக்குறா."

"அந்த சந்தோஷம் அவளுக்குக் கிடைக்காமப் போச்சே!"

"எப்படி சாது மாதிரி உங்ககிட்ட பேசியிருக்கா பாத்திங்களா!"

"ப்சு! பாவம்."

"பாவமா?"

அப்படியே அவள் முகம் வாடியது! சந்தோஷமோ துக்கமோ அந்த முகம் கண்ணாடியாகக் காட்டி விடுகிறது. தத்தளிப்புடன் வாத்தியார் அவளைப் பார்த்தார். அவள் அழுகையைக் கௌவிக் கொண்டிருந்தாள்.

"வேற என்ன சொல்றது? வுடு!"

"எவளோ ஒருத்தி பத்த வைத்துவிட்டுப் போய்விட்டாள்..."

"வுடு! அம்புட்டுத்தேன் அது வவுசி."

வசந்திக்கு நெற்றி வியர்த்தது. கழுத்து குலைந்தது.

"வீணாச் செரமப் படாத" அவர் அவளுக்கு அருகில் நின்று கொண்டு இதைச் சொன்னார். அவளுக்கும் அவர் இத்தனை அருகில் வந்து நின்றது, சற்று ஆறுதலாக

## ஓவிய கிருஷ்ணன்!

கொடுங்கையூரில் வசிக்கும் ஜி. பால கிருஷ்ணன், உடல் ஊனமுற்றவர். ஆனால் எவரிடமும் கற்காமலேயே அழகாக ஓவியம் வரையும் கலைத் திறன் அவரிடம் இருந்தது.

அவரிடம் இருந்த திறமையைக் கண்டறிந்து, அவரது ஓவியங்களை சி.பி.ஆர்ட் சென்டரில் காட்சிக்கு வைத்திருந்தது 'நந்தினி வாய்ஸ் ஃபர் த டிப்ரைவ்ட்' என்ற சமூக சேவை மையம்.

இருந்தது. முழுப் பந்தலையும் பிரித்துப் போடவும் 'வெறிச்'சென்று இருந்தது! மூங்கில் கம்புகள் மட்டும் நெடு நெடு வென்று நின்றிருந்தன. பொங்கல் சோறும் சுண்டலும் விநியோகம் செய்து கொண்டிருந்தார்கள்.

அம்மாவின் முகம் வெளுத்து விட்டது!

"என்னடீ பேசுற நீ!" என்று அலறினாள்.

"ஊர் சிரிக்கிறது" என்று தெய்வானை சுவரைப் பார்த்தாள். சுவரில் வாத்தியார் மனைவி சுந்தரியும், தெய்வானையும் சேர்ந்து எடுத்துக்கொண்ட படம்! எப்படியோ அது, அந்தக் கழுகுக் கண்ணில் விழுந்து விட்டது! அதை எட்டி எடுத்து, மடியில் வைத்துக் கொண்டாள்.

"எதுக்கு. அத எடுத்த?"

"ம்! காரியமாத்தான்!"

"என்னடீ காரியம்."

"இது இனி இங்க இருக்க வேணாம். அந்த சுந்தரியக்கா ஒரு தடவ செத்தது போதும்..."

"உன்னை யார் அத எடுக்கச் சொன்னா?"

"இது என்னுது தான்."

"உன்னுதா?"

"ஆமா."

"அப்படினா அவன் வரட்டும். கேட்டுக்கிட்டு எடு."

"இது இங்கிருக்க, எனக்கு இஷ்டமில்லெ."

"ஆமாடீ, ஆளில்லாத சமயத்துலெதான் வந்து எடுக்கணுமாக்கும்."

"ஆளில்லாத சமயத்துலெ வர நான் என்ன திருடியா! நடக்குற திருட்டுத்தனம் போதாது! எல்லாம் ஒரு நா வெளியிலெ வராமவா?"

அந்த ஓவியங்களைப் பார்த்து அசந்து போன ஒருவர், மும்பை தொழிலதிபர் சங்கரிடம் தெரிவித்தார். சங்கர், தென்னிந்திய கல்விக் கழகத்தின் புரவலரும் கூட. பால கிருஷ்ணனை உடனே விமானத்தில் மும்பைக்குத் தருவித்து, ஷண்முகாநந்தா ஹாலில் அவரது ஓவியங்களைக் காட்சிக்கு வைத்து, சின்மயாநந்தா மிஷன் சுவாமிஜியைக் கொண்டு அதைத் தொடங்கியும் வைத்தார்!

இப்போது பாலகிருஷ்ணன் வாரம் இருமுறை கொடுங்கையூரிலிருந்து நுங்கம்



பாக்கத்துக்கு வந்து, சைல்ட் டிரஸ்ட் மருத்துவமனை வளாகத்தில் ஓவியம் வரைய பயிற்சி அளிக்கும் ஆசிரியர்!

— சித்தார்த்

"ச்சீய்! சும்மா இரு! ஊரெல்லாம் தீ மூட்டினது போதாதுன்னு, பெத்த வயத்துலெ உலை வைக்க வந்துட்டியாக்கும்! இனிமே இந்த வீட்டுப் படிய மிதிக்காதே.."

"நா எதுக்கு மிதிக்கிறேன். அப்படியா பாவம் பண்ணிப்பிட்டேன்."

"ஆமா... ஆமா... நீ புண்ணியம் பண்ணினவதேன். போ. இனி இந்தப் பக்கம் தல வெச்சுப் படுத்த, ஒன் காலொடியும்..."

"ஓம் புள்ளய எவனும் காலெ ஒடிக்காம இருந்தான்னா சரி."

"ஒன் நாக்கு அழுகிப் போயிடும்."

அம்மா உடல் வெடவெடவென்று நடுங்கியது. கோபத்தில் முகம் இறுகியது. தெய்வானை விருட்டென்று விலகி, நகர்ந்தாள். தெருவில் ஒருமுறை காரித்துப்பி விட்டுப் போனாள். சற்று நேரத்தில் வாத்தியார் வீட்டுக்கு வந்தார். தெய்வானை தெரு தாண்டுவதைப் பார்த்து விட்டார். வேகமாகப் படியேறி வீட்டிற்குள் சென்றார். நா வறட்சியாகத்தான் இருந்தது! பெரிய சுமையைத் தூக்கிக் கொண்டு இருப்பது போல இருந்தது! அம்மாவிடம் அவள் பேசிவிட்டுப் போயிருக்கிறாள். அவமானமாக இருந்தது. சுந்தரி எப்படி இவளோடு சிநேகமாக இருந்தாள். அவளுக்கு இரவும் பகலும் இவளோடுதான் பேச்சு. ஆனால் இந்த தெய்வானையின் குணம் துளிகூட இல்லை!

"ஏம்பா, சாப்பிடலே?"

"வேண்டாமா!"

"ஒரு வடியா இருக்க? மேலுக்கு சேட்டமில்லெயா?"

"ஒண்ணுமில்ல."

"பின்ன என்ன?"

"பசிக்கல."

"சரி, பால் கொண்டாரேன்."

"வேண்டாம்."

"என்னப்பா?"

"ஒறை ஊத்திடுமா."

"இன்னும் அதையே நெனச்சுட்டிருக்கியாக்கும்!"

வாத்தியாருக்குச் சுருக்கென்றது! அம்மா எதைச் சொல்கிறது! கபகபவென்று அடிவயிறு புரண்டது! கண்ணை இறுக மூடிக் கொண்டார். தலைக்குள் தெறிப்பு.

"ஏம்பா, ஒரு வடியாவே இருக்க?"

"ம்."

"நீ முதல்லெ அந்த கோவில்லெ போய் கெடையா கெடக்குறத நிறுத்து. ஒக்கார ஒனக்கு எடமா இல்லெ?"

வாத்தியார் அம்மாவின் முகத்தைப் பார்த்தார்!

"அந்தப் பொண்ணு நம்ம ஜாதி சனத்துலெ பொறந்திருந்தா, இன்னேரமா? ஒனக்கு ஒரு புள்ள பொறந்திருக்கும்யா..."

"அவ செஞ்ச பாவமோ! நா செஞ்ச பாவமோ!"

"ஆமா! இதுக்கு பாவம் செய்வாங்களாக்கும். காலடியிலெ கெடக்குற வைரத்த குருடந்தேன் மிதிச்சுட்டுப் போவான்."

வாத்தியாருக்கு நாக்கு பின்னியது.

"சந்தனப் பேலா கணக்கா இருக்காளே, யாருக்குக் கொடுத்து வெச்சிருக்கோன்னு நெனச்சேன். உம்... நம்ம வீட்டுக்கே வரணும்னு இருக்கு."

வாத்தியார் ஒரு புன்சிரிப்பு சிரித்தார். எல்லாத் தொல்லையும் விடுபட்டாற் போல் அப்பாடா என்று இருந்தது. பயம் எல்லாம் தீர்ந்து தெளிவாயிற்று.

மெல்லிய காற்று வீட்டிற்குள் ஊர்ந்தது.

(முற்றும்)





# வழிகாட்டிய

"என் அப்பா வி. சுப்ரமணியம் அமரர் கல்கிக்கு சித்தி மகன். 1943_ம் வருஷம் அப்பாவுக்கு திருச்சியில் புத்தகக் கடை வைத்துக் கொடுத்தார் கல்கி. கடைக்கு என்ன பெயர் வைக்கலாம்னு பேச்சு வந்தது. அப்பா, 'அகஸ்தியர் புத்தக சாலை'ன்னு அமரர் கல்கியிடம் சொல்ல, "ஓ_ பேஷா வச்சுக்கலாம்"னு ஆமோதித்தார் அவர். அது அமரர் கல்கியின் புனை பெயர்களில் ஒன்று. திருச்சி, தெப்பக்குளம் எதிரே நந்தி கோயில் தெருவில் 'அகஸ்தியர் புத்தக சாலை' தொடங்கப்பட்டது இப்படித் தான்" என்று ஆரம்பக் கதையைச் சொன்னார் அகஸ்தியர் எஸ். கோபாலகிருஷ்ணன்.

"ஆரம்பத்துல பல பதிப்பகங்கள்லேயிருந்து பள்ளிப்பாட புத்தகங்களையும், பல்வேறு துறை சம்பந்தப்பட்ட புத்தகங்களையும் வாங்கிட்டு வந்து விற்பனை பண்ணினாங்க. அப்புறம் நாமே பாடப் புத்தகங்களைத் தயாரிச்சா என்னன்னு தோன்றவே, பாடப் புத்தகங்களைத் தயாரிச்சோம். 'அகஸ்தியர் பதிப்பகம்' உருவானது. அப்பல்லாம், அச்சுத் தொழிலில் அவ்வளவு வசதி கிடையாது. அச்சுக் கோத்தவற்றை, பல நிலைகளில் ப்ரூஃப் பார்த்து, திருத்தியமைச்சு, முழுசா ஒரு ஃபாரம் உருவாக்குவதற்குள்ளேயே, கழுத்து நரம்பு வலி எடுத்துவிடும். அத்தனை சிரமம். அதற்கு அப்புறமும், ஒவ்வொரு ஃபாரத்தின் பிரதியையும் அப்பா, ஹாலில் ஒட்டி வைச்சுருப்பாரு. வர்றவங்க யாராவது பிழை கண்டுபிடிச்சா, ஒரு தவறுக்கு நாலணா பரிசா கொடுப்பாரு. அதுக்காகவே, ஆசிரியர்களும் மாணவர்களும் ஆர்வமா வாசிச்சு, பிழையைக் கண்டுபிடிப்பாங்க. அப்போ, அது கணிசமான அன்பளிப்பு. நாலணாவுக்கு வயிறு முட்ட, டிபன் சாப்பிட்டுடலாமே!" என்றார் புன்னகையுடன்.

பிழைகள் ஏதுமின்றி பாடங்கள் தயாரானவுடன் அதன் முதல் அச்சுப் பிரதியை அரசுக்கு அனுப்பி வைக்க வேண்டும். உயர் கல்விக் குழு ஒன்று அதனைப் பரிசீலித்து, அனுமதியளித்த பிறகே, தனியார் பாட புத்தகங்கள் பள்ளிகளுக்கு விற்பனைக்கு அனுப்பப்படும். பல பதிப்பகங்கள் இத்தொழிலில் ஈடுபட்டிருந்தன. போட்டிகள் நிறைந்த சூழலில், தரம் மிகுந்த பாடப் புத்தகங்கள் பெரும் வரவேற்பைப் பெறவே, இத்தொழில் நன்கு வளர்ச்சி அடைந்திருந்

## வழிகாட்டி!...

**-அகஸ்தியர் எஸ். கோபால கிருஷ்ணன்**



தது. திடீரென்று 1970ல் தமிழக அரசு கொண்டு வந்த புதிய சட்டம், பாடப் புத்தகங்களைத் தயாரித்து வெளியிட்ட தனியார் பதிப்பகங்களை நிலை குலையச் செய்து விட்டது. அது என்ன? எஸ்.கோபால கிருஷ்ணனே சொல்கிறார்.

“தமிழ்நாடு அரசு பாட நூல் நிறுவனம் தயாரித்து வெளியிடும் பாடப் புத்தகங்கள் மட்டுமே அனைத்துப் பள்ளிகளிலும் பயன் படுத்தப்பட வேண்டும் எனவும், தனியார் நிறுவன பாடப் புத்தகங்கள் செல்லாது என் றும் சட்டம் அமலானது. அகஸ்தியர் பதிப் பகத்துக்கு விழுந்த பேரிடி அது. அப்போது தான் அடுத்து வரும் ஐந்து ஆண்டுகளுக்குத் தேவையான அளவுக்கு பாடப் புத்தகங் களை அச்சடித்து ஸ்டாக் செய்திருந்தனர். அந்த அதிர்ச்சியில் அப்பாவுக்கு மார டைப்பு ஏற்பட்டது. அப்போது பி.காம் தேர்ச்சி பெற்றிருந்த என்னை, நூற்று ஐம்பது ரூபாய் சம்பளத்துக்கு, வேலைக்கு வைத்துக் கொண்டார். புதிய சட்டத்தால் முடங்கிப் போன அச்சடித்த காகிதங்களை டன் கணக்கில் பழைய பேப்பர் விலைக்கு எடைக்குப் போட்டோம். வெறுத்துப் போன அப்பா, சில வருஷங்கள் கழித்து இறந்து விட்டார். தொழிலில் பெருத்த நஷ்டம். நிறுவனத்தை மேற்கொண்டு நடத்திச் செல்ல வேண்டிய பொறுப்பு. இரண்டும் என்னிடம் தரப்பட்டன.

“புத்தகத் தொழிலை விட்டுவிட்டு வந்து விடு, வேறு தொழில் அமைத்துக் கொள் ளலாம்” என்று பல நண்பர்கள் வற்புறுத்தி னார்கள். ஆனால் நான் ஒப்புக் கொள்ள வில்லை. எனது அப்பா எனக்குச் சொன்ன புத்திமதியையே அவர்களுக்குப் பதி லாகத் தந்தேன்'' என்றார் எஸ். கோபாலகிருஷ்ணன்.

''இடையூறுகளும் தொழில் நஷ் டமும் இடையிடையே வந்து போகும். 'செய்யும் தொழிலே தெய்வம்' என்று நினைத்து, ஒரே தொழிலில் கவனம் செலுத்த வேண்டும். வியாபாரத் தில் உள்ள பிரச்னைகளை களையும் திறமையை, அனு பவம் கற்றுக் கொடுக்கும். சிறப் புடன் எதையும் செய். புதிய விஷயங்களை யோசி'' என் பதுதான் பெரியவர் வி. சுப்ர மணியம் சொன்ன அறி வுரை. அதையே சத்திய வாக்காகக் கொண்டு, தோல்வியைக் கண்டு துவளாமல், அடுத்து என்ன செய்யலாம் என் கிற யோசனையில் ஆழ்ந்து போனார் எஸ். கோபாலகிருஷ் ணன்.

'பாடப் புத்தகங் கள் தானே

தட்டுங்கள் திறக்கும்



* மகன் கிரீஷ் உடன் கோபாலகிருஷ்ணன்

போடக்கூடாது. பாடப் புத்தகங்களுக்கு நோட்ஸ் போடலாமே' என்ற ஐடியா உதித்தது. உயர் நிலைப் பள்ளி வரை அகஸ்தியர் கைடுகளும், கல்லூரி பாடப் புத்தகங்களும் தரச் செறிவுடன் வெளி வர ஆரம்பித்தன. இழந்த இடத்தை மெள்ள எட்டத் தொடங்கியது அகஸ்தியர் நிறுவனம்.

கைடு புத்தகங்கள் சக்கைப் போடு போடத் துவங்கியதும், பல புதிய பதிப்பகங்கள் புற்றீசலாய்க் கிளம்பி வந்தன. மறுபடி போட்டி வியாபாரத் தந்திரங்கள்! மீண்டும் ஒரு சரிவு.

மனம் தளராமல், வெவ்வேறு யுக்திகளை யோசித்துக் கொண்டிருந்தபோது, வாடிக்கையாளர்கள் தந்த யோசனைகளே அடுத்த வெற்றிக்கு ஆதாரம் அமைத்துக் கொடுத்தன.

“ஆந்திராவிலிருந்தும் லக்னோவிலிருந்தும் இந்தி கைடு புத்தகங்களை வரவழைத்து விற்றுக் கொண்டிருந்தோம். லக்னோவிலிருந்து வருபவை இந்தி டு இந்தி டிக்ஷனரியாகவும், குண்டூரிலிருந்து வருபவை இந்தி டு ஆங்கிலமாகவும் வெளி வந்தன. 'அப்படியில்லாமல், இந்தி - தமிழ் - ஆங்கிலமாக த்ரீ இன் ஒன் டிக்ஷனரி ஒன்றை, நீங்களே பதிப்பித்து வெளியிடலாமே!' என்று வாடிக்கையாளர்கள் பலரும் சொல்ல ஆரம்பிக்கவே, துணிந்து திட்டத்தில் இறங்கினோம்'' என்றார்.

இந்தியிலும் தமிழிலும் புலமை பெற்றிருந்த டாக்டர் எஸ். சௌமிய நாராயணன் என்பவரைத் தலைவராகக் கொண்டு, குழு ஒன்று அமைக்கப்பட்டது. இரண்டாயிரம் பக்கங்கள் கொண்ட இந்த மும்மொழி அகராதி 1995ல் முதல் பதிப்பு வெளிவந்ததும், மிகச் சிறந்த வரவேற்பு பெற்றது. இதுவரை இருபதாயிரம் புத்தகங்கள் விற்பனையாகி சாதனை படைத்துள்ளது.

“இத்துடன் விட்டார்களா வாடிக்கையாளர்கள்? வெறும் பொருள் சொல்லும் அகராதியாக இல்லாமல், உச்சரிக்கும் முறையையும் தெரிவிக்கும்படி விரிவான புத்தகம் ஒன்றை வெளியிடுங்கள்'' என்று நச்சரிக்கத் தொடங்கவே, அர்த்தத்துடன், உச்சரிப்பும் கொண்ட புதுமையான பதிப்பு வெளியானது'' என்று தம்முடைய வெற்றியை, வாடிக்கையாளர்களுக்குக் காணிக்கையாக்கினார் கோபால கிருஷ்ணன்.

மனையடி சாஸ்திரம் முதல் கணிப்பொறி நூல்கள் வரை இங்கு விற்பனையாகின்றன. அகஸ்தியர் சங்கீத ரத்ன மாலா, அகஸ்தியர் சங்கீத வர்ணமாலா என்கிற இரு புத்தகங்களை சமீபத்தில் வெளியிட்டுள்ளனர்.

எழுத்தும் பதிப்பும் மட்டுமல்லாது, இசை, நாட்டியம் என்றும் இவரது குடும்பம் ஆர்வம் கொண்டுள்ளது. சங்கீதக்காரர் போழக்குடி ஸ்ரீராம அய்யரின் மகள் சுதா, எஸ். கோபால கிருஷ்ணனின் இல்லத்தரசி, இசைப்பற்று மிக்கவர். பி.ஏ. படித்திருக்கும் மகன் கிரீஷ் மிருதங்கம் வாசிப்பவர். பொறியியல் மாணவியான மகள் ஷோபிதா, பரத நாட்டியம் ஆடத் தெரிந்தவர்.

“அமரர் கல்கி துவக்கி வைத்த எங்கள் நிறுவனத்துக்கு, இந்த ஆண்டு வைர விழா ஆண்டு. எத்தனையோ சோதனைகள், தடைகளைத் தாண்டி, அறுபதுக்குள் அடியெடுத்து வைத்திருக்கின்றோம் என்றால், அவற்றுக்கு எங்கள் வாடிக்கையாளர்களின் ஆதரவும், நல் ஆலோசனைகளும், அவற்றைச் செயல்படுத்திய எங்கள் ஊழியர்களின் கடுமையான உழைப்பும் மட்டுமே காரணம்'' என்கிறார் அகஸ்தியர் எஸ். கோபால கிருஷ்ணன்.

கட்டுரை: இருள்நீக்கியான்
படங்கள்: பாரத் மெய்ஞானம்

# கஷ்டத்தை ஊதித் தள்ளு!

அது ஒரு கோயில் திருவிழா! இரவு நேரம். வருஷக் கணக்காய் நடைபெறும் ஆர்க்கெஸ்ட்ராவுக்கு இந்த ஆண்டு விடுமுறை. சிறு பந்தலின் கீழமர்ந்து நாகஸ்வர இசைக் குழு ஒன்று தன் கச்சேரியைத் துவங்க ஆயத்தமாகின்றது.

கிராமத்து முகங்களில் ஆச்சர்ய ரேகை! "அம்புட்டு நீள நாககரத்தைத் தூக்கிக்கிட்டு... இந்தச் சின்னப் பொண்ணு என்னம்மா வாசிக்குது பாரு..!" கூடியிருந்தோரின் விழிகள் வியப்பில் விரிந்தன.

தந்தை தவில் வாசிக்கிறார். தம்பி தாளமிடுகிறான். குழுவில் ஒருவரான கஸ்தூரி என்பவர் சுருதி சேர்க்கிறார். இவர்களின் நடுவே நாயகமாய் அமர்ந்து நாகஸ்வரம் வாசிக்கும் அகிலாண்டேஸ்வரிக்கு வயது பதினொன்று! சுற்று வட்டாரத்தில் இவரை 'நாகஸ்வர ராணி' என்கிறார்கள்!

• அகிலாண்டேஸ்வரி



• குடும்பத்துடன் அகிலாண்டேஸ்வரி

முசிறி - ஆமூரிலிருந்து ஏழு கிலோ மீட்டரில் உள்ள திண்ணைக்கோணம் கிராமத்தில் அகிலாண்டேஸ்வரியைச் சந்தித்தோம். "எங்களுடைய குடும்பம் இசைக் குடும்பம். நாகஸ்வரம், தவில் வாசிப்பது பரம்பரைத் தொழில். எனக்கு இரண்டு பையன்கள், ஒரு பெண். அகிலாண்டேஸ்வரியும், சின்னவன் தனபாலும் இப்ப குடும்பத் தொழில்ல இறங்கிட்டாங்க" என்று ஆரம்பித்தார் தவில் வித்வான் முருகேசன்.

"அஞ்சாம் வகுப்புவரை மட்டும்தான் அகிலாவைப் படிக்க வைக்க முடிஞ்சது. வீட்ல ரொம்பக் கஷ்டம். முதல் பையன் கனகராஜ், மனவளர்ச்சி குன்றியவன். என் மனைவியும் நோயாளிதான். இவங்களுக்கு மாசாமாசம் ஆகிற மருத்துவச் செலவுக்கே போராட வேண்டியதாப் போச்சு. இந்த நேரத்துலதான் அகிலா தான் நாகஸ்வரம் கத்துக்கிட்டு கச்சேரி பண்ணினா வருமானம் வருமேன்னு சொன்னா. நானும் சரின்னுட்டு, பொட்டவாய்த்தலை சண்முக சுந்தரம்கிட்ட குருகுல முறைப்படி சங்கீதம் கத்துக்க அனுப்பினேன். மூணு வருஷம் படிச்சா. இப்ப நல்ல வரவேற்பு" என்கிறார் முருகேசன்.

"பரம்பரையா எங்க குடும்பத்துல நாகஸ்வரம், தவில் வாசிச்சாலும் பொம்பளைங்க யாரும் இந்தத் தொழில்ல வரலை. சின்ன வயசுலேயே நாகஸ்வரம் மேல ரொம்ப ஆசை. வீட்ல இருக்கிற நாகஸ்வரத்தை எடுத்து நானா ஏதாவது ஊதிக்கிட்டே இருப்பேன். ஊதறது அவ்வளவு சுலபமான விஷயமில்லை. 'தம்' கட்டணும். கொஞ்சம் கஷ்டம்தான். சின்ன வயசுல அப்பா திட்டுவார். ரொம்ப தயக்கத்தோடதான் அப்பாட்ட சொன்னேன். சரின்னார். இப்ப ரொம்ப சந்தோஷமா இருக்கு. குடும்பப் பணக் கஷ்டம் இப்ப கொஞ்சம் குறைஞ்சிருக்கு. கோயில், கல்யாண விழாக்கன்னு வாசிச்சிட்டிருந்தாலும், இந்தத் துறையில ஏதாவது சாதிக்கணுங்கற ஆர்வம் இருக்கு. நிச்சயம் சாதிப்பேன். இதுக்கு முன்னோடியா அரசு இசைப்பள்ளியில் சேர்ந்து படிக்கலாம்னு இருக்கிறேன்" என்கிறார் அகிலாண்டேஸ்வரி!

• திருநாவுக்கரசு

மெல்லிய வெளிச்சம் பரவிய அந்த ஹாலில் சோபாவில் சாய்ந்தவாறு, பிந்திய இரவுச் செய்திகளைத் தொலைக்காட்சியில் பார்த்தாள் தேவகி. செய்தி முடிந்ததும் தொலைக்காட்சியை நிறுத்திவிட்டு படுக்கை அறைக்குள் போனாள். படுக்கையில் உட்கார்ந்து பத்து நிமிடம் கண்களை மூடி தியானம் செய்ய முயன்றாள். இந்தத் தியானம் பல வருட பழக்கம். முன்பெல்லாம் அதில் ஒன்றி, ஆசை மறந்து, பாசம் விலக்கி, எல்லாச் சுமைகளும் இறங்கிவிட்டது போல் இருப்பாள். வாழ்க்கை என்பதே சுமப்பது தானே? ஒவ்வொரு மனித உயிருக்கும் தனக்காக, குடும்பத்திற்காக, உறவுக்காக, உலகத்திற்காக எத்தனை எத்தனையோ சுமைகள் காத்திருக்கின்றன... அவற்றைத் தியானத்தில் பத்தே நிமிடம் இறக்கி வைத்தது போல் இருக்கின்றபோது எவ்வளவோ இன்பம் தெரிகின்றது...

கண்களை இறுக மூடினாள் தேவகி. எதுவும் தெரியவில்லை. ஆனால் எண்ணத் திரையை மூட முடியவில்லை. கண்களை மூடினால் மட்டும் போதாது. உள்ளே ஊறும் உணர்வுகளைச் செயலிழக்க வைக்க வேண்டும். அவ்வாறு எல்லாவற்றையும் ஒன்று சேர மூடும்போதுதான் தியானம் சுகமாகும். ஆனால் இந்த சில நாட்களாக கண்களை மட்டும்தான் மூட முடிகின்றது; உணர்வுகளை மூட முடியவில்லை.

மூடிய கண்களுக்குள்ளே அவன், நேரில் பார்க்க விரும்பாத போதும் நெஞ்சுக்குள்ளேயே இன்னமும் இருக்கிறான்! அங்கிருந்து அவனை அகற்ற முடியவில்லை அவளால்.

கண்களைத் திறந்து படுக்கையின் எதிர்ப்புறமாய் இருக்கிற கண்ணாடியைப் பார்த்தாள் தேவகி. அந்தக் கண்ணாடியின் ஓரத்தில் ஒரு போட்டோ ஒட்டப்பட்டிருக்கிறது. அது இறந்து போன கணவனின் படம். அதனோடு வேறு ஒரு படம் ஒட்டப்பட்டிருந்தது. அந்தப் படம்தான் அவளுக்கு ஒரு சவால்... அது இப்போது இல்லை; கிழித்தாகிவிட்டது. ஆனால் அந்த இடத்தைப் பார்க்கிறபோது கிழிக்கப்பட்ட படத்தின் ஞாபகம் அவளுக்குள் வந்தது...மின் விளக்கை அணைத்துவிட்டு படுக்கையில் சாய்ந்தாள் தேவகி. கண்களை மூடினாள். தூக்கம் வரவில்லை. தூக்கத்திற்குப் பதிலாக நினைவுகள் அவளை உலுக்கி நின்றன.

கணவன் இருக்கும்வரை வாழ்க்கை என்னவென்று



# வனவாசம்

மாத்துளை சோமு

தெரியாது இருந்தாள் அவள். கணவனே எல்லாம் என எண்ணி இருந்த ஒருநிலை. எல்லா முடிவுகளும் அவரே எடுத்தது. அதை தன் முடிவாகவே அவள் கருதினாள்.

தேவகி பத்துக்கு மேல் படிக்கவில்லை. ஆனால் அவளது அழகும் அடக்கமும் அன்பும் இன்ஜினியர் சுரேந்திரனை திரு மணம் செய்ய வைத்தது. சிட்னி மாப் பிள்ளை என்று அறிமுகம் செய்தபோது, கல்யாணத்திற்குப் பிறகு மகள் சிட்னிக்குப் போக வேண்டுமே என யோசித்த அப்பாவை ஊரில் வெடித்த குண்டும் யுத்த மும் தேவகியை வெளிநாட்டிற்கு அனுப்பத் தள்ளியது. மாப்பிள்ளை விருப்பப்படி சிக்கனமாகத் திருமணம் நடந்தது. அதையே ஊரவர் ஆஸ்திரேலியாவில் இருந்து வந்த மாப்பிள்ளைக்கு, 'கஞ்சத்தனமாக கல்யா ணம் செய்யிறானே' என்று சொன்னார்கள். அந்த விமர்சனங்களைச் செவி மடுக்காத சுரேந்திரன் படிப்படியாக 'இமிகிரேஷன்' வேலைகளைச் செய்து அடுத்த ஆறு மாதத் தில் மனைவியை சிட்னிக்கு அழைத்துக் கொண்டான்.

அவளின் 'பளிச்' மாநிறமும் முகமும் அவன் ஊருக்குப் புதுசு என்ற கதையையும் யார் இந்த அழகான பெண் என்ற கேள்வி யையும் எழுப்பின. பிறகு சனிக்கிழமை போகிற தமிழ் விழாக்களிலும் இதே கதை தான்... ஆனால் அவள் எல்லா இடங் களிலும் புன்னகையோடு நிறுத்திக் கொண்டாள். சுரேந்திரன்தான் 'இவதான் என் வைஃப்' என்று ஆசையோடு அறி முகம் செய்து வைத்தான்.

இரண்டு வருடங்களுக்குப் பிறகு மகள் பிறந்தாள். பெயர் சாதனா... சாதனாவுக்குப் பத்து வயதானபோது சுரேந்திரன் திடீ ரென்று இறந்தான். அதற்குப் பிறகு பிரி தொரு வாழ்க்கை தெரிந்தது அவளுக்கு. உண்மையில் வாழ்க்கையைப் படிக்கத் தொடங்கியது அப்போதுதான். சாதனாவுக்குத் தந்தையாகவும் தாயாகவும் இருந்தாள் தேவகி. அப்படியே மூன்று ஆண்டுகள் ஓடின. பதின்மூன்று வயதில் சாதனா பெரியவளானாள். அதற்குப் பிறகு அவள் உலகம் மாறி, போக்கும் மாறியது. மூன்று மாதத்திற்கு முன் அவளது வாழ்க்கைத் திசையே மாறிப் போனது..

வாசல் கதவில் அழைப்பு மணி சப்தம் கேட்டது. ஒரு விநாடி யோசித்தாள். யாராக

''இருக்கிற இலவசம் போதாதுன்னு இப்ப 'இலவச பாய்' வழங்கும் திட்டம் தொடங்கியிருக்காரே தலைவர், எதுக்கு?''

''சுலபமா சுருட்ட வழியிருக்காம்!''

- தஞ்சை தாமு

இருக்கும்? எவரும் இந்த நேரத்தில் வருவ தாய்ச் சொல்லவில்லையே! மெள்ள படுக் கையை விட்டு எழுந்து மின் விளக்கைப் போட்டு வெளியே வந்தாள். வாசல் கத வில் பொருந்தியிருந்த பூதக் கண்ணாடியில் பார்த்தாள். எதுவும் தெரியவில்லை. மெது வாய்க் கதவுச்சங்கிலியைக் கழட்டாமல் கத வைச் சிறிது திறந்து பார்த்தாள். 'பகீ' ரென்றது. 'இவளா? இவள் ஏன் இங்கு வந் தாள்? இவளைத்தான் தலைமுழுகி விட் டேனே!

கதவைப் 'படாரெ'ன்று சாத்தினாள் தேவகி. மறுவிநாடி 'அம்மா, அம்மா' என்று சப்தம் கேட்டது. அந்த அழுகை 'கொக்கி' யாய் அவளை இழுத்தது. அவள் உற்றுக் கேட்டாள். 'அம்மா - அம்மா' என்ற அழுகையே கேட்டது. வழக்கமான 'மம்மி' என்ற கொஞ்சல் இல்லை. 'அம்மா' என்ற சொல்லில் பாசத்தின் ஆழம் - நடந்த தெல்லாம் தவறு. மன்னித்து விடு அம்மா என்று கெஞ்சும் தோரணை தெரிகின்றது.

மூன்று மாதத்திற்கு முன்பு தமிழிலும் ஆங்கிலத்திலும் சாதனாவிடம் ஒரு தாயாக மட்டுமில்லாமல் ஒரு தோழியாக புத்திமதி சொன்னாள். அவ்வாறு சொன்னபோது சாதனா திமிராகச் சொன்னாள்:

என் வயதும் என் அறிவும் என் வாழ்க் கையைத் தொடங்கப்போதுமானது. உங்கள் அறிவுரை தேவையில்லை.

மாநிறமும் வயதுக்கு மீறிய வளர்ச் சியும், காந்தமாய் இழுக்கும் கண்களும் சாத னாவிற்குச் சொந்தமானவை. கூடவே படிப் பிலும் உச்சத்தில் இருந்தாள். வகுப்பில் எல் லாப் பாடங்களிலும் இரண்டாவது நிலை. முதல் நிலை, அன்ரூ என்ற வெள்ளைக் கார மாணவனுக்கு உரியதாய் இருந்தது. அத னால் இருவரும் நண்பர்களாகப் பழகினார் கள். மிக அமைதியாக, பக்குவமாக நடந்தான் அவன். அவர்கள் இருவருமே படிப்பு சம்பந்தமாகவே பேசினார்கள். அதற்காகவே அந்த நட்பு... எனவே சாதனாவைச் சந்தே



கப்படவில்லை. ஆனால் பிரச்னை வேறு ரூபத்தில் வந்தது.

ஒரு தடவை அன்ரு வீட்டுக்குப் போன போது அன்ருவின் சித்தப்பா பையனைப் பார்த்தாள் சாதனா. அவனும் பார்த்தான். இருவருக்குள்ளும் அதிர்வலைகளை உண்டாக்கின அந்தப் பார்வை. இருவரும் தங்களை அறியாமலே நேசிக்கத் தொடங்கினார்கள். அந்த நேசிப்புக்குத் தொலைபேசி உதவியது. நீண்ட நேரம் - நீண்ட நாட்கள் பேசினார்கள்.

"யாரோடு பேசுகிறாய்?" என்று கேட்ட தேவகியிடம் 'அன்ரு' என்ற பொய்யை உதிர்த்தாள் சாதனா. தேவகி அதை நம்பினாள். ஆனால் பொய் எத்தனை நாளைக்குத்தான் நிஜ வேஷம் போடும்? ஒருநாள் தொலைபேசியில் நீண்ட நேரம் சாதனா சிரிப்பும் மகிழ்ச்சியுமாய்ப் பேசியபோது 'யார்?' என்ற அம்மாவின் கேள்விக்கு வழக்கம் போல் 'அன்ரு' என பொய் சொன்னாள். ஆனால் அடுத்த இரண்டாவது நிமிடத்தில் வீட்டில் 'அன்ரு' வந்து நின்றபோது சாதனாவின் 'பொய்' கலைந்ததைக் கண்டாள் தேவகி.

"நாமெல்லாம் யார்? உன் வயது என்ன தெரியுமா?" என்று தேவகி சாதனாவிடம் கனிவாகப் பேசியபோது அவள் சர்வ சாதாரணமாக ஆங்கிலத்தில் சொன்னாள்:

"எனக்கு பதின்மூன்று முடிகிற வயது. ஆனால் நான் உடலாலும் உணர்வாலும் ஒரு வயது வந்த பெண். எனக்கு பாய் பிரண்ட் தேவை. அதில் என்ன குற்றம் இருக்கிறது?"

சாதனாவின் தலையை வாஞ்சையோடு தடவி மிக மெதுவாகப் பேசினாள்.

"சாதனா, உன் உணர்வு எனக்குப் புரிகிறது. ஆனால் நாம் இலங்கையில் இருந்து வந்த தமிழர்கள். நம் பண்பாடு வேறு. வெள்ளையர்களோடு இந்த உறவு உனக்கு வேண்டாம். நீ வாழ வேண்டியவள்!"

"ஸோ வாட்? நான் இந்த நாட்டுக்காரி. எனக்கு அவன்தான் பாய்பிரண்ட். அவனைத்தான் கல்யாணம் செய்வேன்!"

தேவகி கோபத்தில் சாதனாவை அடிக்கக் கையை ஓங்கினாள். சாதனா திமிறிக் கொண்டு ஓடி, "அடிக்கிற வேலையெல்லாம் என்னிடம் வேண்டாம்" என்று சொல்லிவிட்டு தொலைபேசியில் எண்களை அழுத்திப் பேசினாள். அடுத்த சில நிமிடங்களில் வெள்ளைக்காரப் போலீஸ் வந்தது.

சாதனா அந்தப் போலீசிடம் அம்மாவோடு தான் இருக்க முடியாது என்று உறுதியாகச் சொன்னாள். தேவகி கண்களால் மகளைப் பார்த்துக் கெஞ்சினாள். ஆனால் சாதனா அதையெல்லாம் பொருட்படுத்தவில்லை. போலீஸ் வழியனுப்ப, பாய் ஃபிரெண்ட் வீட்டுக்குப் போய்விட்டாள். தேவகி மகள் செத்தே போனது போல் அழுதாள்.

வைத்தியர் சிவஞானம் அப்பாதான் தேற்றினார்.

"தேவகி! நீ ஒண்டுக்கும் யோசியாதே! உன்ர மகள் மட்டும் இப்படிப் போயிட்டா எண்டு நினைக்காதே.. உவன் தங்கராசட மகளும் இத்தாலிக்காரனோட போயிட்டாளாம். எண்டைக்கு எங்கட ஊரை விட்டு வந்தமோ அண்டைக்கே எல்லாம் போச்சு! இப்ப நாங்கள் வாழ்றது பரதேச வாழ்க்கை... போறது போகட்டும்..."

தேவகி விசும்பி விசும்பி அழுதாள்.

"அழாத புள்ள... வீட்டுக்கு வீடு வாசல் படிதான். காலம் அப்படி... நீ எதையும் யோசியாத..." அவரது ஆறுதல் வார்த்தைகள் தேவகியின் அழுகையை நிறுத்தவில்லை.

இது நடந்து மூன்று மாதத்திற்கு மேலாகிவிட்டது. தன் வயிற்றில் மகள் பிறந்ததையே மறந்த காலம்... புயல் அடித்து வேறு பாதையில் வாழ்க்கையை ஓட்டுகிற போது, இன்னொரு புயலாய் வந்து நிற்கிறாளே சாதனா...?

"நான் நிம்மதியா இருக்கிறேன். தயவு செய்து என்ர வாழ்க்கையைக் கெடுத்துப் போடாதே" என்று கலங்கிய குரலில் தேவகி வீட்டுக்குள்ளே இருந்து கதவருகே நின்று சொன்னது அந்த நிசப்தமான இரவில் வாசலில் கிடக்கும் சாதனாவிற்குக் கேட்டிருக்கும்; கேட்டதால்தான் சாதனா கெஞ்சினாள்.

"அம்மா... என்னை மன்னியுங்கோ... நீங்கள் என்னை மன்னிக்காவிட்டால்

# அந்தரிகி வந்தனமு...

✉ 1.6.03 'கல்கி' ஏதோ ஓர் ஒளியுடன் வந்தது போலிருந்தது. திருப்பினால் ஒளிர்ந்தது சீதா ரவியின் 'கீர்த்தி விலாசம்'. படித்து முடித்ததும் திருவையாறு தியாகப் பிரும்மம் மனத்தில் நிலைத்தது. இது போன்ற கதைகள் ஆன்மிக உணர்வை வளர்க்கும். தொடர்ந்து வெளியிடுங்கள்.

விழுப்புரம், டி. கிருஷ்ணசிங்.

✉ பால கணபதிய சேவனாக நேரில் தரிசனம் தந்து தியாகையரைப் பரவசத்தில் ஆழ்த்திய ஸ்ரீ இராமசந்திர மூர்த்தியின் அருமை பெருமைகளை அப்பாவும் மகள் சீதம்மாவும் வாஞ்சையுடன் பேசிக்கொண்டு இருக்கும்போது, அவர்கள் முன்னர் நம்மையும் கொண்டு போய் நிறுத்திவிட்டார் சீதா ரவி.



ஊத்துக்குளி, ந. சந்திரமௌலி.

✉ 'கீர்த்தி விலாசம்' சிறுகதை உள்ளத்தை உலுக்கியது. 'எந்தரோ மகானுபாவுலு அந்தரீகி வந்தனமு' என்ற தியாகைய்யர் கீர்த்தனையையேதான் எடுத்து வைக்க முடியும். வேறு என்ன செய்ய?

திருவரங்கம், அ. சம்பத்.

✉ தியாகராஜரின் கீர்த்தனைகளைக் கேட்கும் போதெல்லாம் முழு அர்த்தம் தெரிந்து கொள்ளாமல் இருக்கிறோமே என்ற குறை தோன்றும். 'கீர்த்தி விலாசம்' படித்த பிறகு அந்தக் குறை மேலும் தீவிரமடைந்திருக்கிறது.

பெங்களூர், கமலா ராஜாமணி.

எனக்கு ரெண்டு வழிதான் இருக்கு... ஒன்று செத்துப் போவது. மற்றது டவுன்கவுன்சில் அகதியா போறது" என்று ஆங்கிலத்தில் அழுதவாறு சொன்னாள் அவள்.

தேவகிக்கு மகளின் வார்த்தைகள் இதயத்தில் இடியாய் விழுந்தன. சாகப் போகிறேன் என்கிறாளே! கவுன்சில் அகதியாகப் போகப் போகிறேன் என்கிறாளே! இரண்டும் ஒன்றுதான்... போதைப் பழக்கத்தில் மூழ்கிய இளைஞர்கள், கெட்டுப் போன சிறுமிகள், கணவன், மனைவி பிரிவினால் அனாதையான பிள்ளைகள், போன்றோருக்குத் தஞ்சமளிக்கும் இடமே கவுன்சில் ரெஃப்யூஜ். அங்கே போய் சாதனா எப்படி இருப்பாள்? அவள் இன்னமும் குழந்தை... அவள் என் மகள்... என் ரத்தம்... அவளது மனசு இளகியது. ஆனால் திடீரென்று மின்னலாய் எண்ணங்கள் வெட்டின. எவ்வளவோ சொல்லியும் திடீரென்று ஒருத்தனோடு போனாளே, அந்த துரோகம் மறக்க முடியுமா?

படுக்கைக்கு வந்தாள் தேவகி. நேரத்தைப் பார்த்தாள். வைத்தியர் சிவஞானம் அப்பா தூங்கியிருக்க மாட்டார். அவரோடு தொலைபேசியில் தொடர்பு கொண்டாள் அவள்.

"என்ன பிள்ளை... இந்த நேரத்தில்?" சிவஞானம் பேசினார்.

தேவகி, வீட்டு வாசலில் சாதனா கிடப்பதைச் சொன்னாள்.

"அதுக்கு உடனே முடிவு சொல்ல முடியாது. காலையில சொல்றன்..." சிவஞானம் அப்பா பிரச்னைக்குத் தீர்வு சொல்லத் தயங்குவதைப் புரிந்து கொண்டாள்.

இரவு முழுவதும் தேவகிக்குத் தூக்கமில்லை. காலையில் வாசல் கதவைத் திறந்து பார்த்தாள். மெல்லிய வெளிச்சத்தில் வெளியே இலேசான குளிரில் நடுங்கியவாறு வாசலில் கிடந்தாள் சாதனா. அவள் என்ன எதிர்பார்க்கிறாள்?

'பெற்ற தாயிடம் ஒரு மன்னிப்பு. இங்கே இவள் ஓர் இரவு முழுவதும் கிடந்து தவறை ஒப்பியிருக்கிறாளே...! வேறு எவரையும் நம்பாது, வேறு போக்கிடம் இல்லாது பெற்ற தாயை நம்பித்தானே குளிரில் கிடந்திருக்கிறாள்.' மனம் கிடந்து தவித்தது.

உள்ளே தொலைபேசி அழைத்தது. பேசியது சிவஞானம். "உன் மரியாதைக்கு மகளை வீட்டுக்குள்ள எடுக்காதே! அவள் எங்காவது போகட்டும் பிள்ளை!"

தேவகி தெளிவாய்ப் பேசினாள்... "வனவாசம் முடிஞ்சு ராமன் வந்தபோது ராமனிடம் என்ன நடந்தது என்று கேட்காதவங்கள், சீதையிடம் மட்டும் கேட்டாங்களாம்! நான் என்ர மகளிட்ட எதுவும் கேக்க மாட்டன். அவள் வாழ வேண்டும். அவளை மறுபடியும் மனுஷியாக்கி வாழ வைப்பன்!"

தேவகி வாசலை நோக்கி நடந்தாள். ○

# “அப்படியே கிடைக்குமா 1800 கோடி?”

“உங்களுக்கெல்லாம் ரொம்பப் பேராசை. அதனால் தான் அதிக வட்டி கிடைக்குமென்று கண்ட கண்ட நிறுவனங்களில்

• சீதாராம்

• மூழ்கிக்கிடக்கும் ஆர்.பி.எஃப்.

பணத்தை டெபாஸிட் செய்து ஏமாந்து விட்டு, இப்போது எங்கள் உயிரை வந்தெடுக்கிறீர்கள்?” – இது ஓர் ஐ.பி.எஸ்.அதிகாரி.

“பணத்தைப் போட்டு ஏமாந்தவங்க பெரும்பாலும் ஓய்வு பெற்ற ஸீனியர் சிட்டிஸன்ஸ்தான். இதில் உங்களைப் போன்ற ஐ.பி.எஸ். அதிகாரிகள் மட்டுமல்ல, ஐ.ஏ.எஸ். மற்றும் நீதிபதிகளும் அடக்கம்.”

இந்த பதில், கேள்வி கேட்டவரை கொஞ்சம் அதிர்ச்சியடையச் செய்ய, பேச்சை மாற்றுகிறார் அவர்.

1995 – 96 ம் ஆண்டுகளில் – அதாவது ஜெயலலிதாவின் முந்தைய ஆட்சிக் காலத்தின் இறுதியில்

• ‘பாலு ஜுவல்லர்ஸ்’ – புதிய ஆரம்பம்

சீட்டுக் கட்டுக்கள் போல நிதி நிறுவனங்கள் சரிந்தனவல்லவா! தமிழ் நாட்டில் அப்படிச் சரிந்த நிறுவனங்களின் எண்ணிக்கை நானூற்று ஐம்பத்தாறு. அதில் டெபாஸிட் செய்தவர்களின் எண்ணிக்கை பதினெட்டு இலட்சம் பேர். மொத்த டெபாஸிட் தொகை ஆயிரத்து எண்ணூறு கோடி (பாண்டிச்சேரி பட்ஜெட்). இந்த ஆயிரத்து எண்ணூறு கோடியை டெபாஸிட் செய்தவர்களுக்கு வாங்கிக் கொடுக்க உருவாக்கப் பட்டதுதான், தமிழ்நாடு நிதி நிறுவன முதலீட்டாளர் கூட்டமைப்பு. இந்த அமைப்பின் பொறுப்பாளர்கள், கடந்த ஆறு வருடகாலமாக, கோர்ட், போலீஸ் கமிஷனர் அலுவலகம், கோட்டை ஆகிய இடங்களுக்குச் செல்லும் போது, அதிகாரிகளால் கேட்கப்படும் கேள்வியையும், இவர்கள் கொடுக்கும் பதிலையும் தான் முதலில் படித்தீர்கள்.


• இராமசந்திரராவ்

"ஏமாற்றிய ஒவ்வொரு நிறுவனத்தின் பின்னணியிலும் முகம் தெரியாத அரசியல்வாதி ஒருவர் இருக்கிறார். எனவே நிதி நிறுவன அதிபர்கள் சட்டத்தின் சந்து பொந்துகளிலும், அதிகாரிகள், போலீஸ் ஆதரவுடனும் வெளியே ஜாமீனில் வந்து டெபாஸிட் பணத்தில் உல்லாச வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். இப்போது ஜெயிலில் இருப்பவர் 'அனுபவ்' நடேசன் மட்டுமே" என்கிறார் கூட்டமைப்பின் செயலாளர் ராமமூர்த்தி.

**ப**ல நிதி நிறுவன அதிபர்கள் கோர்ட்டின் சம்மதத்துடன் கூட்டமைப்போடு ஓர் உடன்படிக்கை செய்து கொண்டு, டெபாஸிட்காரர்களுக்குப் பணத்தைத் திருப்பிக் கொடுத்து வருகிறார்கள். ராயப்பேட்டை பெனிபிட் ஃபண்ட், ஆழ்வார்பேட் பெனிபிட் ஃபண்ட் ஆகிய நிறுவன டெபாஸிட்காரர்களில் பதினைந்து சதம் பணம் திரும்பப் பெற்று விட்டார்கள். பாலு ஜுவல்லர்ஸ் நிறுவனமும் பணம் திருப்பித் தர முயன்று வருகிறது. ஆர்.பி.எஸ். என்ற நிறுவனம் நாற்பது சதவிகித டெபாஸிட்தாரர்களுக்குப் பணம் கொடுத்து விட்டது.

**இ**ந்த அளவுக்காவது பணம் திரும்பக் கிடைத்ததற்குக் காரணம், கூட்டமைப்பு பொறுப்பாளர்களின் தேனீக்களைப் போன்ற சுறுசுறுப்பான பணி. இந்த வேலைக்காக சோறு தண்ணியில்லாமல் அலைகிறார்கள் ஸீனியர் சிட்டிசன்கள்.

"பேராசை, பேராசை என்று எங்களைக் குற்றம் சாட்டும் அரசு அதிகாரிகளைக் கேட்கிறேன். பதிவு செய்த, மற்றும் செய்யாத நிதி நிறுவனங்களைப் பற்றி பொது மக்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டிய ரிசர்வ் வங்கி, மற்றும் கம்பெனி பதிவாளர் நிறுவனம், ஆகியவை தங்களது பணியை ஒழுங்காகச் செய்தனவா? மக்கள் தவறான நம்பிக்கைக்கு, காரணம் இந்த அமைப்புகளும் தானே?'' என்கிறார் துணைத் தலைவர் சீதாராம்.


• ராமமூர்த்தி

இந்தக் கூட்டமைப்பு எடுத்த நடவடிக்கை காரணமாக தமிழ் நாடு முதலீட்டாளர் நலன் பாதுகாப்புச் சட்டம் போடப்பட்டிருக்கிறது. ஆனால், இதில் சில ஓட்டைகள் இருந்ததனால் அதில் திருத்தம் கொண்டு வரப் போராடி, இப்போதுதான் அந்த வேலை நடந்து முடிந்திருக்கிறது. இந்தத் திருத்தத்தின் படி, நிதி நிறுவனத்தின் முதலாளிகளின் சொத்துக்களை மட்டுமல்லாமல் அதில் கடன் வாங்கியவர்களின் சொத்துக்களையும் பறிமுதல் செய்ய வழிவகை செய்யப்பட்டிருக்கிறது. இனி எதிர் காலத்தில் 'ஏமாற்று வேலை' கொஞ்சம் குறையக் கூடும்.

"என்ன செய்வது? இந்தத் திருத்தம் மிக அவசியமானது. ஆந்திரப் பிரமுகர் ஒருவர், ராயப்பேட்டை நிதி நிறுவனத்துக்கு மட்டும் இருநூற்று முப்பத்தொரு கோடி ரூபாய் கொடுக்க வேண்டும். டெபாஸிட் பணத்தை அவரிடம் கடனாகக் கொடுத்திருந்தது நிறுவனம். இப்போது கடன் வாங்கியவர் இழுத்தடிக்கிறார். இதற்கு தமிழகத்தின் அரசியல் புள்ளிகள் பக்கபலம். நடிகர் சரத்குமார் போன்றவர்கள் திருப்பிக்

கொடுத்து விட்டார்கள்'' என்கிறார் மற்றொரு பொறுப்பாளரான ராமச்சந்திரராவ்.

இந்த ஸீனியர் சிட்டிசன்கள், பல சமயங்களில் புலனாய்வு வேலையும் செய்திருக்கிறார்கள். நிதி நிறுவன அதிபர்களின் சொத்துக்கள் எவ்வளவு, எங்கெங்கே இருக்கின்றன என்பதைப் புலனாய்வு செய்து காவல் துறைக்குச் சொல்கிறார்கள். உடனே காவல் துறை நீதிமன்றத்தில் அந்தத் தகவல்களைச் சொல்லி, அந்தச் சொத்துக்களைப் பறிமுதல் செய்து ஏலம் விட ஏற்பாடு செய்கிறது. இதன் மூலம் பெறும் பணம், டெபாஸிட்தாரர்களுக்குத் திரும்பக் கொடுக்கப்படுகிறது.

"இந்த வகையில் உயர் போலீஸ் அதிகாரிகள் நன்றாகவே ஒத்துழைக்கிறார்கள்'' என்கிறார்கள் இந்தப் பொறுப்பாளர்கள்.

நிதி நிறுவன ஏமாற்று வழக்குகள் மொத்தம் 300. இந்த வழக்குகள் உயர்நீதி மன்றத்திலும், தனி நீதி மன்றத்திலும் நடந்து வருகின்றன. பதிவு செய்த கம்பெனிகள் சினர்ஜி, சன்மாக், எம்.சி.சி. போன்றவற்றின் வழக்குகள் உயர்நீதி மன்றத்திலும் பதிவு செய்யப்படாத நிறுவனங்களான மாக்ஸிமா, ஈஸ்வரி, ரமேஷ் கார், ஸ்நேகா ஆகியவை தொடர்பான வழக்குகள் தனி நீதி மன்றத்திலும் நடந்து வருகின்றன.

ஜாமீனில் இருக்கும் நிதி நிறுவன அதிபர்கள், சங்கச் செயலாளர்களைப் பொய் வழக்கில் சிக்க வைக்கும் சம்பவமும் நடந்திருக்கிறது. திருமுருகா ரியல் எஸ்டேட் குரூப் என்ற நிறுவனத்தார், டெபாஸிட்தாரர்கள் சங்கச் செயலாளர் ரங்கநாதன் என்பவரைக் காவல் நிலையத்துக்குக் கூப்பிட்டு கைது செய்திருக்கிறார்கள். அவரை ஜாமீனில் கொண்டு வருவது பெரும்பாடாகிவிட்டது.

''ஆனால் இப்படிப்பட்ட சம்பவங்களெல்லாம் எங்கள் உற்சாகத்தை முடக்கிவிடாது'' என்கிறார் ராமமூர்த்தி. பதினெட்டு லட்சம் டெபாஸிட்தாரர்களுள், கடந்த ஆறு வருடங்களில் சுமார் இருபதாயிரம் பேர் இறந்து போய் விட்டார்களாம். "எங்கள் குறைகளைச் சொல்லவும், வழக்குகளை விரைவு படுத்த நடவடிக்கை கோரியும், பல முறை முதல்வர் ஜெயலலிதாவைச் சந்திக்க அனுமதி கேட்டோம். கிடைக்கவில்லை'' என்று வருந்துகிறார்கள்.

— ஸ்ரீநிவாசன்

படங்கள் : ராஜன்



"யாரங்கே?''

''மூக்குக் கண்ணாடியைப் போட்டுக்கிட்டீங்கன்னா இந்தக் கேள்விக்கே இடமிராது, மகாராஜா!''

- யமுனா ரங்கநாதன்



''நிதி நிறுவனத்துலே போடலாம்னு கொண்டு போன பணத்தை பஸ்ஸுலே திருடன்கிட்டே பறிகொடுத்திட்டேன்...''

''சரி விடுங்க... ரெண்டும் ஒண்ணுதான்!''

''பருப்பு வாங்கி வரும் போது வழுக்கி விழுந்துட்டியா... ஏன்?''

''அது 'பாசிப்' பருப்பாச்சே!''

- தஞ்சை தாமு



காட்சி : 32

பகல்/காவல் நிலையம்.

பாத்திரங்கள்: நபர், பெண்மணி, காவலர், மோட்டார் சைக்கிள்காரன்.

காவல் நிலையத்துக்குள், ஒரு நடுத்தர வயது நபரும், ஒரு பெண்மணியும் தயங்கிய படி நுழைகிறார்கள். கிராமாந்தர நிலையமாக அது இருக்கிறது. நபர், ரைட்டர் (அல்லது) ஏட்டு மாதிரி, மேசைக்குப் பின்னால் உட்கார்ந்திருப்பவர் முன் போய் நிற்கிறார். எழுதிக் கொண்டிருக்கும் அவர் நிமிர்கிறார். காவல் நிலையத்துக்குரிய, காவலருக்கும் இயல்பாகவே இருக்கும் மெத்தனம் வெளிப் படையாகத் தெரிகிறது.

காவலர்: (தலை நிமிர்ந்து) இன்னா?

நபர்: சார். நாங்க மணல் குப்பத்துல இருந்து வர்றோம்.

காவலர்: (ஏதோ பத்திரிகையை எடுத் துப் புரட்டிக் கொண்டு) உம்...

அங்க, பள்ளிக்கூடம்னு ஒண்ணு நடக் குது ஐயா. அதைச் செல்வம்னு ஒருத்தர் நடத்துறார். புறம்போக்கு நிலத்தை வளைச் சுப் போட்டு, அங்கே, பள்ளிக்கூடம்கிற பேர்ல, பலான சமாச்சாரம் நடக்குங்க, ஐயா.

காவலர்: (பேப்பரை மடித்து வைக்கிறார்... நபரைக் கவனிக்கிறார்... அவருக்குப் பின்னால், ஒண்டிக் கொண்டு நிற்கிறாள், ஒரு பெண்மணி.)

ஓகோ... நீதான் அந்த ஆளா... அந்தச் செல்வம் என்ன பெரிய கொம்பனா? முட்டியைப் பேர்த்துடுவேன், பாரு.. தள்ளிக்கிட்டு வந்து, லாக்கப்ல ஜட்டியோட உக்கார வச்சாதான் புத்தி வரும், இந்த நாய்களுக்கு. கம்ப்ளைண்ட் எழுதிக்கிட்டு வந்திருக்கியா?

நபர்: ஆமாங்கய்யா... (பையில் இருந்து இரண்டு காகிதங்களை எடுத்துக் கொடுக் கிறார்.)

காவலர்: படிச்சு முடிக்கிறதுக்குள்ளே, ஒரு காரியம் பண்ணு... எதிர்க்கடையில போயி, அரை பாக்கெட் கத்திரி சிகரெட் டும், மலாய் போட்டு ஒரு டீயும் வாங்கிட்டு வா...

(நபர், தன் மனைவியைப் பார்க்கிறார். பெண்ணைப் போலீஸ் நிலையத்தில் தனி யாக விட்டுச் செல்வதில் இருக்கும் விபரீ தத்தை உணர்ந்தவர் போல் தெரிகிறது. தயங்குகிறார். இதைக் காவலர் புரிந்து கொள்கிறார்.)

காவலர்: போ... உன் பொண்டாட்டியை நான் கடிச்சுத் தின்னுட மாட்டேன். (திரும் பித் திரும்பிப் பார்த்தபடி நபர் போகிறார். காவலர், விண்ணப்பத்தில் ஆழ்கிறார்... டீயும், சிகரெட்டும் கொண்டு வந்து மேசை யில் வைக்கிறார் நபர்...)

இதுல, யார் யாரோ வந்து போறதா எழுதியிருக்கே... அது போதாது. விபசாரம் நடக்கிறதா எழுது. அப்பதான் ஸ்டிராங்கா இருக்கும்.

(நபர், அப்படி எழுதுகிறார். அதை வாங்கி காவலர் படிக்கிறார். 'சரி' என்று தலையை அசைத்துக் கொள்கிறார்.)

சரி. போ... நாங்க பார்த்துக்கிறோம்.

(இருவரும் நகர்கிறார்கள். காவலர் அந்தப் பெண்ணைப் பார்த்து காலாட்டிய படி, சந்தோஷ மன நிலையில்.)

உன் பேரு இன்னா, சொல்லவே இல்லியே?

பெண்மணி: வெள்ளையம்மா.

காவலர்: பொய் சொல்ற...

பெண்மணி: என்ன சொல்றீங்க?

காவலர்: கறுப்பா இருந்துகிட்டு, வெள் ளையம்மாங்கிறே...(அவள், சங்கடமாகச் சிரித்துவிட்டு நகர்கிறாள். சற்று தூரம் நகர்ந்தபிறகு.)

பெண்: அறிவிருக்கா உனக்கு? பொம் பளைங்க வர்ற இடமா இது? இங்க போயி என்னை அழைச்சிட்டு வந்தியே...

நபர்: என்ன பண்றது? அந்த ஐயா சொன்னாரேன்னுதான்... பொம்பிளைய அழைச்சுக்கிட்டுப் போனாத்தான் 'கேஸ்' இஸ்டாங்கா இருக்கும்னு சொன்னாரு...

(காவல் நிலையத்துக்கு எதிரே, மரத் தடியில், மோட்டார் சைக்கிளில் ஒருவர் அமர்ந்துள்ளார். அவரிடம் போய் நிற் கிறார்கள் இருவரும். வெள்ளைச் சட்டை யும் வெள்ளை வேட்டியுமாக இருக்கிறார் அவர்...)

# ஜீவநதி

தொலைக் காட்சித் தொடர்




**மோட்டார் ஸைக்கிள்காரன்:** எல்லாம் சரியா நடந்ததா?

**நபர்:** ஆச்சுங்க... அந்தாளு, காகிதத்தை வாங்கி வச்சுக்கிட்டாரு... கவனிக்கிறேன்னு சொன்னாரு...

*(மோட்டார் சைக்கிள்காரர், பையில் இருந்து பணம் எடுத்துக் கொடுக்கிறார். நபர், வாங்கிக் கொள்கிறார்.)*

காட்சி : 33

மாலை / வீடு.

*பாத்திரங்கள்:* **வேதகிரி. சண்முகம்.**

*சண்முகம், பனியன் கைலியுடன், டிரான்ஸிஸ்டர் ரிப்பேர் செய்து கொண்டிருக்கிறான். சாய்வு நாற்காலியில் பேப்பர் படித்துக் கொண்டிருக்கிறார் வேதகிரி.*

**சண்முகம்:** அம்மா என்னைக்குத் திரும்பறாங்களாம்... நினைச்சா, வீட்டைப் போட்டுட்டு, திருப்பதி, சைவக் கோயில்கள், வைஷ்ணவக் கோயில்கள்னு 'பேக்கேஜ் டூர்' கிளம்பிடறாங்க... சாப்பாட்டுக்குக் கஷ்டமா இருக்கு, பாருங்க... இதையெல்லாம், நீங்க கேக்கறது இல்லியாப்பா...

**வேதகிரி:** எதுக்குக் கேக்கணும்? கேக்க மாட்டேனே. நாற்பது வருஷம் இந்த வீட்டைத் தாண்டாமே, பொங்கிப் போட்டவங்கதான் உன் அம்மா. இப்போ, 'டூர்' பண்ணணும்னு ஆசை வந்திருக்கு. தடுக்கிறது என்ன நியாயம்... அவளும் மனுஷி தானேடா?

**பிரபஞ்சன்**

**சண்முகம்:** நமக்குக் கஷ்டமா இருக்கே.

**வேதகிரி:** நமக்குன்னு, என்னைச் சேர்க்காதே. எனக்குக் கஷ்டமில்லை. உனக்குக் கஷ்டமா இருந்தா சுசிலாவை அழைச்சுக் கிட்டு வா. அதுதான் நியாயம்.

**சண்முகம்:** அந்த திமிர் பிடிச்ச நாயை, நான் போய் அழைச்சுக்கிட்டு வருவதாவது?

**வேதகிரி:** எப்படி இந்த மாதிரி மனோபாவம் உனக்கு வருதோ தெரியலை. அவ மேல என்ன தப்பு சொல்லு?

**சண்முகம்:** *(நாற்காலியைத் திருப்பிப் போட்டுக்கொண்டு)* தப்பா? வாய் ஒண்ணு போதாதா? கிண்டி, சைதாப்பேட்டை நீளம்.

**வேதகிரி:** புரியுது. அவ புத்திசாலித்தனமா பேசறது உனக்குப் பிடிக்கலை. எந்தப் புருஷனுக்கும் பொண்டாட்டி அறிவாளியா இருந்தா பிடிக்காதே.

**சண்முகம்:** அப்பா, நான் முட்டாளா?

**வேதகிரி:** அதுல என்னடா சந்தேகம்? ஐ.எஸ்.ஐ. முத்திரை போட்ட முட்டாள் நீ. சூரியன், பூமியைச் சுத்துதுன்னு சொன்னே. அந்தப் பொண்ணு, பூகோள வாத்தியார் கணக்கா, அழகா பூமி சூரியனைச் சுத்தறதை எடுத்து விளக்குச்சு. உனக்குக் கோபம் பொத்துக்கிச்சு. எனக்குத் தெரிஞ்சு ஒண்ணு. இன்னும் எத்தனையோ?

**சண்முகம்:** அதைத் தனியா சொல்லி இருக்கலாம். இல்லையா? அத்தனைப் பேர் முன்னால சொல்லணுமா?

**வேதகிரி:** ஏதோ, சிநேகிதக்காரங்க மத்தியில இருக்கோம்கிற எண்ணத்தில் சொல்லிடுச்சு.

**சண்முகம்:** எனக்குதான் அவங்க சிநேகிதமே தவிர, சுசிலாவுக்கு இல்லியே... என் சிநேகிதர் முன்னாலே, அத்து மீறலாமா?

**வேதகிரி:** *(பேப்பரைச் சுருட்டுகிறார்... எறிகிறார். எழுகிறார்.)*

சண்முகம். உன் நண்பர்கள், உன் மனைவிக்கு நண்பர்களா இருக்கக் கூடாதா? தகுதி இல்லைன்னா, யாருக்கு? உன் நண்பர்களுக்கா. உன் மனைவிக்கா. சரி அது கிடக்கட்டும். பொம்பிளைக்கு வேற சிநேகிதர்கள், ஆண் சிநேகிதர்கள் _ இருந்தா, அதுக்கும் சம்மதிக்க மாட்டறீங்க. பெரிய யோக்கியன் மாதிரி பேசறியே... சுசிலாவோட சிநேகிதி வந்தப்போ, அவங்களையே சுத்திச் சுத்தி வந்து, வழிஞ்சயே, அது என்ன சங்கதி?

**சண்முகம்:** எனக்கு வெளியில வில்லனே வேண்டாம். நீங்க ஒருத்தர் போதும்.

# பெல்ஜியம்!

கடந்த ஐந்து மாதங்களில் பிரபல டென்னிஸ் வீராங்கனை செரீனா வில்லியம்ஸைத் தோற்கடித்த கிம் க்ளிஸ்டெர்ஸ், ஜஸ்டைன் ஹார்டெனே இருவருமே பெல்ஜியம் நாட்டைச் சேர்ந்தவர்கள்!

- குல்லு

**காட்சி : 34**

**மாலை / மரங்கள் அடர்ந்த நிழற்சாலையாக இருப்பது நலம்.**

*பாத்திரங்கள்:* **கண்ணன், கீதா**

*மாலை மயங்கும் நேரம். நடைபாதையில் நடந்து கொண்டிருக்கிறார்கள், கண்ணனும், கீதாவும். மாலை, அதற்கென்று இருக்கிற அழகு முகம் காட்டுகிறது. கீதா, திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு நடக்கிறாள்.*

**கண்ணன்:** என்ன, பார்க்கிறே?

**கீதா:** ஒரு எருமை. போஸ்டரைப் பார்த்துக்கிட்டு நிக்குது. அது ஒரு மாதிரி போஸ்டர். 'செக்ஸி'யாக் கூட இருக்கு. மாடு, என்ன யோசிக்கும்னு தோணுது.

**கண்ணன்:** என்ன யோசிக்கும். மனுஷங்க, ஏன் இப்படி மோசமாப் போயிட்டாங்கன்னு யோசிக்கும்.

**கீதா:** மனுஷங்களைப் பத்தி மாடுகளுக்குத் தெரியாதா என்ன? ரொம்ப காலத்துக்கு முன்னமே, மனுஷங்களைக் கண்டு பிடிச்சிருக்கும்.

**கண்ணன்:** எப்படி?

**கீதா:** ஊசி போட்டுப் பால் கறக்கிற இனம். ஆபாச போஸ்டர் ஒட்டற இனம். இருக்கிற வரைக்கும் பாலை ஒட்ட கறந்துகிட்டு மரத்துப் போனதும், கசாப்புக்கு விக்கிற இனம், அனாவசியமா அடிக்கிற இனம், குச்சியால குத்தி புண்படுத்தற இனம், ஓய்வு ஒழிச்சல் இல்லாமே வேலை வாங்குற இனம், மனித இனம்தானே? அதுகளுக்கு, நம்மைப் பத்தி நல்லாவே தெரியும்.

**கண்ணன்:** சாபம் கொடுக்கிறதுன்னு வைங்க. ஒரு மாடு, மனுசனுக்கு என்ன சாபம் கொடுக்கும்?

**கீதா:** புல்லா, வைக்கோலா, பருத்திக் கொட்டையா, புண்ணாக்கா பிறன்னு, மனுசங்களுக்குச் சாபம் கொடுக்கும். கோபம் தீர, மெல்லலாம் இல்லையா?

**கண்ணன்:** கடவுள், மாடுகளுக்குக்



கொம்பு கொடுத்திருக்கார். துரதிருஷ்டம், அதை மறந்துட்டுதுங்க, மாடுங்க.

**கீதா:** நாம் மறக்கடிச்சுட்டோம். நம்ம வசதிக்காக... *(மிக வேகமாக ஒரு லாரி கடந்து போகிறது. அது கடந்த பிறகு...)*

**கண்ணன்:** வேலை விஷயமா, என்ன முடிவு எடுத்திங்க?

**கீதா:** வேண்டாம்னு முடிவு பண்ணிட்டேன். அப்பாவுக்காகத்தான் யோசிச்சேன். குடும்பச் செலவுக்குச் சிரமமா இருக்கும்னு நினைச்சேன். அப்பாவே, என்னை ஆதரிச்சாங்க. உங்களையும் கேக்கச் சொன்னாங்க. கேக்கலாம்னு நினைச்சேன்.

**கண்ணன்:** கேக்கலியே...

**கீதா:** யோசிச்சுப் பார்த்தேன். சொந்த வாழ்க்கையில நாம் எடுக்கிற முடிவுக்கு, மத்தவங்க — அவங்க எவ்வளவு முக்கியமா இருந்தாலும் — ஆலோசனை வேண்டாம்னு நினைச்சேன். என் முடிவுக்கு, என் தீர்மானத்துக்கு நானே காரணமாக இருக்கணும். அப்பதான், எனக்கே ஒரு தன்னம்பிக்கை பிறக்கும்னு தோணிச்சு... தப்பில்லையே...

**கண்ணன்:** நிச்சயமா தப்பு இல்லை... உங்ககிட்ட எனக்கு ரொம்ப பிடிச்ச விஷயமே இதுதான். அதாவது... எப்பவும், நீங்க நீங்களாவே இருக்கிங்க...

*(அவர்கள் முன்னோக்கிப் போய்க் கொண்டு இருக்கிறார்கள்.)*

**காட்சி: 35**

**பகல்/அலுவலகக் கூட்ட அறை**

*பாத்திரங்கள்:* **கண்ணன், மேனேஜர் சாரதா ரங்கநாத், விற்பனைப் பொறுப்பை கவனிக்கும் அலெக்ஸ் ஜெயராஜ், விளம்பரப் பிரிவு மேலாளர் சுமா தங்கராஜ்**

*கான்ஃபரன்ஸ் ஹால் எனப்படும், கூட்ட அறை. வட்ட வடிவ மேசையில் அமர்ந்திருக்கிறார்கள். அவர்கள் தீவிரமாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்பது புரிகிறது. டீ, பிஸ்கட் பாத்திரங்கள் தீர்ந்தும், பாதி தீர்ந்தும் இருக்கின்றன.*

**சாரதா:** எப்படியாவது, அடுத்த ஆறு மாசத்துக்குள்ள இந்த சோப்பைக் கொண்டு போய்ச் சேர்த்திடணும், மக்கள்கிட்ட. எத்தனை வகையான விளம்பரம், என்ன மாதிரி பண்றதுன்னு உடனடியாக முடிவு பண்ணணும்.

**அலெக்ஸ்:** மாடல் நீரஜாவைக் குளிக்க வைச்சிடுவோம்... கொஞ்சம்... *(நிறுத்துகிறார்)*

**சாரதா, சுமா (ஏக காலத்தில்)** கொஞ்சம்? முடிங்க.

**அலெக்ஸ்:** நேச்சுரல் எஃபக்டில, நிறைய் நனைய வைக்கணும்... அதாவது பார்க்கிற மாதிரி பண்ணணும்...

**சுமா:** ஷூமீன்... தாராளமா...?

**அலெக்ஸ்:** எக்சாட்லி.. அதைத்தான் நான் சொல்றேன்.

**சுமா:** அதைத்தான் எல்லா விளம்பரப் படமும் செய்யுதே. எல்லாப் பெண்களும், தாராளமா குளிச்சுக்கிட்டுதானே இருக்காங்க. இப்போ, மனோரஞ்சித வாசனை வர்ற சோப்புக்கு, பாவம், மீனா, ஒருநாள் பூரா தண்ணியில நின்னா. வியாபாரம் என்ன ஆச்சு? சண்டி மாடு மாதிரி எழவே இல்லை. படுத்தே கிடக்குது.

**கண்ணன்:** ஆக. இதிலேந்து தெரியற பாடம், ஒரு லட்சணமான பெண்ணைக் குளிக்க வைக்கிறதாலேயே, நம் பொருளை வித்துட முடியாது. ஒரு சோப், சினிமா நட்சத்திரங்களோட அழகு சாதன சோப்புனு சொல்லுது... ஒரு சோப், தான் இருக்குமிடம் ஆரோக்கியம் இருக்குமிடம்னு சொல்லுது. அது மாதிரி, ஒரு 'கான்சப்டை' - கருத்தைக் கண்டுபிடிக்கணும்.

**சாரதா:** ஓ.கே. என்ன புதுசா சொல்லப் போறே?

**அலெக்ஸ்:** நம்ம சோப் சார்சைக் குணப்படுத்ாது.

**சாரதா:** தலைவலியைக்கூட.... அதையும் சேர்த்துக்கோ.

**சுமா:** புத்துணர்ச்சி கூடத் தராதா?

**அலெக்ஸ்:** நல்லா முங்கிக் குளிச்சா, புத்துணர்ச்சி வரும். அரை பக்கெட்ல, காக்கா குளியல் குளிச்சா, என்ன புத்துணர்ச்சி கிடைக்கும். சோப்புக்கும் புத்துணர்ச்சிக்கும் என்ன சம்பந்தம்?

**கண்ணன்:** சோப்புக்கும் நுரைக்கும், வாசனைக்கும் சம்பந்தம் இருக்கு.

**அலெக்ஸ்:** நீரஜா குளிக்கக் கூடாதுங் கறியா?

**கண்ணன்:** அது அவங்க விருப்பம்... சோப், குளிக்க உபயோகப்பட்ற சமாசாரம் தான். அதுக்காக நீரஜா, ஆத்துலயும்

# செல்ஃபோன் த்ரில்

டெல்லியிலுள்ள பல செல்போன் உரிமையாளர்களுக்குச் சமீபத்தில் ஓர் இன்ப அதிர்ச்சி. அவர்கள் எந்த இடத்தில் இருக்கிறார்கள் என்பதை செல்ஃபோன் தெரிவித்தது. "காரில் போகும்போது இந்த இடங்களின் பெயர்கள் மாறிக் கொண்டே போவதைப் பார்க்க மிகவும் த்ரில்லாக இருந்தது" என்கிறார்கள் சம்பந்தப்பட்டவர்கள். விரைவிலேயே கடக்கும் இடத்தின் மிக அருகிலுள்ள உணவகம் எது, தியேட்டர் எது என்பதையெல்லாம் கூட தெரிவிக்கப் போகிறார்களாம்!

- சுல்லு



அப்படியே என் ஆளு தியேட்டர் வாசல்ல நிக்கறாளானு பார்த்துச் சொல்லுங்க, ப்ளீஸ்!

படம்: ஸ்ரீஹரி

குளத்திலயும் குளிக்கணும்கிற அவசியம் இல்லை. அதைத்தான் எல்லாரும் பண்றாங்களே!

**சுமா:** சரி. நீ புதுசாக் குளி.

**கண்ணன்:** நம்ம பலம், முதல்ல இதன் விலை ரூபாய் பத்து, வாசனை பரவாயில்லை. சட்டப்படியான சேர்மானம் எல்லாம் இருக்கு. அதோடு, இந்தியத் தயாரிப்பு. பன்னாட்டுக் கம்பெனிக்கு ஏஜெண்ட் இல்லை, நாம். மத்திய தர குடும்பங்களுக்கும், கீழ் மட்டக் குடும்பத்தார்க்கும் இது வசதியான சோப். நடிகை சிம்ரன், இதுக்காகக் குளிக்க வேணாம். மத்திய தர குடும்பத்தார், பொதுவாக அப்பா, அம்மா, குழந்தைகள் எல்லாரும் ஒரு சோப்பைத்தான் உபயோகப்படுத்தறாங்க. அதுதான் அவங்களுக்குக் கட்டுப்படியாகும். அதுதான், நம்ம விளம்பரத்தோட மைய விஷயமா இருக்கணும்.

**அலெக்ஸ்:** அப்போ, நீரஜா?

**சுமா:** நமக்காகக் குளிக்க வேணாம்.

**அலெக்ஸ்:** நம்ம போட்டோகிராஃபர் ரொம்ப ஏங்கிடுவான்டா... பெரிய மாடலை, இப்பத்தான் எடுக்கப் போறோம்னு. கனவுகள்ள இருக்கான்.

**சாரதா:** வேற வாய்ப்பு வராமலா போயிடும்?

**சுமா:** அப்போ, எப்படி கண்ணா? என்ன ஐடியா வெச்சிருக்கே?

**கண்ணன்:** பெண்ணும் பையனும் அப்பாகிட்ட சொல்றாங்க... 'அப்பா. நீ சொல்றபடி நாங்க நடந்துக்கறோம். படிக்கிறோம். டீ.வி பார்க்கிறதில்லை. விளையாடறோம். எங்க குளியல் விஷயத்துல, நாங்க சொல்றதைத்தான் நீ கேக்கணும். எங்களுக்கு இந்தச் சோப்புதான் வேணும். கட் பண்ணா, குளிச்சிட்டு டிரஸ் பண்ணிக்கிட்டு, பள்ளிக்கூடம் போறாங்க...

**சாரதி:** குட், ஐடியா ஓ.கே. இதை டெவலப் பண்ணணும்பா, நீங்க என்ன நினைக்கிறீங்க?

**சுமா:** கான்சப்ட் நல்லா இருக்கு. மேடம், ஒரு திருத்தம். அப்பாகிட்ட சொல்லாமே, அம்மாகிட்ட சொன்னா என்ன?

**அலெக்ஸ்:** தெரியும்.

**சுமா:** என்ன தெரியும்?

**அலெக்ஸ்:** நீங்க ஒரு பெண்ணியவாதின்னு.

*(ஆம் என்பது போலத் தலையசைக்கிறான் சுமா.)*

**கண்ணன்:** நானும் அதை யோசிச்சேன், மேடம். நம்ம நாட்டுல, சம்பாதிக்கிற பெண்களுக்குச் செலவு பண்ற சுதந்திரம் இருக்கா? சம்பளக் கவரைப் பிரிக்காமே கொடுக்கிற பெண்டாட்டிகளைத்தான் புருஷர்கள் விரும்பறாங்க.

**சுமா:** அது மட்டுமா, கண்ணன். வாயைத் திறந்து கருத்து சொல்லக்கூட அனுமதிக்கிறதில்லையே, புருஷன்.

**கண்ணன்:** அதுக்குப் பின்னால, இருக்கிற மனத்தத்துவம்தான் முக்கியம். அதாவது, கருத்துச் சொல்ல, மூளை இருக்கணும். மனைவிக்கு மூளை வேணாம்னு நினைக்கிறான், கணவன்.

**சுமா:** அவனுக்கே அது இல்லை யேப்பா...

**கண்ணன்:** அதனாலதான் அவளுக்கும் வேணாம்னு அவன் நினைக்கிறான். *(சிரிக்கிறார்கள்)*

(தொடரும்)



**நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர்**
**நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்**
**எல்லா ஆஸ்தீக பக்த கோடிகளுக்கும்**
**சிரம் தாழ்த்தி சமர்ப்பிக்கும்**
**விண்ணப்பம்**

தற்பொழுது நடந்துக் கொண்டிருக்கும் ஸ்ரீ பைரவ சாய் ஆலய திருப்பணி முழுவதும் சில மாறுதலகளுடன், வர்ண பூச்சுகள் செய்து புனருத்தாரணம் வருகிற ஆகஸ்ட் அல்லது செப்டம்பர் மாதத்தில் நடக்க இருப்பதால் இதனுடைய மொத்த மதிப்பீடு செலவு குறைந்த பட்சம் ரூ.10 லட்சமாக கணக்கிடப்படுகிறது. நாங்கள் இருகரம் கூப்பி வேண்டிக் கொள்வது, பக்தர்கள் யாவரும் மிக தாராளமாக பெரிய அளவில் நன்கொடை அளித்து திருப்பணியை சிறப்பாக முடிக்க உதவுமாறு வேண்டுகிறோம்.

இது நாள் வரை தினம் குறைந்த பட்சம் இருபது நபர்களுக்கு அன்னதானம் அளித்து வரும் திட்டத்தை விரிவு படுத்த வேண்டி அதற்குண்டான வைப்பு நிதிக்கு இடமளிக்க பக்த கோடிகள் அனைவரும் ஒன்று சேர்ந்து அவரவர் சக்திக்கேற்ப பணமாகவோ அல்லது காசோலையாகவோ அனுப்பித்து கீழ்க்கண்ட திட்டங்களை பரிபூரணமாக பூர்த்தி செய்ய பக்தர்களை ஒத்துழைக்குமாறு வேண்டிக் கொள்கிறோம்.

**தியான மண்டபம் விரிவுப்படுத்துதல் :** தியான மண்டப மட்டுமே 1.25 லட்சங்கள் ஆக கணக்கிடப்பட்டு இருப்பதால் தாராளமாக நன்கொடை அளித்து உதவி செய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

எல்லா மத பக்த கோடிகளுக்கும் ஓர் நற்செய்தி திரு. பாபாவின் கட்டளைப்படி மேற்படி திருக்கோயிலின் வளாகத்திற்குள்ளே ஒரு சர்வ மத வேத பாராயண மண்டபம் அமைக்கப்பட்டு, அதில் குரான் ஓதும் தொழுகை மண்டபமும் ஒரு கிறிஸ்துவர்களின் பிரார்த்தனை அறையும் உருவாக்க உத்தேசிக்கப்பட்டு உள்ளது. சர்வமத ஜனங்களும் பயனடைய சீரடி பாபா எல்லா மதத்தின் குறிக்கோள் ஒன்றே என்று தான் அவதரித்தபடியால் அவருடைய திட்டங்களை பூர்ணமாக உருவாக்கி தர பக்தர்களை வேண்டிக் கொள்கிறோம்.

எல்லா மத பக்த கோடிகளும் பரிபூர்ண ஒத்துழைப்பு நல்கி நிதி / பொருளுதவி செய்து மேற்கண்ட திட்டங்களை பூர்த்தி செய்யுமாறு வேண்டுகிறோம்.

இந்த ஆலயத்தின் தனி சிறப்பு ஷீரடி பாபா ஸ்ரீ ஆஞ்சனேயர் ரூபத்தில் ஆபத் சகாய யோக நிலையில் பிரதிஷ்டை பண்ணி முக்காலமும் வழிபாடு நடந்து வருகிறது. இந்த ஆஞ்சனேயர் மிகவும் சக்தி வாய்ந்தவராக இருப்பதால் எல்லா வித சங்கடங்களையும் நிவர்த்தி செய்கிறார் என்பதில் ஐயமில்லை.


**பணம் / காசோலை அனுப்ப வேண்டிய முகவரி :**
**ஸ்ரீ பைரவ ஸாயி திருக்கோயில் அறக்கட்டளை.**
பிளாட் எண்.6, பாரத் நகர் மெயின், மேடவாக்கம்
ஹைரோடு, மடிப்பாக்கம், சென்னை - 600 091.
போன் : 044 - 22476833. www.bhairavasai.org


மேற்படி புனருத்தாரண நிகழ்ச்சியின்போது புதியதாக நிர்மாணிக்கப்படும் குரான் பாராயண மண்டபம் திறப்பு விழாவிற்கு நமது பாரத தேசத்தின் மேன்மை மிகு ஜனாதிபதி திரு. **ஏ.பி.ஜே. அப்துல் கலாம்** அவர்களை அழைக்க உத்தேசித்துள்ளோம்.

உங்கள் நன்கொடைகளை கீழ்க்கண்ட கணக்கு எண்.11412/39 இந்தியன் வங்கி, மடிப்பாக்கம் கிளை, மடிப்பாக்கம், சென்னை - 600 091 என்று காசோலையில் A/c payee என்று எழுதி அனுப்பவும். உங்கள் நன்கொடைக்கு வருமான வரி விலக்கு under section 80 G March 2006 வரை அமுலில் உள்ளது.

இப்படிக்கு
ஷீரடி சாய்தாசன் (ஜி. மீனாட்சி சுந்தரம்)
மற்றும் நிர்வாக உறுப்பினர்கள்.

# அக்னிசர்மா பக்கம்

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்:** உங்க ராசிநாதன் செவ்வாய் பதினொன்றில் லாபஸ்தானத்துல சஞ்சாரங்கறதால எந்தக் காரியத்துலேயும் துணிச்சலா இறங்கலாம். தெய்வீக ஈடுபாடு அதிகரிக்கும். பொறுப்புகள் கூடும். பெரியவங்க பாராட்டு கிடைக்கும். சுயமா வியாபாரம் பண்றவங்களுக்கு எதிர்பாராத அனுகூலம் உண்டு.

**ரிஷபம்:** உங்க ராசிநாதன் சுக்ரன் ஜென்ம ராசியில் ஆட்சி பெற்று, புதன், சூரியன், ராகுவோட கூடி இருக்கறதால தாராளமான பணவசதி கிடைக்கும். புதியவங்க அறிமுகம், இதுவரை தாமதமாகி வந்த காரியங்களில் அனுகூலம், தெய்வபலம் ஆகியவை கிடைக்கும். எதிர்ப்புகள் மாறும். சிலருக்கு இடமாற்றம், பதவி உயர்வு கிடைக்க வாய்ப்பிருக்கு.

**மிதுனம்:** உங்க ராசிநாதன் புதன் 12ல் மறைந்து, சூரியன் சுக்ரனோடு கூடி சஞ்சாரங்கறதால எதிர்ப்புகள் விலகும். பணவசதி தாராளமா கிடைக்கும். அலுவலகத்தில் சந்தோஷமான நிகழ்ச்சிகள் நடக்கும். பதவி உயர்வு, இடமாற்றம் உண்டாகும். வியா பாரிகளுக்கு நல்ல நேரம்.

**கடகம்:** குடும்ப ஸ்தானாதிபதி சூரியன் பதினொன்றில், லாபஸ்தானத்தில் சுக்ரன் புதன் ராகுவுடன் கூடி சஞ்சாரம் பண்றதால முக்கியமானவங்க ஆதரவு, தெளிவான மனநிலை, தெய்வபலம் கிடைக்கும். சின்னச் சின்ன பிரச்னைகள் குறுக்கீடுகள் வந்து இம்சை பண்ணும். இருந்தாலும் அதைச் சமாளிப்பீங்க.

**சிம்மம்:** உங்க ராசிநாதன் சூரியன் பத்தாம் இடத்தில் சுக்ரன், புதன், ராகுவுடன் சஞ்சாரங்கறதால சகல காரியங்கள்லயும் வெற்றியுண்டு. எதிர்ப்புகள் மறையும். மனசுல துணிச்சல் தன்னம்பிக்கை உண்டாகும். குடும்பத்துல இதுவரை இருந்து வந்த குழப்பங்கள் விலகும். பெண்கள் புதுசா நகை நட்டு வாங்குவாங்க.

**கன்னி:** உங்க ராசிநாதன் புதன் ஒன்பதாமிடத்தில் ஆட்சி பெற்ற சுக்ரனுடனும், சூர்யனுடனும் கூடி சஞ்சாரங்கறதால பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. தெய்வபலம், தெய்வீக ஈடுபாடு அதிகரிக்கும். அலுவலகத்தில் நல்ல திருப்பம் வரும். சிலருக்கு இடமாற்றம், ஊதிய உயர்வு கிடைக்கும். மறைமுக நேர்முக எதிர்ப்புகள் மறையும்.

**துலாம்:** உங்க ராசிநாதன் எட்டில் ஆட்சி பெற்று மறைந்து, சூரியன், புதன், ராகுவுடன் உங்கள் கிரகம் கூடி சஞ்சாரம் என்பதால் இது வரை எந்த முடிவுக்கும் வராம இழுத்தடிச்சுட்டிருந்த பணம் இப்ப வந்து சேரும். புதியவங்க அறிமுகம் கிடைக்கும். அவங்களால நன்மை உண்டு. உத்தியோகத்தில் குழப்பங்கள் விலகி உற்சாகமான சூழ்நிலை நிலவும்.

**விருச்சிகம்:** உங்க ராசிநாதன் செவ்வாய் நாலாம் வீட்டில் கேந்திரபலம் பெற்று சஞ்சாரங்கறதால எதிர்பாராத வகையில் பயணம் உண்டு. அதனால ஆதாயம் உண்டு. ஏழாம் இடத்திலிருந்து சனி எட்டாம் இடத்துக்கு மாறி இருக்கறதால சில திடீர் மாற்றங்கள் நடக்கும். எதிர்பார்த்துட்டிருங்க.

**தனுசு:** உங்கள் ராசிநாதன் குரு எட்டாம் இடத்தில் மறைந்து உச்சம் பெற்று இருக்கறதால எதிர்பாராத சந்திப்பு நடக்கும். பணம் பல வழிகள்ல இருந்து வரும். மனசுல தன்னம்பிக்கை பிறக்கும். இதுவரை இருநது வந்த பிரச்னைகள் விலகும். கடன் தொல்லைகள் குறையும்.

**மகரம்:** உங்க ராசிநாதன் சனி ஆறாமிடத்தில் பலம் பெற்றிருக்கறதால எதிர்ப்புகள் மறையும். எதிரிகள் ஓடிப் போயிடுவாங்க. இதுவரை இருந்து வந்த தடைகள் நீங்கும். பணவசதி தாராளமா இருக்கும். அலுவலகத்தில் குழப்பமான சூழ்நிலை நிலவும். யார்ட்டயும் அதிகமா வாய் கொடுக்காதீங்க.

**கும்பம்:** உங்க ராசிநாதன் சனி ஐந்தில், பூர்வ புண்ணியஸ்தானத்துல சஞ்சாரங்கறதால தெய்வபலம், தெய்வீக ஈடுபாடு அதிகரிக்கும். செவ்வாய் ஜென்மராசியில் இருப்பதால் அலுவலகத்தில் நல்ல திருப்பம் கிடைக்கும். வேலை தேடறவங்களுக்கு இது நல்ல நேரம். புதிய முயற்சிகள்ல தாராளமா இறங்கலாம்.

**மீனம்:** உங்க ராசிநாதன் குரு பூர்வ புண்ணிய ஸ்தானத்துல உச்சம் பெற்று இருக்கறதால நல்ல முன்னேற்றம் கிடைக்கும். அலுவலகத்தில் இருந்து வந்த குழப்பங்கள், பிரச்னைகள் மறையும். எதிர்ப்புகள் மாயமாகும். இதுவரை இருந்து வந்த கருத்து வேறுபாடு, விவாதம் நீங்கி சுமுகமா பழகுவாங்க.

ஜூன் 11 முதல் 17 வரை

பேரின்பமும், பெருவாழ்வும் தரும் புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் அன்னதானம் செய்து பித்ருக்களின் ஆசிகளைப் பெறலாம் !

## சகல தோஷ நிவர்த்தி ஸ்தலமான இராமேஸ்வரத்தில்

# ஆடி அமாவாசைநாளில்

## அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றி அன்னதானம் செய்வோம் வாருங்கள் !

ஜெகத்குரு காஞ்சி ஸ்ரீ பரமாச்சார்யர் அனுக்கிரகத்துடன் பேரின்பமும், பெருவாழ்வும் தரும் புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றி அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்குகொள்ள அன்புடன் அழைக்கிறோம் !

**பேரன்புடையீர் ! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ இராமநாத சுவாமி தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.**

பன்னிரெண்டு ஜோதிர்லிங்க ஸ்தலங்களுள் ஒன்றான இராமேஸ்வரத்தில் ஸ்ரீ பர்வதவர்த்தினி சமேத ஸ்ரீ ராமநாத சுவாமி உடனிருந்து அருள் பாலிக்கிறார். மூர்த்தி, தீர்த்தம், தலம் மூவகையாலும் இராமேஸ்வரம் சிறப்புற்று சிவ விஷ்ணு ஸ்தலமாக பிரகாசிக்கிறது. மாங்கல்ய தோஷம், புத்திர தோஷம், செவ்வாய் தோஷம், நாக தோஷம் போன்ற எல்லாவிதமான தோஷங்களுக்கும் பரிகாரத்தலமாக இராமேஸ்வரம் விளங்குகிறது. இத்தகைய சிறப்பு மிக்க புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நேரில் சென்று அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றி அன்னதானம் செய்ய இயலாத அன்பர்களுக்காக, "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" மூலம் அன்னதானத் திருப்பணி நடைபெறுகிறது. புண்ணிய பூமி இராமேஸ்வரத்தில் ஏழைகளுக்கும், அடியார்களுக்கும் அன்னதானம் அளிக்கும் பணியிலும், குடும்பம் நலம் பெற அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றும் பணியிலும் , நாமும் பங்கு கொண்டோம் என்ற ஆத்ம திருப்தியை அடைய இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்.

தங்கள் சார்பாக அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றி அன்னதானம் செய்ய தங்களால் இயன்ற நன்கொடையை அனுப்பலாம்.

- ரூ.500- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஒரு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு வருடங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கும், அக்னி தீர்த்தத்திற்கு தீபம் ஏற்றுவதற்கும் நன்கொடை அனுப்புவோர், விரும்பும் மாதத்தில் அமாவாசை தினத்தில் இராமேஸ்வரத்தில் அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றி அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ. 1000, ரூ. 5000 அனுப்பும் அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் பூஜிக்கப்பட்ட "கோடி தீர்த்த சொம்பும்" வலம்புரி சங்கும் ஸ்ரீ பர்வத வர்த்தினி சமேத ஸ்ரீ இராமநாத சுவாமி வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும். ரூ.5000 - அனுப்பும் அன்பர்களுக்கு ஆறு வருடங்களுக்கு அன்னதானம் செய்து "இராமலிங்க தீபமும்" 336 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள "ஸ்ரீமத் இராமாயணம்" புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு இராமேஸ்வரத்தில் நேரில் சென்று 'தர்ப்பணம்' செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு **"ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்"** மூலம் தர்ப்பணம் செய்யப்படுகிறது. பித்ருக்களை குறித்து இராமேஸ்வரத்தில் செய்யப்படும் தர்ப்பணம் செல்வம், கீர்த்தி, ஆயுள் , ஸ்வர்க்கம் முதலிய நன்மைகளை அளிக்கும். எதிரிகளை விலக்கும். தன் வம்சம் தழைத்தோங்கச் செய்யும். மறைந்த முன்னோர்களுக்கு தர்ப்பணம் செய்ய ரூ. 750- அனுப்பும் போது யாருக்கு தர்ப்பணம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம். மூர்த்தி, ஸ்தலம், தீர்த்தம் ஆகிய மூவகையாலும் சிறப்பு வாய்ந்த இராமேஸ்வரத்தில் தர்ப்பணம் செய்து கிடைத்தற்கரிய பேரருளைப் பெற்று க்ஷேமமாக வாழுங்கள்.

இராமேஸ்வரத்தில் அமாவாசை நாளில் அன்னதானம் செய்ய விரும்பும் அன்பர்கள் சார்பாக தாங்கள் என்ன வேண்டுதலுக்காக அக்னி தீர்த்தத்திற்கு தீபம் ஏற்ற வேண்டும் என்பதையும் உங்கள் பெயர், நட்சத்திரத்தையும் குறிப்பிட்டு எங்களுக்கு எழுதி அனுப்பினால் அதன்படி அமாவாசை நாளில் அக்னி தீர்த்தத்திற்கு தீபம் ஏற்றி தங்களுக்கு பிரசாதம் அனுப்பி வைக்கப்படும். தீபமேற்றும் பணியிலும், அன்னதானப் பணியிலும் ஈடுபட விரும்பும் அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque / D. D/ M. O மூலம் Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai-4 என்ற பெயருக்கு எடுத்து கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். பெருவாழ்வும், பேரின்பமும் அளிக்கும் புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நடைபெறும் [illegible] அன்னதானப் பணியிலும், அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றும் பணியிலும் பங்கு கொண்டு முன்னோர்களின் நல்லாசிகளை பெற உங்களை அழைக்கிறோம்.


ஸ்ரீ பர்வதவர்த்தினி தாயார்

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.**

Cheque / D. D/ M. O. அனுப்ப வேண்டிய முகவரி

## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street,(Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.

TEL : 2495 9302, E-mail:siva siva @ vsnl.net


ஸ்ரீ இராமநாத சுவாமி

ஆடி அமாவாசை அன்று பித்ருக்களுக்கு தர்ப்பணம் செய்வது இந்துக்களின் கடமையாகும்.

# ஒருமையுடன் திருவடி...

நிறைய புராணங்கள்; நிறைய புராணங்களில் நிறைய கதைகள்; நிறைய கதைகளில் நிறைய நிறைய கதாபாத்திரங்கள், தேவர்கள் - அரக்கர்கள் - அடிதடிகள் - தவங்கள் - வரங்கள் - வரங்களால் விளையும் விபரீதங்கள்!

அரக்கர்களை அழிக்க ஆண்டவன் அவதாரம் எடுப்பார். அரக்கர்களை ஏன் வளர விட வேண்டும்; அதற்குப் பின் ஏன் அவர்களை அழிக்க அவஸ்தைப் பட வேண்டும்?

இந்து மதப் புராணக் கதைகளில் பல அரக்கர்கள் தவம் செய்வார்கள்; சொல்லப் போனால் தேவர்கள் செய்யும் தவத்தை விடவும் அதிகமாகவே அரக்கர்கள் செய்வார்கள். ஆனாலும் அழிந்து போவார்கள். காரணம்?

தவம் செய்வது என்பது எளிமையானதில்லை. அதுவும் அரக்கர்கள் செய்த தவமெல்லாம் மிக மிகக் கடுமையானவை. இராவணன் பத்தாயிரம் ஆண்டுகள் தவம் செய்தான். ஒவ்வொரு ஆயிரமாவது ஆண்டின் முடிவிலும் தன்னுடைய ஒரு தலையைக் கிள்ளி, யாக நெருப்பில் போட்டு, இப்படியே பத்தாயிரமாவது ஆண்டின் முடிவில் பத்தாவது தலையைக் கிள்ளிப் போடும்போதுதான் பிரம்மா பிரத்யட்சமாகி வரங்கள் கொடுத்தார். சூரபத்மன் தவம் செய்தான். சிங்கமுகன், மகிஷன், இரண்யன், பண்டன், கம்பன், சுந்தன் - இப்படி எவ்வளவு பெரிய பட்டியல் போட்டாலும் அத்தனை அரக்கர்களும் கடும் தவம் செய்தவர்கள்தாம்! ஒருத்தனாவது லேசுபாசாகச் செய்ததாகத் தெரியவில்லை. கோடையில் நெருப்பில் நின்று, குளிர்காலத்தில் பனியில் நின்று, ஒற்றைக் காலில் நின்று, சாப்பிடாமல் நின்று... பசியை, தூக்கத்தை, உடலின் வலியை, உபாதையை, நோவை - இப்படி எல்லாவற்றையும் கட்டுப்படுத்த எவ்வளவு திடம் வேண்டும்? அவ்வளவு தூரம் சங்கடப்பட்டுத் தவம் செய்தவர்கள் ஏன் அழிந்தார்கள்?

வரங்களைப் பெற வருந்தி வருந்தித் தவம் செய்தவர்கள், வரங்கள் கிடைத்தவுடன் பிறரை வருத்தத் தொடங்கினார்கள். கையில் கிடைத்த பலத்தால் பிறரை ஆதிக்கம் செலுத்த முற்பட்டபோது, அந்த பலத்தையே ஒடுக்கக் கடவுள் அவதாரமெடுத்தார். ஆண்டவன் கொடுத்த வரம், ஆணவமாக மாறியவுடன், அதுவே வந்த வரம் திரும்பிப் போகவும் பாதை வகுத்தது.

உடலைக் கட்டுப்படுத்தத் தெரிந்தவர்களுக்கு மனத்தைக் கட்டுப்படுத்தத் தெரியாததால் ஏற்பட்ட சிக்கல்.

இந்து மதத்தின் புராணக் கதைகளைப் படிப்போர் பலர் கேட்கும் கேள்வி. 'ராக்ஷஸர்களும், அரக்கர்களும் எங்கே இருக்கிறார்கள்?' என்பதாகும். ராக்ஷஸர்களும், அரக்கர்களும் ஏதோ ஒரு தனி இனத்தையோ, குலத்தையோ சேர்ந்தவர்கள் அல்லர். இதைச் சொல்லுவதற்காக நம் புராணங்கள் ஒரு அழகான வழியைக் கையாள்கின்றன. காஸ்யபருக்கு இரண்டு மனைவியர். அதிதி என்பாள் ஒருத்தி; திதி என்பாள் ஒருத்தி. அதிதியின் புத்திரர்கள் தேவர்கள், திதியின் புத்திரர்கள் 'தைத்தியர்கள்' என்றழைக்கப்படும் ராக்ஷஸர்கள். (இது சக்களத்திச் சண்டையன்று.) ஒரே மூலக்கூறு என்றாலும் அடக்கம் மிகும்போது அது தேவத்தன்மை பெறும்; ஆணவம் மிகும்போது அதுவே அரக்கத்தன்மை பெறும் என்பதைத் தெளிவுபடுத்தக் கையாளப்பட்ட முறை இத்தகைய கதை.



டாக்டர் சுதா சேஷய்யன்



# இந்த நூற்றாண்டில் இந்து மதம் 10

மற்ற யாவற்றைக் கட்டுப்படுத்தினாலும் மனத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை யானால் பலமே பலவீனமாகிப் போகும் என்பதுதான் அரக்கர்களிடமிருந்து நாம் கற்கும் பாடம்.

ஐம்புலன்களை அடக்கினாலும் அகத்தை அடக்குவது அத்தியாவசியம்.

"ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்

எழுமையும் ஏமாப்புடைத்து", என்றார் வள்ளுவப் பெருந்தகையார். தவங்களிலேயே மகத்தான தவம், மனத்தைக் கட்டுப்படுத்து தலேயாகும். மனத்தைக் கட்டுப்படுத்தி நெறியில் வைப்பதே யோகம், விரதம், நியமம், பக்தி ஆகியவற்றின் நோக்கம்.

மனக்கட்டுப்பாட்டைப் பற்றி விளக்க சுவாமி விவேகானந்தர் ஒரு சின்னக் கதை சொல்வார்:



இரண்டு சாதுக்கள். இருவரும் தவம் செய்ய விரைந்தார்கள். இருவரும் புறப்பட்டு நதிக்கரையொன்றை அடைந்தார்கள். நதியின் இக்கரையில் ஒருவரும், அக்கரையில் ஒருவருமாகத் தவம் செய்ய அமர்ந்தார்கள். கடுந்தவம் புரிந்தார்கள். அவர்கள் இருவரின் தனித்தனித் தவத்தை மெச்சிய பிரம்மா இருவருக்கும் பிரத்யட்சமாக முடிவெடுத்தார். முதலில் இக்கரையில் இருந்தவரின் முன் தோன்றிய பிரம்மா, 'என்ன வரம் வேண்டும்?', எனக் கேட்டார். சற்று யோசித்த சாது, நிதானமாகத் தன் ஆசையை வெளியிட்டார். "எதிர்க்கரையிலுள்ள சாதுவுக்கு என்ன தருகிறீர்களோ, அதுவே எனக்கு இரண்டு மடங்கு வேண்டும்". வரத்தைக் கொடுத்துவிட்டு எதிர்க்கரைக்குப் போனார் பிரம்மா. அங்கிருந்த சாதுவிடமும் அதே கேள்வி. 'என்ன வரம் வேண்டும்?' 'அந்த சாதுவுக்கு வரம் கொடுத்துவிட்டீர்களா, ஐயனே?' 'ஆமாம்; கொடுத்தாகிவிட்டது. 'என்ன கேட்டார் அவர்?' இக்கரைக்காரர் கேட்டதை அக்கரைக்காரரிடம் சொன்ன பிரம்மா, தான் அப்படியே வரம் தர இருப்பதையும் தெரிவித்தார். 'என்ன என்பது இப்போது நீ கேட்பதில்தான் உள்ளது. கேள் மகனே!' அக்கரை சாது ஆர்வமாய்க் கேட்டார்: 'எனக்கு ஒரு கண்ணில் பார்வை போய்விட வேண்டும்."

இக்கரைக்காரரும் தான் கேட்டதைப் பெற்றார்; இவருக்கு இரண்டு கண்களும் போயின. அக்கரைக்காரருக்கு ஒரு கண் போயிற்று.

மனத்தைக் கட்டுப்படுத்தாமல் தவம் செய்பவர்களால் என்ன பயன்? அவர்கள் தங்களுக்குத் தாங்களே கூட பயனுடையவர்களாக இருப்பதில்லை.

அரக்கன் ஒவ்வொருவனும் வரம் கேட்டானே, ஒருவனாவது மனத்தைக் கட்டுப்படுத்தத் தெரிந்திருந்தானா? கேட்ட வரங்களைச் சற்று சிந்தித்துப் பார்ப்போமானால் தெளிவாகப் புரியும். அரக்கன் ஒவ்வொருவனும் தவம் செய்தபோது, அவனவன் முன்பு பிரம்மா வந்தார் அல்லது சிவபெருமான் பிரத்யட்சமானார்; அவனவன் அழைத்த தெய்வம் முன் வந்து தோன்றினார். தெய்வத்தை நேரில் கண்ட ஒவ்வொருவனும் என்னென்ன கேட்டான்?

இராவணன் மனிதர்களைத் தவிர மற்ற யாராலும் தனக்கு மரணம் நேரக்கூடாது என்றான்; மகிஷனோ, பெண்ணால் அன்றி யாராலும் தனக்கு மரணம் கூடாதென்றான்; இரணியனோ, மிக விரிவாகவே, இரவில், பகலில், உள்ளில், புறத்தில், விண்ணில், மண்ணில், அரங்கில், ஆயுதத்தில், தேவரில், மும்மூர்த்திகளில், மனிதரில், விலங்கில் எதிலும் தனக்கு மரணம் சம்பவித்துவிடக் கூடாது என்று சட்டம் படித்தான். இவ்வளவு தூரம் யோசித்து யோசித்து வரம் கேட்ட ஒருவனாவது "வாழுவதற்கு வரம் கேட்டானா?" அத்தனை பேரும் எப்படிச் சாகக்கூடாது என்று எண்ணினார்களே, எப்படி வாழுவது என்ற கிஞ்சித்தேனும் சிந்தித்தார்களா?



''சார்... உங்க ஆட்சியின் முக்கிய சாதனை என்ன?''

''ஏற்கெனவே இருந்த ஆட்சியை விட அதிக மனுக்களை வாங்கி கிடப்புலே போட்டிருக்கோமே!''

— தஞ்சை தாமு

உடலை வருத்தித் துன்பப்பட்டவர்கள், மனத்தைச் செழுமைப்படுத்த முடியாமல் போனதால்தானே இப்படி ஏடாகூடமாகக் கேட்டார்கள். இல்லையென்றால், பிறரை அழிக்க வழி தேடாமல், தாங்கள் ஒழுங்காக வாழ வழி தேடியிருப்பார்கள் இல்லையா?

ராக்ஷஸர்கள் என்றில்லை, மகரிஷிகளும் மனத்தைச் செம்மைப்படுத்த முடியாதபோது குன்றிப் போனார்கள் என்பதைப் பல வரலாறுகள் தெரிவிக்கின்றன. கோபப்பட்ட ஒவ்வொரு முறையும் துர்வாசரும், விசுவாமித்திரரும், ஜமதக்னியும் தங்கள் பலம் குன்றிப் போனார்கள். சாபம் கொடுத்தபோதெல்லாம் கௌதமரும் கௌசிகரும் தங்கள் தவப் பயனை இழந்தார்கள்.

ஐந்து புலன்களையும் மனத்தைக் கொண்டு நெறிப்படுத்தி, மனத்தையும், செம்மைப் படுத்துவதே தவமாக இருக்க முடியும்; இருக்க வேண்டும். மனத்திற்குக் கடிவாளம் போடாமல் புலன்களுக்கு ஆட்பட்ட ரிஷிகளும் முனிவர்களும் ஆற்றலில் குறைந்தார்கள்; மனக் குதிரை ஆட்டம் போட்டபடியெல்லாம் ஆடி, காமம், குரோதம், லோபம், மோகம், மதம் மாற்சரியம் ஆகியவற்றின் ஆணவத்தில் அடுத்தவர்கள் மீது ஆதிக்கம் செலுத்தி அழிக்க முற்பட்டவர்கள், அரக்கர்களாகி அவதாரங்களால் அடக்கியொடுக்கப்பட்டார்கள்.

மனக் கட்டுப்பாட்டுக்கு, இந்து மதம், அதீத முக்கியத்துவம் அளித்திருப்பதன் காரணமும் அவசியமும் என்ன?

கடவுளிடத்தில் ஒன்று வேண்டினார் ஆதிசங்கரர். "சிவப் பரம் பொருளே! குரங்கான என் மனத்தை, பக்திக் கயிற்றால் கட்டி, உன் கட்டுப்பாட்டிலேயே எப்போதும் வைத்திரு கபாலி!"

"கபாலின் பிக்ஷோமே ஹ்ருதயகபிம்
அத்யந்த சபலம்;
த்ருதம் பக்த்யா பத்த்வா சிவா
பவதீனம் குரு விபோ."

என்று சிவானந்தலஹரியில் தன் விண்ணப்பத்தை வைத்தார். "ஹ்ருதய கபிம்" என்றார். மனக்குரங்கு. அறிவியல் ரீதியாகவும் மனித மனத்தைக் குரங்கு என்று உவமிப்பதில் தவறில்லை. மனித மூளையின் அபரிமிதமான வளர்ச்சியில் பிரதானமானது அதன் சிந்தனைத் திறமையாகும்; அதிலும் முக்கியமானது, ஒன்றிலிருந்து ஒன்று என்று தொடர்புபடுத்திச் சிந்திக்கும் 'இணைப்புச் சிந்தனை' ஆகும். எங்காவது தெருவில் நடந்து செல்வோம். எதிரில் யாரோ ஒருத்தர் வருவார். அவரின் உடையைப் பார்த்தவுடன், ஏதோ ஞாபகம் வரும். அதிலிருந்து ஒன்று, அதிலிருந்து இன்னொன்று என்று இந்தத் தொடர் சிந்தனை ஓடி, கடைசியில் தொடுப்புக்கும் முடிப்புக்கும் சம்பந்தமே இல்லாமல் எதிலோ நினைவு நிற்கும். தொடர்பு இல்லாதது மாதிரித் தோன்றினாலும் தொட்டுத் தொட்டுத் தொடர்ந்ததன் விளைவுதான் இது! கிளைவிட்டுக் கிளை தாவும் குரங்கு போல் சிந்தனைக் கிளைகளில் தாவித் து(த)ள்ளாட்டம் போடும் மனக் குரங்கு.

அறிவியல் இதனை associative thinking

என்று அழைக்கிறது. இத்தகைய தொடர் சிந்தனையின் துணைகொண்டு புதிய வற்றை யோசிக்கவும் செய்யலாம்; எல்லை மீறினாலோ தடம் புரண்டாலோ, தடு மாறியும் போகலாம்.

சிந்தனை பலமே மனிதனின் சிதறிய பலவீனமாகவும் ஆகிவிடக் கூடாது என்று கருதிய சனாதன தர்மம், மனக் கட்டுப் பாட்டுக்கு மகத்தான இடம் தந்தது.

மற்ற புலன்களைக் கட்டுப்படுத்து தலுக்கும் மனத்தைக் கட்டுப்படுத்துதலுக் கும் வேறுபாடு உண்டு. துணியைக் கட்டிக் கண்ணையும் காதையும் மூடலாம்; இருட் டாக்கிவிட்டால் எதையும் பார்க்காமல் போகலாம்; காற்றுப் புகாமல் செய்தால் ஒலியை, முகர்ச்சியைத் தடுத்துவிடலாம். அதாவது, வெளித் தடுப்புகள் மூலமாக ஐந்து புலன்களையும் கட்டுப்படுத்தி விடலாம். ஆனால், மனத்தை? சிறைக்குள் போட்டுப் பூட்டினாலும், சிறகு விரிக்கும் மனத்தை அமிழ்த்தி விட முடியுமா?

**ம**னக்கட்டுப்பாடு என்பது சுயக்கட்டுப் பாடு. கணினிகள் கோலோச்சும் நவீன யுகத்தில் 'சுயக் கட்டுப்பாடு' எந்த அளவு முக்கியமானது?

வேண்டுமானால் கேள்வியை மாற்றிக் கேட்டுக் கொள்ளலாம். எந்தக் காலகட் டத்தில்தான் சுயக் கட்டுபாடு முக்கிய மில்லை? சாலையைக் கடப்பது தொடங்கி கம்ப்யூட்டரைப் பயன்படுத்துவது வரை வாழ்வின் அனைத்துக் கட்டங்களிலும் அது அவசியத் தேவையாகிறது.

**இ**றைவனை வணங்கும்போது மனம் ஒருமுகப்பட வேண்டும் என்று சொல் வார்கள். வள்ளல் பெருமானும் 'ஒருமை யுடன் நினது திருமலரடி' என்றே இறை வனிடம் குறிப்பிட்டார். மனம் ஒருமைப் படக் கட்டுப்பாடு கட்டாயம் தேவை. மனத்தை நெறிப்படுத்தி, அந்த நெறிக்குள் புலன்களை ஒருமைப்படுத்தினால், அதுவே 'தவம்!

**ஒ**ரு வழிப்போக்கன். நெடுந்தூரம் நடந்த களைப்பில் ஒரு மரத்தடியில் அமர்ந் தான். நிழலின் குளிர்ச்சியைக் கொஞ்சம் அனுபவித்தவுடன் மனம் அலை பாய்ந்தது. 'இப்போது மட்டும் இங்கே ஒரு ஜமுக் காளம் கிடைத்தால், கால் நீட்டிப் படுக்க லாம்' அவன் அமர்ந்திருந்தது ஒரு கற்பக விருட்சத்தின் அடியில் என்று அவனுக்குத் தெரியாது. கேட்டதையெல்லாம் தரக்கூடிய அந்த மரம், இவன் உள்ளத்தின் ஆசையைக் கேட்டவுடன் ஒரு ஜமுக்காளத்தை முன் விரித்தது. 'ஆஹா! ஒரு மெத்தையும் தலை யணையும் இருந்தால் எப்படியிருக்கும்!' சத்தமாகவே சொல்லிவிட்டான் அவன். உடனே அவையும் வந்தன. மெத்தையில் கால் நீட்டிப் படுத்த அவனுக்குக் கால்களின் வலி நினைவுக்கு வர, 'இப்போது ஒரு அழ கான பெண் அருகே அமர்ந்து கால் பிடித் தால் எப்படியிருக்கும்!' என்று எண்ணி னான். கற்பக மரம் கொடுக்காமல் இருக் குமா? எழில் மங்கை எதிர் வந்தாள்; பணிவிடை செய்தாள். 'இலேசாகப் பசிக் கிறதே. அறுசுவை உணவு கிடைத்தால் எத்துணை நலம்!' கலம் கலமாக உணவுப் பதார்த்தங்கள் குவிந்தன. வயிறார உண்டு, உடல் வலி நீங்க நிம்மதியாகப் படுத்திருந் தான் அவன். படுத்திருக்கும்போது பல நினைவுகள். காலை முதல் நடந்தவை யெல்லாம் நெஞ்சில் நடைபோட, மனக் குரங்கு, தாவித் தாவித் துள்ளத் தொடங்கி யது.



''பல்லக்கு ஏன் திடீர்னு கனக்குது?''
''நடு வழில இளவரசியோட காதலன் உள்ளே ஏறிட்டார்!''
— அம்பை தேவா

'இப்போது ஒரு புலி வந்து என்னை அடித்துவிட்டால் எப்படி இருக்கும்?'

எண்ணம் முழுமையாக முடிவதற்கு முன்னர்... பாய்ந்தது ஒரு புலி.

வசதிகள் வரலாம்; வாய்ப்புகள் வரலாம்; ஆனால், வசதிகளையும் வாய்ப்புகளையும் சரியாகப் பயன்கொள்ள, மனம் பண்பட் டால் மட்டுமே முடியும்.

(தொடரும்)



# குல்லு மல்லு

— கதிர்



ஏன் கும்பலா படியில நிக்கற... முன்னாடி போய்யா.
மல்லு... உன்னைத்தான் சொல்றாங்க... வா, முன்னாடி போலாம்.




உன் தொப்பையை ஏன்ய்யா என்கிட்ட காட்டுற...




சொன்னா கேளு... இடிக்காம நில்லு.




மல்லு.... இப்படியே ஒரு போட்டோ எடுத்துக்கலாமா...




பஸ்ஸே காலியாயிடுச்சு. இன்னும் என்ன வௌவால் மாதிரி தொங்கிட்டு இருக்க?
ஹி...ஹி... இது பேர் தொங்காஸனம்! ஃப்ரீ பஸ்பாஸை ரத்து செஞ்சு ஸ்கூல் பசங்களை தொங்கல்ல விட்டாங்களே... அதை சிம்பாலிக்கா காட்டறேன்....




ரைட். ரைட்!



சாட்சாத் ஆதிசங்கர ஸ்வரூபமாக, ஆன்மிகச் செம்மலாக நிறை வாழ்வு வாழ்ந்தவர் ஸ்ரீ காஞ்சி பரமாச்சார்யாள் ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள். அவரது ஜன்ம தினமான வைகாசி அனுஷத்தன்று அவர் பதம் பணிந்து சிந்தனைகளைப் போற்றுவோம்.

மஹா ஸ்வாமிகள் தொட்டுக் காட்டாத பொருளே இல்லை — அறிவியல் உண்மைகள் உட்பட. ஸ்ரீ ரா. கணபதி அவர்கள் தொகுத்துள்ள இந்த ஏழு தொகுதிகளே ஒரு மஹாசமுத்திரம். அந்த ‘தெய்வத்தின் குரலி’லிருந்து கொஞ்சம்...

**வைகாசி அனுஷம் - 13.6.2003**

## இளங்காளைகளுக்கு!

கட்டுப்பாடில்லாத காளை எல்லாரையும் முட்டிவிட்டுத் தானும் அடி, சூடு என்று வாங்காமலிருக்க ஏதேனும் பண்ணித் தானாகவேண்டும்.

ஆனபடியால், எப்படியோ ஓரப்படி இந்தக் காளைக்கு மூக்கணாங் கயிறு போட்டாக வேண்டும், அப்போதுதான் அது தனக்கும் உபயோகமாக, மற்ற பேருக்கும் உபயோகமாக உருவாக முடியும்.

மிருகஜாதிக் காளைக்கு வேறு மனுஷ்யர்கள்தான் மூக்கணாங்கயிறு போட வேண்டும். மனுஷ்ய ஜாதிக் காளைக்கும் கல்விக் கூடத்து ஆசிரியர்களும் வீட்டுப் பெரியவர்களும் அப்படிப் பண்ண வேண்டும்தான்.

ஆனால் அப்படி மட்டுமே முடித்து விட்டால் இந்தக் காளை மனுஷ்ய ஜாதியாக இருப்பதற்கு அழகில்லை, கௌரவ





மில்லை.

மனுஷ்ய ஜன்மா எடுத்ததற்கு அழகு, இந்தக் காளை ஸ்வயமாகத் தானேயும் கட்டுப்பாடு, அடக்கம் என்ற மூக்கணாங்கயிறைப் போட்டுக் கொள்வதுதான்.

தனக்கு மற்றபேர் மூக்கணாங்கயிறு போடும் போதும் முரண்டு பிடிக்காமல், இஷ்டப்பட்டு அதற்குக் காட்டிக் கொண்டு நிற்கவேண்டும்.

## தீவட்டி ஸலாம்!

**ம**ண்டிபோட்டு நமஸ்கரிப்பது இதர மதஸ்தர்கள் வழக்கம், நம்மிடையிலும் அந்த வழக்கம் இல்லாமலில்லை. அதோடு துருக்கர்கள் 'ஸலாம்' என்றும் பண்ணுகிறார்கள். கிறிஸ்துவர்களும் கையால் 'ஸல்யூட்' அடிக்கிறார்கள்.

ஸலாம், ஸல்யூட் இரண்டும் 'ஸல்' என்றே ஆரம்பிக்கின்றன. எங்கே பார்த்தாலும்

இப்படி ஜனப் பிரிவுகளுக்கிடையில் ஒற்றுமை இருப்பதைப் பார்த்தால் ஸந்தோஷமாயிருக்கிறது.

இன்னும் ஓர் ஒற்றுமையைக் காட்டுவதாக நம் மடத்திலிலேயே 'தீவட்டி ஸலாம்' என்று ஒன்று நித்யம் நடக்கிறது. தீபம் வைக்கிற ஸமயத்தில் ஜகத்துக்கே ஞான தீபமாக வந்த ஆசார்யாளின் பாதுகைகளுக்கு நமஸ்காரம் பண்ணி, மடத்தின் கணக்குவழக்குகளை அவருக்கு ஸமர்ப்பிப்பதாக வழக்கமிருந்து வருகிறது. அதற்கு 'தீப நமஸ்காரம்' என்பது யதோக்தமான பெயர்.

## பாலபிஷேகமும் தேனபிஷேகமும்!

சந்தனாபிஷேகம், க்ஷீராபிஷேகம் என்கிற மாதிரியே பல பேர் 'பாலாபிஷேகம்' என்கிறார்கள். அது தப்பு, 'பாலபிஷேகம்' என்று 'ல்'வைக் குறிலாகவே சொல்ல வேண்டும்.

'சந்தன', க்ஷீர' என்ற வார்த்தைகள் 'அ' காரத்தில் முடிவதால், அவற்றோடு 'அபிஷேகம்' என்று 'அ'காரத்தில் ஆரம்பிக்கும் வார்த்தைகளைச்





சேர்க்கும்போது இரண்டு குறில் 'அ' காரங்கள் சேர்ந்து ஒரு நெடில் 'ஆ'காரமாகி 'சந்தனாபிஷேகம்', க்ஷீராபிஷேகம்' என்று கூட்டு வார்த்தைகள் உண்டாகின்றன.

'பால்' என்கிற வார்த்தை 'அ' காரத்தில் முடியாமல் 'ல்' என்ற ஒற்றெழுத்துடன் முடிகிறது. அதோடு 'அபிஷேகம்' சேரும்போது ல்+அ என்பது குறிலான 'ல'ஆகத்தான் வரும் ஆதலால் 'பாலபிஷேகம்' என்றுதான் ஆகும். தேன்+அபிஷேகமும் இப்படியே தான் 'தேனபிஷேகம்' ஆகும்.

## ரங்கோலி...!

**கோ**லம் என்று ஒரு வார்த்தை சொன்னேன். இழைக் கோலம், மாவுக் கோலம் என்றும் போடுகிறோம். அதற்குப் பேரும் ரங்கவல்லிதான். பூர்வத்திலே

கொடி கொடியாக டிஸைன்கள் கலர்க் கலர் மாவுகளில் போட்டு வந்தார்கள். இப்போதும் அந்த வழக்கம் இல்லாமலில்லை.

அந்தக் 'கலர்க் கொடி'தான் 'ரங்கவல்லி'! 'ரங்கோலி' என்று பேச்சிலிருக்கிறதே அது. கும்பகோணத்தில் கோமளவல்லி, திருவல்லிக் கேணியில் வேதவல்லி என்கிற மாதிரி, கோவில்களில் மஹாலக்ஷ்மிக்கு 'வல்லி'ப் பேரே சொல்லும் வழக்கப் படி ஸ்ரீரங்கத்தில் தாயாராயிருக்கும் ரங்கநாயகியையும் 'ரங்கவல்லி' என்பார்கள்.

## வரி வசூல் பற்றி...

**வ**ண்டானது எப்படிப் புஷ்பத்துக்கு வலி தெரியாமல் தேனை எடுத்துக் கொள்கிறதோ, அப்படித்தான் ராஜா பிரஜைகளுக்குக் கொஞ்சங்கூட சிரமம் தெரியாமல், அவர்களுடைய மலர்ச்சி குன்றாமலே வரி வசூலித்து எடுத்துக் கொள்ள வேண்டும் என்கிறது சாஸ்திரம்.

இதை இன்னொரு உவமையால் இன்னும் அழகு





படுத்திச் சொல்லியிருக்கிறான் உவமைக்கே பெயர் பெற்ற காளிதாஸன்.

'ஸூர்யன் எப்படி முதலில் பூமியிலிருந்து ஜலத்தை உறிஞ்சிக் கொண்டு அப்புறம் அதை பூமிக்கே மழையாகப் பொழிகிறானோ, அப்படி திலீபன் பிரஜைகளிடமிருந்து வசூலித்ததைப் பிறகு அவர்களுடைய நலனுக்கேயான காரியங்களில் செலவிட்டான்' என்கிறான்.

## தாம்புக் கயிறு

'தாமோதரன்' என்றால் 'கயிற்றால் கட்டப்பட்ட வயிற்றை உடையவன்' என்று அர்த்தம். 'தாமம்' என்றால் கயிறு. 'கேஸ் பெட்டி', 'கேட்வாசல்' என்று ஒரே அர்த்தமுள்ள இரண்டு வார்த்தை

களைச் சேர்த்துச் சொல்கிற மாதிரி 'தாமக் கயிறு' என்று சொல்லிச் சொல்லித்தான் 'தாம்புக் கயிறு' என்று வந்து விட்டது.

தாமம் - கயிறு; உதரம் - வயிறு! 'கயிற்று வயிற்றனே' தாமோதரன்!

## அங்கச்சி யார்?

தமிழில் அங்கயற் கண்ணி என்று அம்பாளைச் சொல்வார்கள். 'அம்' என்றால் அழகிய, 'கயல்' என்றால் மீன்! மீன் போன்ற அழகிய கண்ணுள்ளவள் 'மீநாக்ஷி' என்று அர்த்தம். 'அங்கச்சி', 'அங்கச்சி', என்று மதுரையில் எந்தப் பெண்ணையும் கூப்பிடுவது இதனால்தான்.

## ராஜஸ்தானப் பாலை வனம்

இப்போது ஸஹாரா பாலை வனமாக இருப்பது ஒரு காலத்தில் ஸமுத்ரமாக இருந்த இடம் என்று ஜியாலஜிக்காரர்கள் சொல்கிறார்கள். உங்களுக்கு ராமாயணக் கதை தெரிந்திருக்கலாம். ஸகரன் என்ற



ராஜாவின் பிள்ளைகள்தான் பூமியை வெட்டிக் கொண்டே போய் ஸமுத்ரத்தை உண்டாக்கினார்கள் என்று அதில் சொல்லியிருக்கிறது. ஸகர புத்ரர்கள் வெட்டியதாலேயே அதற்கு 'ஸாகரம்' என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. ஸாகரம்



என்பதுதான் மருவி 'ஸஹாரா' என்று ஆகியிருக்கிறது என்று நினைக்கிறேன்.

இந்தியாவில் ராஜஸ்தானம் இப்படிப் பட்ட ஒரு பாலைவனமாகத்தான் இருக்கிறது. பாலைவனத்துக்கு ஸம்ஸ்கிருதத்தில் 'மருவாடிகா' என்று பெயர். இதனால்தான் ராஜஸ்தான்காரர்களை நாம் 'மார்வாடிகள்' என்கிறோம்.

## பிரும்மா எழுதியது

இப்போதுள்ள இந்திய லிபிகள் (எழுத்துக்கள்) எல்லாம் 'பிராம்மி'யிலிருந்து வந்தவைதான். என்றாலும் ஆதியிலிருந்த பிராம்மி லிபியைப் பார்த்தால் நமக்கு ஒன்றுமே புரியாது. அதனால் புரியாத விஷயத்தை 'பிராம்மி லிபி' என்று சொல்ல ஆரம்பித்தார்கள்.

அப்புறம் அது திரிந்து பிரம்மா நம் நெற்றியிலே எழுதியிருக்கிற 'பிரம்

மலிபி'யோடு ஒன்றாக்கப்பட்டுவிட்டது. இப்போது ஒன்றும் புரியாவிட்டால் 'பிரம்ம லிபி' என்று நாம் சொல்வது 'பிராம்மி லிபி' என்று தான் இருக்க வேண்டும்.

## பாலசந்திரன் யார்?

ஸமீபத்தில் ஃபாஷன் பெயர்கள் வர ஆரம்பிப்பதற்கு முன் சந்திரன் என்று தனிப் பெயர் வைக்கும் வழக்கம் தக்ஷிண தேசத்தில் இல்லை.... மொத்தத்தில் சந்திரன் மட்டுமில்லாமல், நவக்ரஹங்களில் ஸூர்யன் தவிர எவர் பெயருமே வைப்பது தென்னாட்டில் ஸம்ப்ரதாயமில்லை.

"தேய்வைக் காட்டும் பாலசந்திரன் பேரோ, பூர்ணசந்திரன் என்றோ கூடப் பேர் வைக்கும் வழக்கமில்லை....

...தற்போது நிறையவே அந்தப் பேர் வைப்பதாக இருக்கிறதே என்றால், இது வாஸ்தவத்தில் சந்திரன் பெயரே இல்லை.

வேடிக்கையாக இருக்கலாம். பாலசந்திரன் என்பது





சந்திரன் பேருமில்லை; அது இப்போது உச்சரிக்கிற மாதிரி, ஸ்பெல்லிங் போடுகிற மாதிரி BAALACHANDRAN-ம் இல்லை.

PHAALA CHANDRAN அதாவது PAAவையே அழுத்தி ஸம்ஸ்கிருதத்தில் இரண்டாவது PHAAவாக முதல் எழுத்தைச் சொல்ல வேண்டும். அதுதான் ஸரியான பேர். PHAALA என்றால் கேசத்தின் முன்பக்கம், PHAALA CHANDRAN என்றால் "கேசத்தின் முன் பக்கத்தில் சந்திரனை உடையவன்" சந்திரசேகரன், சந்திரமௌளி என்ற பேர்களுக்கு என்ன அர்த்தமோ அதுதான் 'PHAALA சந்திரன்' என்பதற்கும்...

## திருமகள் உறையும் இடங்கள்

**தா**மரைப் பூவின் உட்பக்கம், பில்வ இலையின் பின் பக்கம், ஸுமங்கலிகளின் வகிடு, பசுமாட்டின் பின்பக்கம், யானையின் மஸ்தகம்(தலை)_ ஆகிய ஐந்தும் லக்ஷ்மி நித்யவாஸம் செய்வதால் 'நித்யஸ்ரீ'யுடன் கூடிய மங்களமான இடங்கள்!

## அம்மாவின் பிள்ளை

**ஒ**ருத்தர் அம்மா – அப்பா இரண்டு பேருக்கும் புத்ரராயிருந்தாலும், லோகம் பூராவிலுமே வழக்கத்தில் அப்பாதான் குடும்பத் தலைவராகக் கருதப்படுவதற்கு

ஏற்ப 'இன்ன அப்பாவுடைய புத்ரர்' என்றுதான் சொல்வதாக இருக்கிறது.

...இந்த வழக்குக்கு மாறாக ப்ருஹதாரண்யக உபநிஷத்தின் முடிவுப் பகுதியில் (வம்ச ப்ராஹ்மணம்), லிஸ்ட் ஆரம்பத்திலிருந்து ரொம்ப தூரம் வரை ஒவ்வொரு ரிஷியின் பேரையும், அவர் 'இந்த அம்மாவின் புத்ரர், இந்த அம்மாவின் புத்ரர்' என்பதாகத் தாய்மார்களின் பேர்களை வைத்தே கொடுத்திருக்கிறது.

'இதென்ன இப்படிப் பண்ணியிருக்கிறதே?' என்பதற்குப் பதில் ஆசார்யாளின் பாஷ்யத்திலிருந்து தெரிகிறது. என்ன சொல்





கிறாரென்றால், "புத்ரன் குணவானாக இருப்பதற்கு ஸ்த்ரீயே – அதாவது அவனுடைய தாயாரே – ப்ரதானமான காரணம் என்பது வெகுவாகப் புகழ்ந்து சொல்லப்படும் விஷயம். ஸ்த்ரீ ஜாதிக்குள்ள அதே விசேஷத்தினாலேயே புத்ரன் விசேஷம் பெறுவதால்தான் இங்கே ஆசார்ய பரம்பரை இப்படிச் சொல்லப்பட்டிருக்கிறது" என்கிறார்.

## மாணவனை அடிக்கலாமா?

**ம**துரமாகப் பேசியும், ப்ரியமாக நடத்தியுமே சிஷ்யனை முன்னேற்றப் பார்ப்பதுதான் வழி என்று சொல்லியிருக்கிறது. 'ஸெளம்யா' என்று சிஷ்யனைக் குளிரக் குளிரக் கூப்பிடுவதிலிருந்து இந்த மாதுர்யம் தெரிகிறது.

சிஷ்யனை அடிக்காமலே சிக்ஷை சொல்லித் தரவேண்டும் என்று கௌதம ஸ்மிருதியில் இருக்கிறது. சிக்ஷை தருவது என்றாலே

தண்டனை தருவது என்று பிற்பாடு அர்த்தம் ஏற்பட்டிருந்தாலும், ஆதியில் போட்ட 'ரூல்' இப்படித் தான் இருக்கிறது.

ஆனாலும் தவிர்க்க முடியாமல் சில ஸமயங்களில் அடிக்கவும் வேண்டியிருக்கலாம்.

இந்த மாதிரி, அடிக்கும்படியாக நிர்ப்பந்தம் ஏற்பட்டால் கூட, சின்னதாக ஒரு கயிறு, அல்லது மூங்கில் கம்பால் தட்டலாமேயொழிய, சவுக்கு, புளியங்கொம்புகளால் வீறுவது என்பது கூடாது என்று 'மநுஸ்மிருதி' சொல்கிறது. முதுகில் மட்டும் தான் அடிக்கலாம். வேறே எங்கேயும் அடிக்கப்படாது. தலையில் ஒரு காலும் அடிக்கப்படாது என்று கட்டுப்பாடு செய்திருக்கிறது. தலையில் அடித்தால் பொறி கலங்கி விடக் கூடுமல்லவா?

## கொஞ்சம் வானியல்...

**எ**ந்தெந்த எலிமெண்டை எரித்தால் ஏழு வர்ணங் களில் ஒவ்வொன்றாக ஜ்வாலை வீசுமோ, அந்த எலிமெண்ட்கள் (மூலப் பொருள்கள்) எல்லாம் ஸூர்ய



மண்டலத்தில் இருக்கின்றன; அவை எல்லாம் சேர்ந்து எரிவதால்தான் மொத்தத்தில் அது கலரேயில்லாத சுத்த வெளிச்சமாயிருக்கிறது என்று ஸயின்ஸ் நிபுணர்கள் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

இந்த எலிமெண்ட் மட்டுமின்றி பூலோகத்தில் அதிகம் காண முடியாத ஹீலியம்' என்ற மூலப் பொருளும் ஸூர்யனில் இருப்பதாகக் கண்டு பிடித்திருக்கிறார்கள். லத்தீன் பாஷையில் 'ஹேலியோஸ்' என்றாலே ஸூர்யன் என்று அர்த்தம்.



ஸூர்யனை மையமாகக் கொண்டுள்ள நம்முடைய பிரபஞ்சத்தையே இதனால்தான் ஹீலியோ - ஸெண்ட்ரிக் என்று சொல்லுகிறோம். கடைசியில் இந்த ஹீலியம்' என்கிற வார்த்தை எங்கிருந்து வந்தது என்று பார்த்தால் சம்ஸ்கிருதத்திலிருந்துதான்! சம்ஸ்கிருதத்தில் 'ஹேலி'என்றால் ஸூர்யன்.

## பொய் என்னும் கேடு

**சா**தாரணமாக ஒரு தப்புச் செய்கிற

போது உங்களுக்கு என்ன தோன்றுகிறது? அது ஓர் அழுக்கு மாதிரி உங்கள் மனசையே உறுத்துகிறது. உடனே இந்த அழுக்கை யாரும் தெரிந்து கொண்டுவிடக் கூடாது என்று அதை மூடி மறைக்கத் தோன்றுகிறது.



நியாயமாக, தவறுதல் உண்டானவுடன் பிரார்த்தனை பண்ணினால், அந்தப் பிரார்த்தனையே சோப்பைப் போல் அந்தத் தப்பை அகற்றிவிடும். அப்படிச் செய்யாமல், தப்பை மற்றவர்கள் தெரிந்து கொள்ளாமல் மூட வேண்டும் என்கிறபோது, பொய் சொல்ல வேண்டியதாகிறது.

அழுக்கைத் தேய்த்துக் கழுவாமல் மூடி மூடி வைத்தால் சீழ் பிடித்துச் சிரங்காகிவிடும். அது மாதிரி, தப்பை மூடியவுடன் அது பொய் என்ற சிரங்காக ஆகிவிடுகிறது. உள்ளத்தை ரொம்பவும்



கெடுக்கிற பயங்கரமான சிரங்கு பொய்தான்.

## பெரியவாள் சொன்ன கதை - 1

**கோ**னார் போர்த்திய பீதாம்பரம்!

மாட்டின் முதுகில் ஏதாவது பட்டால் அது சிலிர்த்துக் கொண்டு முதுகில் சுழிசுழியாகப் பரவுமே, அதேமாதிரி ஒரு பெரியவர் ராஜ சபையில் சுழித்துக் கொண்டு காட்டினாராம்.

ராஜா பீதாம்பரம் போர்த்தினாராம்.

அதே சமயத்தில் ஒரு கோனார் இந்த வித்தைக்கு ஸபாஷ் போட்டுத் தன் மேல் போட்டிருந்த கிழிந்த கம்பளியை எடுத்து அவர் மேல்

போட்டானாம்.

அவர், ராஜாவின் பீதாம்பரத்தைவிட மாட்டோடேயே ஜீவனம் செய்கிற இந்தக் கோனாரின் கிழிசல் கம்பளிதான் விசேஷமானது என்றாராம்.

## பெரியவாள் சொன்ன கதை - 2

செருப்புத் தைக்கிற நுட்பம்!

ஆசார்யாளுக்கு எல்லாக் கலைகளும் தெரியுமா என்று பார்ப்பதற்காக ஒரு சக்கிலியன் பரீக்ஷை பண்ணினானாம்.

'செருப்புத் தைக்க வருமா?' என்று அவரைக் கேட்டானாம்.

உடனே அவர் ஊசியை மூக்கின் மேலே தேய்த்துக் கொண்டுவிட்டு வெகு நேர்த்தியாகச் செருப்பு தைக்க ஆரம்பித்து விட்டாராம்.

மூக்குத் தோல் மேல் ஊறும் ஒரு திரவம் ஊசியில் படுவதால் அது செருப்புக்குள் சுலபமாகத் துளைத்துக் கொண்டு போகும் என்பதால் சக்கிலியர் அப்படித்தான் தேய்த்துக் கொள்வார்களாம்.



அப்படியே பண்ணி அந்தத் தொழிலாளியிடம் 'ஸர்ட்டிஃபிகேட்' வாங்கினதில் ஜகதாசாரியர்களும் பெருமைப்பட்டார்களாம்.



## நாடகங்களில் சோக ரஸமா?

ஏற்கெனவே ஜனங்களுக்கு இருக்கிற கஷ்டங்கள் கொஞ்ச நஞ்சமில்லை. அதை மறப்பதற்காகத்தான் ஒரு பொழுது போக்காக நாடகம் பார்க்க வருகிறார்கள். இதிலே சித்திரித்துக் காட்டுகிற துக்கம், துக்கமாக இருக்கிறபோதே, அதற்குள் ளேயும் ஏதோ ஓர் ஆனந்தம் இருக் கிறதென்பது வாஸ்தவம்தானானாலும், ரொம்பவும் ரஸிகர்களாக இல்லாமல் சாமானியமாக இருக்கப்பட்டவர்கள் ஒரு நாடகம் பார்த்து முடித்து வீட்டுக்குத் திரும்பும்போது, அவர்களுக்குப் பழைய துக்கம் போதாது என்று புதுசாக ஒரு துக்கத்தைக் கொடுக்க வேண்டாம் என்ற அபிப்பிராயத்தில் எந்த நாடகமும் மங்களமாக முடிய வேண்டும் என்று சட்டம் மாதிரிப் போட்டு விட்டார்கள்.

அதனால் பழைய ஸம்ஸ்கிருத

நாடகங்களில் 'ட்ராஜெடி'யே கிடையாது; எல்லாம் 'காமெடி'தான்!

## ஷைலக் நிபந்தனை!

கல்யாணத்தை economic problem (பொருளாதாரப் பிரச்னை) ஆகப் பண்ணியிருப்பது அக்கிரமம். 'அக்கிரமம்' என்கிற வார்த்தையைத்தான் சொல்ல வேண்டும். அவரவரும் ஆணோடு பெண்ணோடு பிறந்தவர்கள் தானே? நமக்கும் பெண்கள் இருக்கிறார்கள். அப்படி யிருக்க, பிள்ளையகத்துக்காரன் என்று ஆனவுடன், 'வரதக்ஷிணை கொண்டா, பாத்திரத்தைக் கொண்டா, நகையைக் கொண்டா, வைரம் போடு, பட்டு வாங்கு' என்று ஷைலக் மாதிரி கண்டிஷன் போட்டு பெண் குழந்தைகளைக் கல்யாணமாகாமல் கண்ணைக் கசக்கும் படியாகப் பண்ணுவதை மன்னிக்கிறதற்கேயில்லை...

## 'ஜர்னலிஸ்ட்' பரமேச்வரன்!

தேவார ஏடு வைகையை எதிர்த்துக் கரையேறிய



இடம் இன்றைக்கும் பாண்டிய நாட்டில் 'திருவேடகம்' என்ற ஸ்தலமாக விளங்குகிறது.

அங்கே ஈச்வரனுக்குப் 'பத்ரிகா பரமேச்வரர்' என்று பெயர். இப்போது பேப்பர் என்றால் காகிதம் என்று ஒரு



அர்த்தம். 'மாகஸின்' (சஞ்சிகை) என்றும் அர்த்தம். 'மாகஸின்' என்பதைப் 'பத்திரிகை' என்கிறோம்.

நேச்சரின் பேப்பரான இயற்கைப் பத்திரிகை கரையேறின ஊரில் ஸ்வாமியே 'பத்ரிகா பரமேச்வரன்' என்று ஜர்னலிஸ்ட் பெயர் வைத்துக் கொண்டிருக்கிறார்.

'பத்ரம்', 'பத்ரிக்' என்றாலும் இலை என்றே அர்த்தம். இலையிலிருந்து வந்ததுதானே ஏடு? அதனால் ஏட்டுக்குப் பத்திரிகை என்று பெயர். இதுதான் அந்த நாள் காகிதமாக இருந்ததால் கடிதாசும் இதிலேதான் எழுதுவார்கள். அதனால் கடிதாசுக்குப் 'பத்ரம்' என்றே பேர் வந்துவிட்டது.

## தீட்டு கிடையாது!

ரதோத்ஸவத்திலே எந்த ஜாதியார், எந்த வியாதிஸ்தர் மேலே இடித்து மோதிக் கொண்டு தேர் இழுத்தாலும் விழுப்பு ஆகாது.

வீட்டுக்கு வந்தபின் ஸ்நானம் செய்யக் கூடாது என்று சாஸ்திரத்தில் இருக்கிறது. வடக்கே 'ஹோலி'யிலும் இப்படியே தீட்டுக் கிடையாதென்று வைத்திருக்கிறார்கள்.

'க்ளென்லினெஸ்...... ஸூக்ஷ்மாகத்தான் சாஸ்திரத்தில் ரூல்களைக் கொடுத்திருக்கிறது என்று வைத்துக் கொண்டு விட்டால், தேர்த் திருவிழாவுக்குப் போய் விட்டு வந்த பின்பு, கசகசவென்று இருக்கிறதே, குளித்தால்தான் க்ளென்லினெஸ்' என்று தோன்றி ஸ்நானம் செய்யப்போவோம். அது தப்பு!

சுத்தத்துக்கும் அனேக ஆசாரங்கள் உதவியாயிருக்கிறது என்பதால் சுத்தத்துக்காகவே எல்லா ஆசாரமும் என்று ஆக்கிக் கொள்வது சரியில்லை. 'Cleanliness is next to godliness' என்றுதான் மேல்நாட்டினரும் சொல்கிறார்கள். தெய்வாம்சமாக இருக்கிறதற்கு அடுத்தபடி - ஒரு படி கீழேதான் சுத்தமாயிருப்பது என்பது என்கிறார்கள்.

### நோயற்ற வாழ்க்கை...

முன்னெப்போதையும் விட, இப்போது அவன





வன் ஊரோடு, கிராமத்தோடு வேலை என்றில்லாமல், பக்ஷிகள் மாதிரி பூலோகத்திலே எங்கெங்கே வேலை உண்டோ அங்கேயெல்லாம் போகிறது என்று ஆகியிருக்கும் நிலையில் ஸ்வயம் பாகம் (தன் உணவைத் தானே சமைத்துக் கொள்வது) அத்யாவசியமாகிறது.

சுத்தத்துக்குச் சுத்தம், ஸத்வத்துக்கு ஸத்வம்; அதோடு வெந்ததும் வேகாததுமாக ஹோட்டல் சாப்பாடு சாப்பிட்டுச் சின்ன வயஸிலேயே அல்ஸர், அது-இது என்று அவஸ்தைப் படாமலும் இருக்கலாம்.

பொங்கல், சின்னதாக ரொட்டி, இதைவிட இலேசாக அடுப்புத் தணலிலே கோதுமை மாவுருண்டையைக் காய்ச்சி அதை அப்படியே வேகப் பண்ணுவது - என்று அவனவனும் பண்ணிக் கொண்டால் வியாதியே வராது. இப்போது கணக்கு வழக்கில்லாமல் வியாதிகள்தான் ஸர்வ வியாபகமாக இருக்கின்றன.

## தாமரையாள்!

'பத அரவிந்தம்' என்றால் திருவடித் தாமரை. ஸ்ரீ என்றால் மஹாலக்ஷ்மி. ஸ்ரீபதி- லக்ஷ்மி நாராயணன். ஸ்ரீபதிக்குத் தாமரைப் பாதம் இருப்பது மிகவும் பொருத்தம். ஏனென்றால் லக்ஷ்மிக்குத் தாமரைப் பூ ஸம்பந்தம் ரொம்பவும் ஜாஸ்தி!

*பத்மப்ரியே பத்மினி பத்ம ஹஸ்தே*
*பத்மாலயே பத்மதளாயதாக்ஷி*

என்று அவளை ஸ்தோத்ரம் செய்வார்கள். அவளுக்குத் தாமரைப் பூவிடம் ப்ரியம் அதிகம். ஆகையால் 'பத்மப்ரியே', 'பத்மினி' என்றால் தாமரைக்கொடி. மஹாலக்ஷ்மி இப்படித்தான் ஸௌகுமார்யத்தால் துவண்ட கொடியாக இருக்கிறாள். பெண்ணில் உத்தமமான லக்ஷணம் உடையவர்களை 'பத்மினி ஜாதி' என்பதே வழக்கம். 'பத்மினி' என்றால் பத்மங்களை (தாமரை) உடையவர் என்றும் அர்த்தம் செய்து கொள்ளலாம்.

அவள் தாமரைப் பூவில் அமர்ந்து கொண்டிருக்கிறாள். அதனால்தான் பத்மாலயே என்றது.

அவளுடைய நான்கு கைகளில் இரண்டில் இரண்டு தாமரைப் பூவை வைத்துக் கொண்டி ருக்கிறாள். ஆகையால் 'பத்மஹஸ்தே!'

அவளுடைய கண்கள் விரிந்த தாமரை இதழ் போல் இருக்கின்றன. ஆதலால் 'பத்ம தளாய





தாக்ஷி' (தளம் – இதழ்)

அவளுடைய முகமும் தாமரை போன்றது. இந்த ச்லோகத்தில் அதைச் சொல்லாவிட்டாலும் (லக்ஷ்மி) அஷ்டோத்திரத்தில் 'பத்ம முகி' என்று இருக்கிறது.

பத்ம ஸம்பந்தமாகவே அதிலும் அனேகம் பெயர்களைச் சொல்லியிருக்கிறது. தாமரைப் பூவாலேயே மாலை போட்டுக் கொண்டிருக்கிறளாம். 'பத்மமாலத் தாரா:' அவளுடைய திவ்யதேஹம் தாமரை போன்ற வாஸனை வீசுகிறதாம்' 'பத்மகந்திநி'

இவள் 'பத்மப்ரியா'வாகத் தாமரையிடம் ப்ரியம் வைத்துள்ளது போல் இவளிடம் ப்ரியம் வைத்திருப்பது யாரென்று பார்த்தால் அது நாபியிலேயே ஒரு தாமரையை மலர்த்திக் கொண்டிருகிறவனாக இருக்கிறது. 'பத்மநாபப்ரியா' என்று அஷ்டோத்தரம் சொல்கிறது.

## வீணாகும் நேரம் வித்யைக்கு ஆகட்டும்

எத்தனையோ வாழ்க்கை பிரச்னை எங்களுக்கு. ஆபீஸ் கார்யம், வீட்டுக் கார்யம் என்று அலைகிறோம், அவதிப்படுகிறோம். அது தெரியாமல், எங்கேயோ மடத்தில் உட்கார்ந்து கொண்டு 'அதைக் கத்துக்கோ, இதைக் கத்துக்கோ' என்று நீங்கள் உபதேசம் பண்ணினால் எப்படி?'' என்று கேட்கலாம். மனஸிருந்தால் எதையும் செய்துவிடலாம். இத்தனை வாழ்க்கை பிரச்னை இருந்தாலும் எத்தனை பொழுது அரட்டை, நியூஸ் பேப்பர், ஸினிமா, சீட்டுக்கட்டு இத்யாதியிலே போகிறது? இப்படி வீணாகப் போகிற காலத்தில் பாதி பொதுநலப் பணிகளுக்கு என்றும், பாதி ஏதாவது வித்யாப்யாஸத்துக்கு என்றும் வைத்துவிட்டால் போதும் - ஸமூஹப் பணிகளும் நடந்துவிடும், நம்முடைய வித்யைகளும் ப்ரகாசம் பெற்று விடும், நாமும் ப்ரகாசம் பெற்றுவிடுவோம்.

வேலை - வெட்டி, குடும்பத் தொல்லை என்று மன்றாடுபவர்களுக்கு 'டைவர்ஷன்' வேண்டாமா





என்று கேட்கலாம். ஆசையோடு மனஸ் ஈடுபட்டு ஏதாவது ஒரு வித்யை அப்யஸிக்க ஆரம்பித்தீர்களானால் உங்களுக்கே தெரியும், இந்த அப்யஸத்தைவிடப் பெரிய 'டைவர்ஷன்' எதுவும் இல்லையென்று. களைத்துப்போன மனஸுக்கு வேண்டிய உத்ஸாஹத்தை இவையே (வித்யைகளே) ஊட்டிவிடும். அப்படியும் ஒரேயடியாக நீங்கள் 'டைவர்ஷன்' என்பதை விட்டுவிடும்படிச் சொல்லவில்லை. அதுவும் கொஞ்சம் வைத்துக் கொள்ளுங்கள். ஆனால் நீங்களே ஆலோசித்துப் பார்த்து, "இப்படிப் பொழுதை வேஸ்ட் பண்ணுகிறோமே" என்று நினைக்கக்கூடியவற்றை விட்டுவிட்டு - இப்படி நிறைய அகப்படும் - அந்தப் பொழுதை இப்படியொரு pursuit-ல் (தேட்டத்தில்) செலவிட்டால் போதும், ஏதாவதொரு ஸ்வதேச வித்யையில் ஈடுபட்டுத் தேர்ச்சி பெற்றுவிடலாம், நம் முன்னோர்கள் போன வழி அதுதான்.

## பல தெய்வங்கள் ஏன்?

ஜன ஸமூஹத்துக்குப் பொதுவாக அநுபவங்களை நானாவிதமான ருசி பேதங்களில் நுகர்வதுதான் இயற்கை குணம். ஆஹாரம் பல சுவைகளில் இருக்கணும். ஒன்றே இருந்தால் திகட்டிப் போகிறது. கதை, நாடகம் என்றாலும் பல ரஸங்கள் இருக்கணும். பாட்டு என்றால் பல ராகங்களில், தாளங்களில் இருக்கணும்; விறுவிறுப்பாகவும்

வேணும், விளம்பமாகவும் வேணும். உபாஸனை என்று வரும்போது இப்படி நானா தினுஸாக உள்ள வைசித்ரியம் (விசித்ரத் தன்மை) வேண்டும். முடிவிலே ஸமாதி யோகம், வேறே கலப்பேயில்லாமல் ஒரே ஒரு உணர்வாக, 'ஏகப் பேருணர்வாக' என்பார்கள். அப்படி மனஸின் ஆட்டமே இல்லாமல் ஆக வேண்டுமென்றாலும், அது எங்கேயோ எப்போதோ எவருக்கோதான் லபிக்கிற ஸ்திதி. அந்த ஸ்திதிக்குப் போவதற்கே, அலை பாய்கிற இந்த மனஸை வைத்துக் கொண்டுதான் உபாஸனையை ஆரம்பிக்கும்போது அலை அலையாகப் பாய்ந்தாலும், பாய்கிறதெல்லாம் நம்மை ஸம்ஸாரத்தில் முழுக்கடிக்கிற அலைகளாக இல்லாமல், ஏதோ ஒரு தினுஸில், ஏதோ ஓர் அளவில் ஈச்வர ஸ்மரணத்தில் நனைப்பதாக இருக்கட்டும் என்றுதான் வைசித்ரிய ருசி கொண்ட மனஸுக்குப் பிடித்த மாதிரியே ஏக பரமேச்வரன் பல திவ்ய ரூபங்கள் எடுத்துக் கொண்டு பலவிதமான பலன் தருவது: பூஜா





பத்ததியையும் பலவிதமாகக் கொடுத்து, ஒன்றுக்கு (ஒரு தெய்வத்துக்கு) வில்வம், ஒன்றுக்குத் துளஸி, ஒன்றுக்கு வெல்லச் சீடை, ஒன்றுக்குக் கொழுக்கட்டை என்று வைத்திருப்பது எல்லாம்.

## தர்மம் காக்கும்

ஸ்ரீ ராமனுக்கு வனவாசத்தில் ஏற்பட்ட கஷ்டம், ஆபத்து எல்லாம் பெரியவை. ஊருக்குப் போகும் குழந்தைக்குத் தாயார் கட்டுச் சாதம் கொடுப்பதுபோல், ராமன் வனவாசம் செல்லும் போது கௌசல்யையும் செய்தாள். 'பதினான்கு வருஷம் கெடாமலிருக்கும் பக்ஷணம் எது? குழந்தைக்கு எதைத் தரலாம்?' என்று நிரம்ப ஆலோசித்தாள் கௌசல்யை. பிறகு, நிரந்தர பக்ஷணமான தர்மத்தைத்தான் கட்டிக் கொடுத்தாள்.

"ராகவா. தைரியத்துடனும் நியமத்துடனும் நீ பாதுகாக்கும் தர்மமே உன்னைப்

பாதுகாக்கும்" என்று சொல்லித் தர்மத்தை ராகவனுக்குத் துணை அனுப்பினாள்.

தர்மமே இறுதியில் ராமனுக்கு ஜயத்தைப் பெற்றுத் தந்தது. தர்ம மார்க்கத்தில் ஒருவன் இருந்தால் பிராணிகள் கூட அவனை ஆதரிக்கும்; அதர்மத்தில் விழுந்தால் உடன் பிறந்தவனும் எதிரியாகி விடுவான் என்பதை ராமாயணம் நிரூபிக்கிறது. ஸ்ரீ ராமனை வானரங்களும் ஆதரித்தன; ராவணனையோ சகோதரன் விபீஷணனும் விட்டு விலகினான்.

## மதம் என்னும் மருந்து

மதம் என்பது என்ன? ஆத்மாவுக்கு வந்திருக்கிற வியாதி தீருவதற்கு வைத்தியம் செய்வதுதான் மதம். ஒரு நோயாளிக்கு இன்ன வியாதி வந்திருக்கிறது, அது இன்ன மருந்தைத் தந்தால் சொஸ்தமாகும் என்பது வைத்தியனுக்குத்தான் தெரியும். தங்களுக்கென்று ஒரு பொருளையும் தேடிக் கொள்ளாமல்,



Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05*
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka.
Supplement to the Kalki issue Dated 15.6.2003



பரமத்தியாகத்துடன் லோகக்ஷேமத்தையே நினைத்த ரிஷிகள், தர்ம சாஸ்திரக்காரர்கள் அப்படித் தந்திருக்கிற மருந்துதான் நமது சநாதன தர்மம். மற்ற தேசங்களில் வேறு. வைத்தியர்கள் வேறு மதங்களை மருந்தாகத் தந்திருக்கிறார்கள். நம் உடம்புக்கு மருந்து தருகிற டாக்டரிடம் 'அந்த டாக்டர் அப்படி டிரீட்மென்ட் செய்கிறார், நீங்கள் இப்படிச் செய்கிறீர்களே!' என்றால் அவர் கேட்டுக் கொண்டிருப்பாரா? வைத்திய சாஸ்திரத்தில் பல தினுசுகள் உண்டு. ஒன்றில் கடும்பத்தியம் இருக்கும்; ஒன்று இலகுவாக இருக்கும். ஒன்றில் மருந்து கசக்கும்; இன்னொன்றில் தித்திக்கும். இதையெல்லாம் ஒன்றாக்க வேண்டும் என்று சொல்லாமல் அவரவரும் எந்த வைத்திய முறையை மேற்கொள்கிறார்களோ அதையே விடாமல் பின்பற்றினால் எந்த முறையிலும் சொஸ்தம் அடையலாம்.

நன்றி: 'தெய்வத்தின் குரல்' (வானதி பதிப்பகம்)

தொகுப்பு: சுப்ர.பாலன்

